MADRAS GOVERNMENT ORIENTAL MANUSCRIPTS SERIES
NO. 69








# UTTARA-RĀMĀYAṆA-NĀṬAKAM

# உத்தர ராமாயண் நாடகம்

EDITED BY
**T. CHANDRASEKHARAN**, M.A., L.T.,
*Curator, Government Oriental Manuscripts Library, Madras*

AND

THE STAFF OF THE LIBRARY

PUBLISHED UNDER THE ORDERS OF THE GOVERNMENT OF MADRAS

1960

MADRAS GOVERNMENT ORIENTAL MANUSCRIPTS SERIES
NO. 69








# UTTARA-RĀMĀYAṆA-NĀṬAKAM

# உத்தர ராமாயண நாடகம்

EDITED BY

**T. CHANDRASEKHARAN**, M.A., L.T.,
*Curator, Government Oriental Manuscripts Library, Madras*

AND

THE STAFF OF THE LIBRARY

PUBLISHED UNDER THE ORDERS OF THE GOVERNMENT OF MADRAS

**1960**

Price Rs. 6—25

# INTRODUCTION

The public are perhaps aware of the fact that the Government of Madras have launched upon a scheme of publication of rare manuscripts treasured in two premier institutions of this state, namely, the Madras Government Oriental Manuscripts Library, Madras and The Tanjore Maharaja Serfoji's Sarasvathi Mahal Library, Tanjore. Financial help has also been extended to Dr. U. V. Swaminatha Iyer Library, Adyar, Madras, for similar purpose. Though the publication of rare manuscripts was started by the Government of Madras as early as 1909, only 12 works were taken up for publication till 1942. Of these, the printing of 3 works has not yet been completed.

Only in the year 1949—50, a regular scheme for the publication of manuscripts was prepared and accepted by the Government of Madras under the MADRAS GOVERNMENT ORIENTAL SERIES. This scheme included the mauuscripts in all the South Indian Languages in which there are manuscripts in the Library. The selection of manuscripts was done by an Expert Committee appointed by the Government specially for this purpose. Till now 157 manuscripts in different languages have been printed. Of these, 35 manuscripts are from Tanjore Maharaja Serfoji's Sarasvathi Mahal Library, Tanjore and 2 from Dr. U.V. Swaminatha Iyer Library, Adyar. In addition, 3 manuscripts, two from this library and 1 from the Dr. U. V. Swaminatha Iyer Library, Adyar, are in the press.

While all the manuscripts under the Madras Government Oriental Series were edited by various scholars drawn from different learned institutions, the publication of manuscripts under the Madras Government

Oriental Manuscripts Series was resumed in the year 1950—51. All the manuscripts published under this Series before 1942 were in Sanskrit. But from 1950—51, they included the manuscripts in other languages also. These are edited by the Curator with the assistance of the Pandits in respective languages. Till now 60 works have been printed including the total number of 51 since 1951.

Since 1958—59 however, no fresh manuscripts were taken up for publication in both the Series. There were several proposals for the printing of manuscripts. Of these, the Government of Madras have now sanctioned the publication of the following 7 Tamil Manuscripts in Memorandum No. 81859/-E6/59-15, Education, dated 5—1—1960 communicated in Proceedings RC. No. 138-K2/60 dated 27—1—1960 of the Director of Pubiic Instruction, Madras.

## I. GOVERNMENT ORIENTAL MANUSCRIPTS LIBRARY, MADRAS.

1. Tani-p-Pāḍalkaḷ.
2. Kēraḷa Dēśa Varalāṟu.
3. Yāpparuṅkala Viṟutti (with Kuṟippurai).
4. Kaṭṭabomman Varalāṟu.
5. Paḷamoḷi-t-Tiraṭṭu.
6. Kalambaka-k Kottu.
7. Uttara Rāmāyaṇa Nāṭakam.

## II. DR. U. V. SWAMINATHA IYER LIBRARY, ADYAR, MADRAS.

1. Manuvijñānēśvariyam.
2. Śuddhānanta Bharatam.

Of the 7 manuscripts from this library, Paḷamoḷi-t-tiraṭṭu has been dropped as it was found to contain many archaic proverbs. The entire publication

has been recommended for aid from the Government of India under the scheme for the Development of Modern Indian Languages. It is also hoped that the Government of India aid will be forthcoming in due course. Since the amount has to be reimbursed from the Government of India, it was ordered that the expenditure on the scheme should be incurred before 31-3-1960. Though the time actually available for getting the manuscripts printed is less than 2 months the publication has been started in right earnest and every possible efforts are being made to complete the same before the stipulated time. There has, however, been one change in the scheme of publication as submitted by the Curator on account of the limited time available. Originally the above manuscripts were intended to be edited by outside scholars under the Madras Government Oriental Series but now they have been edited by the Curator himself with the assistance of the staff of the Library in the Tamil section, under the Madras Government Oriental Manuscripts Series.

On account of the great speed with which the press copies were prepared, edited and rushed through the press, a few mistakes might have crept in. It is hoped that the learned scholars who read the works will make necessary corrections, if any.

In this connection, I will be failing in my duty if I do not express my thanks to the Controller of Stationery and Printing, Madras, for scrutinizing the quotations of the private presses, for supplying the required paper for printing, for passing the printing bills from the presses in a very short time and for taking up the printing of the biggest of the six manuscripts in the Government Press itself.

This edition is based upon two Palm leaf manuscripts of this Library, one bearing No D. 476 which has been copied on paper and preserved under No R. 1492 and another bearing No D. 477.

Sriman V. S Krishnan, Tamil Pandit of this Library, was in charge of the present work Uttara-Rāmāyaṇa-Nāṭakam and my thanks are due to him for helping me in editing the manuscripts before giving them to the press. The Government of India have to be thanked for their kind grant to the Government of Madras for enabling the Government Oriental Manuscripts Library, Madras, to get printed thses invaluable manuscripts. The Rathnam Press, (Branch), also deserves my thanks for printing the manuscript neatly in a very short period of less than a month

Madras-5,
6—3—60

T. CHANDRASEKHARAN,
Curator.

ஸ்ரீ:

# முன்னுரை

நன்மையுஞ் செல்வமு நாளு நல்குமே
தின்மையும் பாவமுஞ் சிதைந்து தேயுமே
சென்மமு மரணமு மின்றித் தீருமே
இம்மையே ராமவென் றிரண்டெ ழுத்தினால்

என்பது இராம நாமத்தின் பெருமையை எடுத்தியம்பவந்த பாடலாகும். இப் பிறவியில் நல்ல செயல்களை ஒருவர் செய்தால், மறுமையில் அவர் மோட்சமாகிய இன்பத்தை அடைவார் என்பது பொதுவாக அனைவரும் அறிந்ததொரு செய்தியாகும். ஆயின், ராம என்னும் இரண்டு எழுத்தினை ஒருமுறை வாயினால் உச்சரிப்பதோ, மனத்தினால் நினைத்தலோ செய்தால் போதும்; இப் பிறப்பிலேயே பல பயன்களையும் பெறலாம். மேற்கண்ட பாடலில் ராம என்னும் இரண்டெழுத்தினால் ஏற்படும் பயன்கள் பின்வருமாறு கூறப்பெற்றுள்ளன :

நன்மை ; செல்வம் .இவற்றை நாடோறும் அளிக்கும். இல்லாமை, பாவம் இவை தேய்ந்து மறையும். பிறப்பு, இறப்பு ஏற்படா. எளிய முறை; இரண்டே எழுத்து. யார்தாம் இதனைச்செபிக்க முற்படார்? இதனை அறிவுறுத்தவே,

"கற்பா **ரிராம பிரானையல் லால்**மற்றுங் கற்பரோ" என்று பெரியோ ரருளினர். இராமன் என்னும் சொல்லின் பெருமையை நம் பெரியோர்கள் பலவிதமாக எடுத்தியம்பி யுள்ளனர்.

இங்ஙனம், நமக்கு உறுதி பயப்பதாய், நவில்தொறும் இன்பம் தருவதாய், அனைவராலும் போற்றப்படுவதாய் அமைந்துள்ள இராமன் என்னும் சொல்லினைப் பெயராகக்கொண்ட பெருந்தகையாளன் கோசல நாட்டையாண்ட வள்ளல் ஆவன். ஆயிரந்தலையுடை அனந்தன்மீது அறிதுயில் அமர்ந்துள்ள ஆதியம் பரம்பொருளே இராமனாக அவதரித்தவர். மானிடனாகத் தோன்றி, "தந்தைசொல் மிக்க மந்திர மில்லை" என்ற நீதி மொழிக்கு எடுத்துக்காட்டாக விளங்கிய உத்தமன் பெயரே இராமன் என்பது.

இராமன் என்ற சொல்லுக்கு, தனது குணநலன்களால் பிறரை மகிழச்செய்பவன் என்பது பொருள். இங்ஙனம் பல சிறப்புக்களையுடைய இராமபிரானின் சரிதத்தை ஆதிகவியாகிய வான்மீகி முனிவர் பெருங்காவியமாக வடமொழியில் தீட்டினர். வான்மீகிராமாயணம், கற்றோர் பலரும் போற்றும் சிறப்பு வாய்ந்தது. இதனைத் தழுவி வேற்றுமொழிகளில் இராமாயணம் இயற்றப்பட்டுளது. வான்மீகி முனிவர் இராமாயணம் இயற்றிய சிறப்பினை,

"வாங்கரும் பாத நான்கும் வகுத்தவான் மீகியென்பான்
தீங்கவி செவிகளாரத் தேவரும் பருகச் செய்தான்"

என்று கல்வியிற்பெரியராய கம்பநாடர் வியந்து போற்றுகின்றார்.

தமிழ்மொழியில் விருத்தப்பாக்களால் கம்பநாட்டாழ்வார் இராமாயணம் பாடியுள்ளார். இது, சொன்னயம், பொருணயங்களில் சிறந்து, கற்பனைச் சுவையும் இலக்கிய வளமும் செறிந்து அறிஞரால் பாராட்டப்பெறும் பெருநூலாகும். இது, வான்மீகி இராமாயணத்தைப் பின்பற்றியதாயினும், தமிழ்ப்பண்பாட்டுக்கு ஏற்ப அமைக்கப் பெற்றுள்ள நூலாகும்.

இராமசரிதையை விரிவாகக்கூறும் தமிழ்நூல் கம்பராமாயண மொன்றேயாகும். அரசகேசரி என்பவரால் செய்யுளுருவில் யாக்கப்பெற்ற "இரகுவமிசம்" என்பது, இராமன் குலமுதல்வர்கள் வரலாற்றிலிருந்து தொடங்கி, இராமனுக்குப் பின்பிருந்தவர்வரை கூறுகின்றது.

தமிழில் இராமகாதையைக் கீர்த்தனங்களாக (இசை தாளங்களோடு பாடப்பெறுவன) சீகாழி அருணாசலக் கவிராயர் என்பவர் பாடியுள்ளார். அது இராம நாடகம் எனப்படும். அருணாசலக் கவிராயர் ஒரு சிறந்த தமிழ்ப்புலவர். சீகாழித் தலபுராணம், சீகாழிக்கோவை, அனுமார் பிள்ளைத் தமிழ் முதலிய பல நூல்கள் இவரால் பாடப்பெற்றனவாம்.

இராம நாடகம் என்ற நூலில் பாலகாண்டம் முதல் உயுத்த காண்டம் முடிய ஆறு காண்டங்களையுள்ளன. ஒவ்வொரு காண்ட வரலாறும் கீர்த்தனைகளாகவும் விருத்தங்களாகவும் பாடப்பட்டுள்ளது. ஒவ்வொரு கீர்த்தனைக்கும் உரிய இராகத்தின் பெயரும் தாளத்தின் பெயரும் குறிக்கப் பெற்றுள்ளன.

இராமநாடகம் மிகவும் பெயர்பெற்ற நூலாகும். உத்தரகாண்டம் என்ற ஏழாவது காண்டம் இவரால் பாடப்பெறவில்லை. உத்தர காண்டத்துள் இராமன் இராவணனைக் கொன்று, அயோத்தி நகருக்கு மீண்டு, முடிசூடி அரசாண்டபொழுது நிகழ்ந்த செய்திகளெல்லாம் கூறப்பெற்றுள்ளன.

இந்தக் குறையை நீக்கவேண்டி, அருணசலக் கவிராயர் பாடாதொழிந்த உத்தரகாண்டத்தை அவருக்குப் பிறகு தோன்றிய **அனந்தர்** என்பவர் இராமநாடகக் கீர்த்தனைபோன்றே பாடியுள்ளார். இப்பொழுது வெளியிடப்பெறும் " உத்தர ராமாயண நாடகம்" (முதற் பாகம்) என்பது இராமநாடகம் போன்று கீர்த்தனங்களும் விருத்தங்களும் கொண்டதாகும். இந்நூலில், இராகவனுக்கு, அகத்தியர் கூறும் முறையிலே, இராவணன், கும்பகருணன் முதலான அரககர்களது பிறப்பு, வரலாறு ஆகியன கூறப்பெற்றுள்ளன.

இராவணனுக்குச் சாபம் ஏற்பட்டது, கும்பகருணன் என்றும் மீளாத்துயிலில் ஆழ்ந்திருக்க வரங்கேட்டல், மேகநாதன் என்னும் இந்திரசித்தின் வரலாறு, குபேரன் சரிதை, இலங்கை நகர் அமைக்கப்பட்டமை, சூர்ப்பனகை கணவன் கொல்லப்பட்டமை, சீதாப்பிராட்டிக்கு ஏற்பட்ட அபவாதம், சீதாப்பிராட்டி வான்மீகி முனிவரின் ஆச்சிரமத்தில் வசித்தல், குசலவர் தோற்றம், வான்மீகி முனிவர் குசலவர்கட்குத் தாம் இயற்றிய இராமாயண காவியத்தைப் பாடக் கற்பித்தமை, இராமபிரான் அசுவமேத வேள்வி இயற்றல், குசலவர்கள் வேள்வி நடக்கும் இடத்துக்கு வந்து இராமாயண கானம் செய்தல், சீதாதேவி அங்குவந்து சபதம் செய்து தான் குற்றமற்றவள் என்று பலர் முன்னிலையில் உறுதிப் படுத்துதல், சீதாப்பிராட்டி ரசாதல உலகஞ் செல்லுதல், சீதையைத் தம்மிடமிருந்து பிரித்த பூமிதேவியிடம் சினங் கொண்டு இராமன் கோபித்தல், பிரமதேவன் இராமனின் சீற்றந் தணித்தல், சீதாதேவியைப் பிரிந்த இராமன் பொன்னால் சீதையுருவம் அமைத்துக்கொண்டு பதினாயிரம் ஆண்டு அரசாட்சி புரிந்தமை, குசலவர்க்கும் தமது துணைவர்களின் புதல்வர் கட்கும் அவரவர்க்கேற்ற அரசாட்சியை அளித்தல், இயமன் ஒரு அந்தணன் போன்று வந்து இராமனை ஒருவருமறியா வண்ணம் மேலுலகத்துக்கு அழைத்தல், இராமன் சரயூ நதிக்

கரையில் சென்று விண்ணுலகிலிருந்து விமானம்வர,அதிலேறிக் கொண்டு தன்னடிச் சோதிக்கு எழுந்தருளல், விபீஷணன் அநுமன் ஆகியோர் சிரஞ்சீவியாக வாழுமாறு இராமபிரான் அருளியது, அநுமன் வரலாறு முதலான பல செய்திகளையும் இந்நூல் தெளிவாகவும் விரிவாகவும் எடுத்தியம்புகின்றது.

இந் நூற்பாடல்கள் விருத்தங்களாகவும் கீர்த்தனங்களாக வும் உள்ளன என முன்பே கூறினேன். விருத்தங்களில் எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தமே மிகுதியாகப் பயின்று வருகின்றது. இடையிடையே அறுசீராசிரியச் சந்த விருத்தங் களும், எண்சீர்க்கு மேற்பட்ட கழிநெடில் விருத்தங்களும் இந்நூலில் உள்ளன. நேரிசை வெண்பாக்களும், கட்டளைக் கலிப்பாக்களும் சிறுபான்மை விரவி வந்துள்ளன.

கீர்த்தனம் என்ற பெயர் நூலில் கொடுக்கப்படவில்லை. ஆயினும் இராகம், தாளம் அமைத்து, கீர்த்தனங்களுக்குரிய இலக்கணங்களுடன் பாடப்பட்டிருப்பதால் இராமநாடகக் கீர்த் தனை போன்ற நூல் வகையில் இதனையும் சேர்க்கலாம்.

இந்நூலில் வந்துள்ள சந்த விருத்தங்களெல்லாம் படிப்ப தற்கு இன்பமாகவும், எளியனவாயும் உள்ளன. உதாரணமாக ஒன்றிரண்டினைக் காண்போம். இந்நூலின் தொடக்கத்தில் கூறப்பெற்றுள்ள கதைச் சுருக்கமாகிய சந்த விருத்தத்தில் இராமனின் பெருமையைக் குறிக்குந் தொடர்கள் மூன்று வருகின்றன. அதனை, மெல்லோசையும் வல்லோசையும் இயைந்து வருமாறு ஆசிரியர் அமைத்துள்ளார். அத் தொடர்கள் ;

"வளமையே கொண்டபதி துளபமூ தண்டபதி
வளருகோ தண்ட பதியே"

**(பக். 2 : கதைச் சுருக்கம் இறுதி வரி)**

என்பன.

இவற்றைப் படிக்குந்தோறும் நாம் நயமுணர்ந்து களிக் கின்றோம். குபேரனுக்குரிய நந்தனம் என்னும் சோலையி லுள்ள மரங்களை முறித்து, இராவணனும் அவனது படைகளும் அழித்தனர் என்ற செய்தியைக் குறிக்கும் பாடல் மரங்கள் முறிந்து விழுவன போன்ற ஓசையுடன் அமைந்துளது.

"நந்தன மென்றவ னத்து மரங்களை நாடிமு றித்திடவே
இந்தவி தங்கள்கு பேரன றிந்துமி ராவண னுக்குரைசெய்
சொந்தமி தென்றெரு சேதிகொ டுத்தொரு தூதைய
[னுப்பிடவே
வந்துமி லங்கையி லங்கவ னுக்குமிவ் வாறுகள் கூறுவனே."
(பக். 55.)

இப்பாடலைப் படிக்கும்பொழுதே நாம் மரங்கள் முறிந்துவிழும் ஓசையையும் காதால் கேட்கிறோம்.

இந்நூலில் வந்துள்ள உவமைகள் மிக்க நயமுடையவாயும் இடத்திற்குப் பொருத்தமானவையாகவும் உள்ளன. உலக வழக்கில் அடிப்பட்ட உவமைகளாயினும் இங்கு எடுத்தாளும் முறை மிகவும் சிந்திக்கத்தக்கது. சில உதாரணங்கள் காண்போம்.

திரிகூடப் பருவதத்தின் உச்சியிலே தேவேந்திரன் ஏவலால் பண்டு, தெய்வத்தச்சனாகிய விசுவகர்மன் இலங்கை யென்ற நகரத்தை யுண்டுபண்ணினான். இது தேவர்களுக்காக ஏற்படுத்தப்பட்டது. இராவணன் பிரமனிடம் வரங்கள் பெற்ற பிறகு, அரக்கர்களுடன் இங்குப்போய் நிலையாகத் தங்கிவிட்டான். இவனை எதிர்க்கத் தேவர்கள் அஞ்சினர். இச்செய்தி இந்நூல் பாடலொன்றில் நல்ல உவமையுடன் கூறப்பெற்றுள்ளது.

"கரையானும் புத்துக்கட்டப் பாம்புகுடிப் போம்போலே
காதக ராட்சதர்கள் வாசஞ்செய்தா ரப்பாலே"
(பக். 22)

கரையான் தான் வசிக்கப் புற்றுக் கட்டிற்று. ஆனால், பாம்பு அதனுள் குடியேறிவிட்டதாம். என்ன உரிமை! தேவர்களுக்காக அமைக்கப்பட்டுள்ள நகரத்தில் பாம்புபோன்ற கொடிய இராவணன் முதலான அரக்கர் குடியேறினர். உவமையின் நயம் அறிந்து இன்புறத்தக்கது.

இராவணன், கும்பகர்ணன் முதலியோர் கோர தவங்களைச் செய்து பிரமனிடம் வரங்கள் பெற்றனர். கும்பகருணனுக்கு அவன் விரும்பும் வண்ணம் வரங்கள் தந்தால் உலகுக்கே ஆபத்து எனத் தேவர்கள் அஞ்சினர். அதனால், பிரமதேவனிடம் சென்று வேண்டினர். பிரமனும், தேவர்கள் வேண்டுகோட்கிணங்க, கலைவாணியைக் கும்பகருணன் நாவில் இருக்கச்

செய்து, நெடுங்காலந் துயிலும் வரங்கேட்கச் செய்தனர். தான் வரம் பெற்றபிறகு இதனை உணர்ந்த கும்பகருணன்,

"மிகவும் வருந்திச் செய்த தவப்பயன் வீணாகிவிட்டது; கிணற்றில் விலையுயர்ந்த பொருளொன்றைப் போட்டுவிட்டு, அதனை எடுப்பதற்காகப் பாதாளாக்கரண்டியை விட்டு இழுக்கும் பொழுது, அதனில் வேண்டிய பொருள் வாராமல் என்றோ இறந்த நாயினது பெரிய எலும்பு ஒன்று கிடைத்தாற்போன்ற தன்மையாயிற்று இப்பொழுது" என்று மனம் நொந்து பேசுகிறான். கீழ்வரும் பாடலில் இக்கருத்தைக் காணலாம்.

"பாதாளாஞ்சனம் போட்டு - நாயின்
பருத்தெலும் பிழுத்திட்ட
பழங்கதை யாச்சுதென்றே - சிந்தையிற்
கருதினன் கும்பகர்ணன்"

(பக். 48)

மிகவும் முயற்சிசெய்து கும்பகருணனுக்குக் கிடைத்த பலன் நெடுந்தூக்கம். உதாரணம் எத்துணைப் பொருத்தமாயமைந்துளது.

இவைபோன்ற பல உவமைகளும் தொன்மொழிகளும் இந்நூலில் ஆங்காங்கே இடத்துக்குப் பொருத்தமாக அமைக்கப் பட்டுள்ளன. அவற்றுள் சிலவற்றைத் தொகுத்துக் கீழே தருகின்றேன்.

"கோயிற் பூனை தேவர்க்கு அஞ்சாதென்பது போலே"

(பக். 16, பா. 15)

"ஆரியக்கூத் தாடினாலும் காரியத்தில் கண்ணல்லோ"

(பக். 16, பா. 17)

"நல்லாரைக் காண்பதுவும் நன்றே - யென்று
நாட்டினிற் சொல்லுவா ரென்றே"

(பக். 20. பா. 5)

"முன்னோர் வழக்கந்தன் வீட்டு விளக்கென்று
முத்தமிடப் போகாதென்றே சொல்வது
இன்னமுந் தாய்க்காகாப் பிள்ளை யூர்க்காகா
தென்பர் பழமொழி யொன்றே"

(பக். 24, பா. 6)

" கேடு வருகின்ற போதேமதி யங்கே
கெட்டுவரு மென்பர் போலே"
" தன்னுடை வாயாற் கெணறு துந்தாப் போலே"
(பக். 24, பா. 7-8)

" நீல மலையைச் சூழ்ந்து கருமேகம் பொழிந்தாப் போல்"
(பக். 38, சர. 3)

" பன்றிபல குட்டியால் பயனேது யானை
பருத்தகுட்டி யொன்றிற் பலன்புவிமீது"
(பக். 40, சர. 3)

" நல்ல மரத்தினில் புல்லுருவி முளைத்தாப் போலே"
(பக், 42, சர 3.)

" மரணத்தைக் காட்டிலும் வேறொரு பயமிந்த
வையகத்தி லுண்டோ"
(பக். 45, பா. 4)

" தவத்தள வாகுமாந் தான் பெற்ற செல்வமென்று"
(பக். 46, பா. 10)

" வெறுவாய் மெல்லுறவனுக் கவலகப்பட்டால் மேலும்"
விடுவானோ சொல்லுஞ் சொல்லும்"
" கிளியை வளர்த்துப் பூனை கிட்டவுங் கொடுக்கலாமா"
" நரிக்குக் கொண்டாட்டம் நண்டுக்குப் பிராணவத்தை"
(பக். 47, சர. 1-3)

" எக்காலுங் கொம்பிற் றேனை - முடவன்
இச்சை கொண்டால் வருமோ - நின
மூக்காலும் காகந் தண்ணீர் - குளித்து
மூழ்கி னலுங்கொக் காமோ
மிக்காங் கங்கையிற் படிந்தும் - பேய்ச்சுரை
விரைந்து நல்ல தாமோ"
(பக். 49, சர. 2)

" தாயிட்டபே ரூரிட்ட மைழக்கும்"
" தலையி லடித்தால் தாழக் குனிவர்"
(பக். 62, பா. 6-7)

" பிச்சைச் சட்டியில் சனீசுரன் புகுந்தாப்போல்"
(பக். 65, பா. 5)

" ஏழையழுத கண்ணீரே கூர்வா ளாமே"
(பக். 73, சர. 2)

" குடிப்பெண்டிர் வயிறெரியக் கோடிச்சீலை நின்றெரியுங்
[கூறு போலே"

(பக். 73, வரி. 29)

குரங்குப் பிடியென்பது மெய்"

(பக். 93, சரு. 5)

' துட்ட பிள்ளைக் கூரார் புத்திசொல்லார் "

(பக். 93, சரு. 7)

" இளங்கன்று பயமறியாதென் றியம்புவர் புவிமீதே "

(பக். 95, க. 6)

" காக்கைக்குத் தன்குட்டி பொன்குட்டி காணும் "

(பக். 97, கண். 16)

" அருமந்த சென்மமெடுத் தபகீர்த்தி கட்டிக்கொள்ள
லாமோ துயரமென்னடா
வரும்விதி வந்ததெல்லாம் அனுபவிக்கவும் வேணும்
மாட்டே மென்றால் விடாதேடா "

(பக். 120, சரு. 7)

" மங்கையர் சித்தஞ் சபலமே "

(பக், 124, சரு. 3)

" மாடிருக்கும் வீட்டினில் மோருக்குவந்த கலயம் பின்
மறைந்தாப் போலே "

(பக். 126, வரி. 21)

" காக்கை யேறப் பனம்பழம் - விழுங்
காரணத்தைச் சொல்வதைப் போலே "

(பக். 139, சரு. 3)

" கடையில் தேங்காயெடுத்து வழிப்பிள்ளையார்க் குடைத்த"

(பக். 147, சரு. 2)

" வழிக்கரிசி யில்லான் வழக்கழிப் பென்று
வழிக்கமாகிய மொழி "

(பக். 144, சரு. 4)

" உரிமைப் பணம்போய்த் தெருச் சண்டையை
இழுப்பானதே காதை யானதே "

(பக். 148, சரு. 3)

" பானைதன்னைப் பாராமற் போனாலும் - நல்ல
பாலைப் பாராரோ "

(பக் 161. சரு, 3)

" வெல்லம் தின்பதொருத்தன் விரல் சூப்புவ தொருத்தன்"

(பக். 163, சரு. 4)

"தகப்பன் சொல் மறுத்த பிள்ளைக் கேதுமகிமை
சகத்தி லுண்டோ"

(பக். 164, சர. 1)

"கருவேலங் காட்டிலே ஒரு விளாங்கனி"

(பக். 170, பா. 10)

"தாய்க்காகாத பிள்ளை யூர்க்காதென்பது
தக்க வுலக வழக்கம தல்லவோ"

(பக். 172 - 3)

"மலைமுழுங்கு பவனுக்குக் கதவோரப் பளமென்ற
வகையைப்போலே"

(பக். 193, பா. 21)

"பொன்னைக் காத்த பூதம் போலே"

(பக். 233, சர, 2)

"வலுத்தவன் வெட்டினது வாய்க்கா லெனும்வழக்கம்"

(பக். 249, சர. 3)

"பாச்சல் புலி பதுங்குவது பாச்சலுக் கடையாளம்"

(பக். 252, பா. 8)

"ஊரார் பிள்ளையைக்கொண்டு கிணற்றாழம்
பார்த்தாப்போல்"

இந் நூலில் கீர்த்தனங்களுக்கு எல்லாம் இராகம் தாளம் ஆகியவற்றின் பெயர்கள் கொடுக்கப் பெற்றுள்ளன என முன்பே கூறினேன். சில கீர்த்தனங்களுக்கு இராகம், தாளம் இவற்றின் பெயர்கள் எழுதப்பட்டுள்ள இடங்கள் மூலச்சுவடியில் சிதைந்து போயின. அவற்றை ........என்ற அடையாளத்துடன் பதிப்பித்துள்ளேன்.

இந்நூலாசிரியர்' வான்மீகி, கம்பர், காளிதாசன், அருணசலக்கவிராயர் முதலியவர்களிடம் மிக்க ஈடுபாடு கொண்டவரென்றும், அருணசலக் கவிராயருக்குக் காலத்தாற் பிற்பட்டவரென்பதும் பின்வரும் பாடலால் தெரிகின்றது.

"உம்பர்மொழி யதனலே வான்மீகி காவியமா
யுறுதி செய்தார்
சம்புரா மாயணமாய்க் காளிதா சர்முதலோர்
சமத்தாய்ச் செய்தார்

'கம்பர்தமிழ்க் கவிசெய்தார் அருணு சலம்நாட
கமதாய்ச் செய்தார்
அம்புவியி லிவர்கவிமுன் னிரவிமுன்னர் மின்மினிபோல்
யான்செய் வேனே"

(அவையடக்கம் பக்கம் 4)

இவர், இந்நூல் செய்தமைக்கு இராமனருள் உண்டாகும் என்ற ஒன்றே காரணம் என்பது பின்வரும் பாடலில் கூறப்படுகின்றது.

"அவனிதனில் சிறுபிள்ளை விளையாட் டாக
வருந்தமிழைக் குளறினுற் பயனென் னென்ருல்
நவரசா லங்கார மிலாவிட் டாலும்
ராமநா மாங்கிதந்தா னென்றி ஞலே
கவனகவி வியாசமதா லிராமன் மேலே
கருத்தை வைத்தால் காகுத்த னருளுண் டாகுஞ்
சவரியுச்சிட் டங்கொடுத்தே முத்தி சேர்ந்த
தகைமைதா னென்கவிக்கு மூவமை தானே"

(நூல் செய்தகாரணம் பக். 4.)

இந்நூலாசிரியர் அநந்தர் என்னும் பெயருடையவரென்றும், அந்தண மரபின ரென்றும், குடந்தை சாரங்கபாணிப் பெருமாள் கோயிலிலுள்ள சிங்கார மண்டபத்தில் இந்நூலை அரங்கேற்றம் செய்தாரென்றும் பின்வரும் பாடல் கூறுகின்றது.

"கவிதிலகர் வான்மீகி சொலுமி ராம
கதைஏழாங் காண்டம்நா டகமாய்ச் செய்தே
நவிலெழு பதுக்கெழுப தேழு மூன்ருன்
நல்லகலி யாண்டுகன்னி மதிப்பூ சத்தில்
புவிபுகழுங் குடந்தைக்கோ மளவல் லிப்பெண்
புணருமெங்கள் சாரங்க பாணி கோவில்
கவிவாதி சிங்காரமண் டபத்தின் முன்னே
கவியனந்த வேதனரங் கேற்றி ஞனே"

இந்தப் பாடலினல் அரங்கேறிய காலமும் ஆசிரியர் பெயரும் அரங்கேற்றிய இடமும் நன்கு விளங்குகின்றன. இப்பாடல் "இவை நிறைவேறின விவரம்" என்ற தலைப்பில் ஏட்டின் இறுதியிலும் மறுமுறை எழுதப்பெற்றுளது. இந்நூலாசிரியரைப் பற்றி வேறென்றும் அறியக் கூடவில்லை.

இந்நூல் முடிந்ததும் "இரண்டாம் பாகம்" என்ற தலைப்பில் ஒரு பகுதி இதனுடன் இணைக்கப்பட்டுள்ளது.

இதனுள், முன்னையதற்குத் தொடர்ச்சியாய், இராமன், சீதை பூமியில் மறைந்ததும் பூமிதேவி மீது சினங்கொண்டு போர் செய்யப் புறப்படுதல், பிரமன் சமாதானப் படுத்தல், கந்தருவருடன் பரதன் போர், குசலவர் பட்டாபிஷேகம், இராமன் இயமனைச் சந்தித்தல், இலக்குவன் இராமனுக்கு முன்பே விண்ணுலகஞ் செல்லல், இராமனுடன், மற்ற தம்பியர் வானரர்கள் ஆகியோர் விண்ணுல கடைதல், அநுமன் விபீடணன் ஆகியோர் சிரஞ்சீவிகளாய் இருத்தல், வான்மீகி முனிவர் கூறிய இராமாயண காவியப் பலன் முதலிய பல செய்திகள் விரிவாகக் கூறப்பெற்றுள்ளன. இந்நூலும், கீர்த்தனைகளும் விருத்தங்களுமாகவே பாடப்பெற்றுள்ளது.

இந்நூலாசிரியர், முதற்பாகம் இயற்றிய அநந்தர் என்பாரின் சீடரென்றும், அவருக்குப்பின்பு, அவர் பாடா தொழிந்தவைகளை இவர் பாடி முடித்தார் எனவும் பின்வரும் பாடலால் தெரிகின்றது.

"இப்படியே வால்மீகர் கிரந்தத் தாலே
இசைந்துசொன்ன சுலோகத்தின் பொருளை யெல்லாங்
கற்பனலங் காரமொடு தமிழி னாலே
கனநயதே சிகமதனால் கானம் பண்ண
ஒப்பில்லாக் கீர்த்தனையுந் தருக்க ளாலே
வுரைத்தனந்த கவியினுடைப் பாதந் தன்னை
எப்பொழுதும் மனத்தில்வைத்தஞ் ஞானந் தன்னி
யேறினேன் கவிசொல்லித் தேறி னேனே".

(பக். 337)

இந்நூலில் வந்துள்ள கீர்த்தனங்களிலும், விருத்தம் முதலிய பாக்களிலும் கூறப் பெற்றுள்ள திரண்ட கருத்துக்களைத் தலைப்புக்களாக, அந்த அந்த கீர்த்தனம், விருத்தம் முதலியவற்றின் தலைப்பில் கொடுத்துள்ளேன்.

இரண்டு மூலப்பிரதிகளிலும் பல்லவி, அநுபல்லவி, சரணம் என்ற பாகுபாடுகள் காணப்படவில்லை. இயன்றவரை ஒருவாறு இவற்றைப் பாகுபாடு செய்து அவ்வக்கீர்த்தனங்களில் அமைத்துள்ளேன்.

இந்நூலாசிரியரைப் பற்றி வேறொன்றும் தெரியவில்லை.

இந்நூல், இரண்டாம் பகுதியின் மூலப்பிரதியில், சில ஓலைகள் முறிந்து பாடல்களின் உருவங்கள் அடியோடு சிதைந்து போயின. ஆதலின் அவற்றைப் பதிப்பிக்க வியலா மற் போயிற்று.

இந்நூற் பதிப்பில் ஆங்காங்கே பிழைகள் இருக்கலாம். பெரும்பிழைகளாகக் காணப்பட்டவற்றைப் பிழைதிருத்தம் என்ற தலைப்பில் பின்னல் கொடுத்துள்ளேன். மற்றவைகளை அறிஞர் திருத்திப் படிக்குமாறு வேண்டுகின்றேன்.

இப்பதிப்பு, இந் நூல்நிலைய டிஸ்கிருப்டிவ் காட்டலாக்கு 476, 477 ஆம் எண்களில் விவரணஞ் செய்யப் பெற்றுள்ள பனையோலைப் பிரதிகளை ஆதாரமாகக் கொண்டு வெளி வருகின்றது.

சென்னை,
6—1—1960.

தி. சந்திரசேகரன்.

ஶ்ரீ:

# உத்தர ராமாயண நாடகம்.

## (முதற் பாகம்)

---

### காப்பு

#### வெண்பா

*சீராருஞ் செங்கமலச் செய்யவளைச் சேர்ந்திருக்கும்*
*நாராய ணன்புகழை நாட்டு(கவே)[தற்கே]—நேராகி*
*வந்தருள்வா யுத்தரரா மாயணநன் னூடகமே*
*தந்தருள்வாய் சேனுநா தா.*

### கதைச் சுருக்கம்.

#### சந்த விருத்தம்

*மண்டலப தித்தசர தனைவருபி தாவென*
*மதித்துவா னேரை யெல்லாம்*
*வாழ்விக்கு மவதார மிதுசெய் திலங்கைரா*
*வணனைமுத லாம ரக்கர்*

*விண்டலம டைந்திடச் செய்தே அயோத்தியினின்*
*மேவிமகு டம்பு னைந்தே*
*மேதினியை யரசாளு னாள்மகிமை கொண்டாடு*
*மெய்த்தவ னகத்தி யன்பாற்*

*கண்டுநிசி சரர்கதைக ளியாவையுங் கேட்டுமுப*
*கதைகளெல் லாம றிந்துங்*
*கற்புமிகு கலியாணி சீதையுடன் மருவுநாள்*
*கருப்பந்த ரித்த வழகுங்*

*கொண்டவளை மனதிச்சை கேட்டுமப் படிவரங்*
*கொடுத்துமப வாத மகலக்*
*குவலயந் தனிலடவி மீதுவிட வான்மீகி*
*கூர்ந்திரட் சிக்க விங்கே*

*தொண்டுசெயு மிளையபெரு மாள்வந்து சொல்லத்*
*தொடர்ந்தகதை மூன்று ரைத்துந்*
*துய்யயமு னாதீர வாசமது செய்துவரு*
*சுருதிமுனி வோர்க ளுக்காய்*

எண்டிசைபு கழ்ந்திடும் பரதரனு சனையேவி
யிலவண சுரனை வென்று
யேற்குமறை யோன்புதல்வ னுருயிர்ப்பி ழைத்திடவு
மேசம்பு கனைமாட் டியே
அண்டர்புகழ்ப் பெற்றகத் தியன்கையி னலே
யாரந்த ரிக்கு மார்பா
அயமேத மீதுவான் மீகர்பின் வருசீதை
யதிசயங் கண்டு சேர்ந்து
மண்டபந் தனில்வந்த சேயர்குச லவர்பாலில்
வால்மீகி ராமா யணம்
வளமையே கொண்டபதி துளபமு தண்டபதி
வளருகோ தண்ட பதியே.

**கௌளிபந்து ராகம்] அநுமன் துதி [ஆதி தாளம்**

**பல்லவி**

ஸ்ரீ ராம தூத நமோ நமோ
ஜிதேந்திரிய ஹரே நமோ நமோ.

**அநுபல்லவி**

மார[ா]பி தானத (?) மானித முனீந்த்ர
தாராஸுத தேவித நமோ நமோ (ஸ்ரீ ராம)

**சரணங்கள்**

1. கேஸரி வரஸுத நமோநமோ—சுவாமின்
கீர்தித ராமநாம—நமோ நமோ
ஹாஸித குண்டல ரஞ்ஜித ரிபுகுல
கோஸல வரபல—நமோ நமோ (ஸ்ரீ ராம)
2. ஸுரிஜ னர்ச்சித நமோநமோ—ஹரே
ஸுசித கிங்கர—நமோ நமோ
வாரிதி லங்கன மதித தசானன
ப்ரேரித ரஞ்ஜன—நமோ நமோ (ஸ்ரீ ராம)
3. கல்யாண ஸமுதய நமோநமோ—ஹரே
கபளித ப(ரயேச) [ரிவேஷ]—நமோ நமோ
துல்யாதீத விக்ரஹ ஸிஷ்ட பரிக்ரஹ
கல்யாக்ஷ நிக்ரஹ—நமோ நமோ. (ஸ்ரீ ராம)

மத்தியமாவதி ராகம்] இதுவுமது [ஆதி தாளம்

பல்லவி

ஆஞ்சநேயனே சரணம்—ஜெயஜெய
ஆஞ்சநேயனே சரணம்

அநுபல்லவி

ஆஞ்சநேயனே - காஞ்சன மேனியனே
ஆயுவளர் தீரனே வாயுகு மாரனே (ஆஞ்ச)

சரணங்கள்

1. தெண்ணீர்க் கடலைத் தாவி—யந்தத்
தென்னிலங்கை நகர்தனிலே மேவிப்
புண்ணிய சீதா தேவி—யருள்
பூண்டுமோ திரங்கொடுத்தாய் சிரஞ்சீவி (ஆஞ்ச)

2. ஆதி மாருதி நீரே—நவ
வியாகரணத்தைப் பண்டு சூரிய னேரே
ஓதியபெரி யோரே—நல்ல
உத்தர ராம சரித்திரஞ்சொல்ல வருள்வீரே (ஆஞ்ச)

3. வானவர் புகழ்வோ னே—உயர்
வாயுவேக சீலனே புத்திமானே
நானுன்னை நம்பி னேனே—ரெகு
ராமகாரிய துரந்தர னேயனு மானே. (ஆஞ்ச)

## அவையடக்கம்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

பத்திசெய்து வால்மீகி பகவான் சொன்ன
பாரகா வியராமா யணத்தி னுள்ள
உத்தரமே நாடகஞ்சம் புகளு மாக்கி
யோங்குபவ பூதிவேங்க டார்ய ரின்ன
மத்தும்வேங் கடகிருஷ்ண கவியென் பாரும்
வடமொழியால் சொன்னதையான் றமிழால் சொல்
முத்தமிழு மறிந்தவரே பிழைபொ றுப்பீர் [வேன்
முன்புமே யுங்களருள் தென்பு தானே.

## இதுவுமது

அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

உம்பர்மொழி யதனுலே வால்மீகர் காவியமா
யுறுதி செய்தார்
சம்புரா மாயணமாய்க் காளிதா சன்முதலோர்
சமத்தாய்ச் செய்தார்
கம்பர்தமிழ்க் கவிசெய்தார் அருணுச லம்நாட
கமதாய்ச் செய்தார்
அம்புவியி லிவர்கவிமுன் னிரவிமுன்னர் மின்மினிபோல்
யான்சொல் வேனே.

## இதுவுமது

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

நிறைமொழிவான் மீகர்வடமொழியி னுலே
நிலேயிட்டே யுலகமெங்கு நிறைந்த கீர்த்தி
உறுதிரா மாயணந்தா னேழு காண்டத்
துத்தரகாண் டக்கதையைப் பெரியோர் முன்னே
குறுமுனிவ னிலக்கணஞ்செய் தமிழி னுலே
கொண்டுநா டகஞ்சிறியேன் கூறு மார்க்கஞ்
சிறுபாலர் மணற்குவித்து வீடு கட்டுந்
திறமைதா னென்கவிதை முறைமை தானே.

## நூல் செய்த காரணம்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

அவனிதனில் சிறுபிள்ளே விளேயாட் டாக
வருந்தமிழைக் குளறினுற் பலனென் னென்ருல்
நவரசா லங்கார மிலாவிட் டாலும்
ராமநா மாங்கிதந்தா னென்றி னுலே
கவனகவி வியாசமதா லிராமன் மேலே
கருத்தைவைத்தால் காகுத்த னருளுண் டாகுஞ்
சவுரியுச்சிட் டங்கொடுத்தே முத்தி சேர்ந்த
தகமைதா னென்கவிக்கு முவமை தானே.

## கடவுளர், பெரியோர் அருள் வேண்டல்

**தோடையம் : நடை]** **[ஜம்பை தாளம்**

நாட்டை ராகம்] **[ஆதிதாளம் : திச்ரநடை**

1. *உத்தமி கோசலை பெற்றருள் சுந்திரன்*
*உச்சித பானு குலத்துயர் சந்திரன்*
*உத்தர ராமச ரித்திர விந்தையை*
*உண்மை கொண்டு பாட*
*சத்திம ஞேன்மணி முக்கணி அம்பிகை*
*தக்கபவானி யிடத்தவர் தந்திடு*
*சித்திவி நாயக வற்புத தந்தியைச்*
*சிந்தை செய்குவேனே - ஜயஜய.*

2. *அகத்திய மாமுனி யிடத்தினி லேநின்று*
*அரக்கர்கள் காதைகள் சொலச்சொல்லி யேகம்ப*
*மகத்துவம் ராகவ சரித்திர மாமிந்த*
*வரிசை தன்னைப் பாட*
*செகத்தனை பார்மகள் மடக்கொடி-யானநீ*
*திருக்கம லாசனன் மனைக்கொடி வேதங்கள்*
*தொகுத்துரைப் பாரதி யருட்கட லேதந்து*
*துணை செய்குவாளே - ஜயஜய.*

3. *சரயுவி நாடு அயோத்தியின் மேலே-வாழும்*
*தசரத ராம பராக்கிரம வானும்*
*உரைசெய்து நாடக மேற்பது வாமிதே*
*யுலகத்தி னிற்பாட*
*வரதிரு வாய்மொழி சாத்திய ஆழ்வார்கள்*
*வைஷ்ணவ நேமமும் வாய்த்திடு வாசாரியர்*
*பெரியவர் தாளிணைப் போற்றிசெய் தேவாழி*
*பெருமை சொல்லு வேனே - ஜயஜய.*

4. *மாதா வொத்திசை குசலவர்க் குரைத்த-திரு*
*வான்மீ கக்கவி யதனிலுத் தரத்தை*
*மீதா தானிப்படி பதவியல் சிறக்க*
*ரகுரா மன்புகழ் பாட*
*வேதா வச்சிர னமரர் சித்தர்மிக்க*
*மேலா மற்புத முனிவர் புத்தியுத்த—ஜய*
*சீதா லட்சுமண பரதசத் ருக்கருடை*
*சேவடிகள் துணையே - ஜயஜய.*

சுருட்டி ராகம்] மங்களம் [ஆதி தாளம்

பல்லவி

மங்களம்—சுபமங்களம்—ஸ்ரீ ராமனுக்கு
மங்களம் ; மங்களம்.

அநுபல்லவி

கோசலைக்கு வாய்த்தகு மாரனுக்கு—மண்டல மெங்குஞ்செயங்
கொண்டவில் வீரனுக்கு (மங்களம்)

சரணங்கள்

1. மனுகுல நாதனுக்கு சனகன்பெண் ணேயனுக்கு
அனுமன டிமைசெய்யும் புனிதரா கவனுக்கு
வனமதில் சவுரிதந்த கனியுண்ட வாயனுக்கு
அனுதினமுந் தொண்டர்கள் மனதைய கலானுக்கு
(மங்களம்)

2. கோசிக னப்பனுக்கு ராசசி காமணிக்கு
பூசுரர் வசிட்டர் விசுவாச தயாநிதிக்கு
மாசில்லா தபரத்து வாசனி டந்தனிலு
நேசம றவாதஉல் லாசசல் லாபனுக்கு (மங்களம்)

3. வேதசொ ரூபரகு நாதகு ணநிதிக்குஞ்
சீதளச் செங்கமலப் பாதாபி ராமனுக்கு
மாதியில் வான்மீகி கீதவ டமொழிச்சொல்
ஓதுங்கு சலவர்க்குத் தாதைகல் யாணனுக்கு. (மங்களம்)

## இராமன் அருள்வேண்டல்

சௌராஷ்ட்ர ராகம்] தரு [ஆதி தாளம்

பல்லவி

எந்தனுக் கருள் தருவாய் - ராகவா
எந்தனுக் கருள் தருவாய்

சரணங்கள்

1. எந்தனுக் கருள்தந்த தயாநிதி
யிணைந்து சீதையை மணந்த காகுத்தனே
சுந்தர மதுமிகுந் தேய யோத்தியில்
வந்தரகு குல நந்தனனே சாமி (எந்த)

2. தலத்திலே.......குலத்திலே யுயர்ந்த
புலத்திய ரோடுபவு லத்தியர் தவசு
நலத்திலே குபேர னிலைத்தசீர்க் கதையுஞ்
சொலுத்தத வாக்கண்டு நிலத்தை யாண்டவனே;(எந்த)

3. பண்டைநாள் பிரம ருண்டுசெய் தரக்கர்
மண்டிய வழியிற் கொண்டமா லியவா
னண்டிய துணையி ரண்டுபேர் பிறப்புங்
கண்டுகேட் டருள்கோ தண்டரா கவனே; (எந்த)

4. மாலிய வானுஞ்சு மாலிமா லியெனுங்
காலர்தா னுமிந்த ஞாலமா னதிலே
மானுட னமர்செய்தே லங்கை யிழந்த
மூலமு னிவர்சொல் லாலறி வந்தவனே; (எந்த)

5. கச்சணிந் திடுமு லைச்சி கைகசியை
விச்சி ரவர்பால் வரச்சொலி யதினல்
இச்செயல் செய்த பத்துசி ரன்பிறந்ததைச்
சொல்மு னிபுக ழச்சுதா னந்தனே; (எந்த)

6. புவனியில் வந்திடு மிராவணன் முதலானோ
ரியாவர்கள் பிறப்புட னேவிளை தவமது
மேவிய வரங்களுந் தாவுபலா பலமுமி
யாவுமுனி பால்கேட்க வேவந்த ரகுநாதா; (எந்த)

7. கீர்த்திமி குந்தவீர கார்த்தவீ ரார்ச்சுனனும்
பார்த்திவன் சிறைச்சாலை சேர்த்துமி ராவணனைப்
பார்த்தும்வா லிவாலா லீர்த்தும்மு னிசொல்ல
யோர்த்தசு முகராம மூர்த்திக யாகிதியே ; (எந்த)

8. முனிமார்ச பைமுன்னே யனுமானைக் கொண்டாடி
யினமாய வன்கதை தனையேகேட் டறிந்துஞ்
சனகாதி யரான அனைவோர்கட் கும்விடை
யினையீர்ந்த யோத்திய தனையாண்ட வரசரே ; (எந்த)

9. நாட்டமதாய்ச் சிங்காரத் தோட்டம திலேவிளை
யாட்டஞ்சீ தையுடன்பா ராட்டிக்கோபங் கண்டேகண்
ணூட்டிம னதினிச்சை சூட்டின தென்னவென்று
கேட்டப டியேசெயத் தாட்டிக ராமசந்திரா; (எந்த)

10. மேதினி தனிலெந்தன் சேதியென்ன சொல்லுருள்
ஓதென்ச வெச்......ண மீது விகடகவி
சாதியன் சொன்னதினுல் சீதையை வெகுவெகு
சோதனே கண்டுமகிழ்ந் தாதரவு செய்தோனே ; (எந்த)

11. சானகி தனேத்தம சாநதிக் கரைவன
மானதில் விட்டேதம்பி யானவன் வந்துசொல்லத்
தானறந் தேநாருகன் மோனநி மியயாதி
மானுபா வர்கள்கதைத் தேனுரை செய்தவனே ; (எந்)

12. சிவனுர்சூ ழிலங்கைபத்த ஞகிய பொல்லா
லவணு சுரனெனு மவனுல் மிகமேவி
சவனுதி களுக்கா யொருவனுஞ் சத்துருக்க
ணிவனேயெ னுமேவிக் கவலே தவிர்த்தோனே; (எந்த)

13. அந்தண னுக்குமொரு மைந்தன்வ யதைந்தில்
மடிந்திடும் படியாக வந்தது வாபரத்தில்
முந்தும்மீ திக்காரன் செந்தலே தனேவெட்டி
அந்தப்பா லகனுயிர் தந்துரட் சித்தவனே ; (எந்த)

14. மகத்தான தவஞ்செய்த அகத்தியர் மாலேதந்து
புகழ்ச்சிசெய் தேசுவேதன் மகத்துவன் தெண்டன்
[கதை
தொகுத்துஉரை செய்யக்கேள்வி மிகுத்தஅ யோத்திதனில்
மகிழ்ச்சியு டன்வந்த சகத்திரனு மத்தய்யா ; (எந்த)

15. பொருத்தமி குந்தேநல்ல கருத்துட னயமேதந்
திருத்திச்செய் தலால்முன்னுள் மருத்துவர் தமக்கங்கே
விருத்திரக் கதிதீர்ந்த சரித்திர மதையெல்லாம்
விரித்ததம் பிமேலம்பு தரித்தபட் டாபிராமா ; (எந்த)

16. பெண்ணுரு நீங்கவுந்தான் பண்ணிய தயமேத
புண்ணிய ப[லமே] கண்ணிணே தம்பியர்கள்
எண்ணவிள் ளகதையை நண்ணியு ரைத்தருளக்
கண்ணனே தாசரதி யண்ணலே ராமபத்திரா ; (எந்த)

17. யோகமி சையமன தேகமதா யமாமேத
யாகஞ்செய் வதுக்கங்கே யாகவேண் டியதெல்லாஞ்
சேகரங் கொண்டுசாங்க மாகத்தட் சிணேயீந்த
மோகமாய்த் தேவர்க்கவிர்ப் பாகங்கொ டுத்தசாமி ;
(எந்த)

18. போதவான் மீகரிடத் தோதும்பிள் ளைகளுடன்
சீதையாக சாலையின் மீது...............தந்
தீதில்லாமற் செய்தபவா தந்திர வேபண்டு
பூதலமெங் குஞ்சொல்லும் வேதச்சொ ரூபமாலே.
(எந்த)

19. தூயமா மேதயாக மேயமண் டபத்திலுன்
சேயரி ருவரந்தச் சேயிழை சீதைபெற்ற
ராயகு சலவர்கள் வாயினல் வால்மீகி
ராமாயண மேத்திடு நாராயணச் சொரூபனே. (எந்த)

## நூலரங்கேற்றிய நாள், இடம், ஆசிரியர் பெயர் முதலியன

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

கவிதிலகர் வான்மீகி சொலுமி ராம
கதையெழாங் காண்டம்நா டகமாய்ச் செய்தே
நவிலெழு பதுக்கெழுப தேழு மூன்றன்
நல்லகலி யாண்டுகன்னி மதிப்பூ சத்தில்
புவிபுகழுங் குடந்தைக்கோ மளவல் லிப்பெண்
புணருமெங்கள் சாரங்க பாணி கோவில்
கவிவாதி சிங்காரமண் டபத்தின் முன்னே
கவியனந்த வேதனரங் கேற்றி னனே. (6)

## ஸ்ரீராமன் அரசாட்சி புரியும் நாளில் அயோத்தி நகருக்கு முனிவர்கள் வருகை

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

தலம்பெருகும் புகழுளகோ தண்ட ராமச்
சந்திரனு மிராவணா திகளை வென்று
குலம்பெருகுந் தம்பியர்கள் பணிந்து போற்றக்
குயிலனைய மொழிச்சீதை...............ன் கூடிப்
பலம்பெருகு மகுடாபி ஷேகஞ் சூடிப்
பெரும்புவியை யாளுநா ளயோத்தி மீதில்
நலம்பெருகு மகிமைசொல் லியுங்கொண் டாட
நாடினர் முனிவர்வந்து கூடி னரே. (7)

சௌராஷ்ட்ர ராகம்] [சாபு தாளம்

பல்லவி

நாலு திசையினில் ரிஷிகள் மெய்ஞ்ஞான
சீலர்கள் வந்தாரே

அநுபல்லவி

மிக்ககோ பங்கொண்டே திருச்சீதா தேவியைக்
கூடி மகுடமுஞ் சூடப் பெற்ற
சீலங்கண் டன்புடன் கூட—ராமன்
பாலின் மகிமைகொண் டாட. (நாலு)

சரணங்கள்

1. கவுசிகர் ஏ(ன)[னை]க் கிரிதரு நளர்
கண்ணுவ மாமுனி ரயிப்பியர்—மிகுந்
தவசு செய்யு மூமுசுப் பிரமுசுதத்
தாத்தி ரேயரு மகத்தியர்—முனி
கவசர் வதிட்டர் உத்திரேயருங்
காசிப ரத்திரி தவும்யருடன்
கௌதமர் விசுவா மித்திரரும
காத போதன ஞானிய—ரின்னுங்
குவலயத் துள்ளபே ருயர்ந்தனர்
பவவி மோசன கிரியர் (நாலு)

2. தொண்டர்கள் சூழ்ந்துவர நான்கு வேதமுஞ்
சொல்லிப் பொருளுரை அய்யர்—பூவில்
எண்டிசை யோர்புகழ் ஓமச்செந் தீயென
யேற்கும் பிரதாப மெய்யர்—மலை
தண்டகா ரணிய முதல்வன வாசிகள்
தக்க கவுனிகள் துய்யர்—காதில்
குண்டல காந்தி வெயிலொலி ருளோட்டுங்
குஞ்சிச்ச டையாளா செய்யர்—யோக
தண்டும் புலித்தோ லுடையர் நன்க
மண்டல மேந்திய கையர். (நாலு)

3. வண்ணப்பூங் காவியு டுத்தமு னிவோர்
வரப்பெற்ற ராமன் பிரபலமே—செய்யப்
பொன்னவள் சீதையின் கற்பு வளர்ந்திடு
புண்ணிய சுமங்கலிப் பலமவர்க்குச்

சொன்னபடி செய்யுந் தம்பியர் மூவருந்
தோன்றிடுஞ் சூரிய குலமேயதி
லுன்னிதம் பெற்ற தசரதர் பாக்கிய
முற்ற கௌசலை நலமே—பாரில்
மின்னும யோத்தியின் நலமே—ரகு
மன்னன்செய்ப் பூசையின் பலமே. (நானு)

## முனிவர்களை இராமபிரான் வரவேற்றல்

### எண்சீராசிரியச் சந்த விருத்தம்

வந்திவர்க ளரமனையி (ஞசார)வாசல் சேர்ந்து
வாசல்கா வற்கார ராலே சேதி
முந்தியறி விக்கவவன் சென்று சாமி
முன்னின்று குறுமுனியை முதலா மய்யர்
வந்தனர்(ண)க ளென்றுசொல மகிழ்ச்சி பொங்கி
வரவழையென் றிரவிகுல மணியி ராம
சந்திரனு முகமலர்ந்து முனிவோர் வந்த
சதிர்கண்டா ரஞ்சலிசெய் தெதிர்கொண் டாரே.

## இராமபிரான் முனிவர்களை உபசரித்தல்

### இதுவுமது

உளம்பெருகு மன்புடனி ராம சந்திர
னுற்றமுனி வரைவணங்கி யாச னங்கள்
குளிர்ந்தருக்கிய பாத்தியா சமனீ யங்கள்
கொடுத்திருத்தி நல்வரத்தோர் குருவே வுங்கள்
தளிர்பெருகுஞ் சீடவர்க்கம் வனத்தி லுள்ள
சகலபரி ஜனமுடன் தவங்கள் நன்றாய்
வளர்ந்தேறு தோசுகமோ வென்று கேட்க
மகிழுவார் மகிமைசொல்லிப் புகழு வாரே. (8)

## இராமபிரானை முனிவர்கள் புகழ்தல்

மத்தியமாவதி ரர்கம்] [ஆதிதாளம்

பல்லவி

*சுகத்திலே யும்மைக்கண் டோமே—மெய்யாய்ச்*
*சுகந்தான் சுகந்தா னய்யா.*

அநுபல்லவி

*இகத்திலே யெதிர்த்தவர்க்கு மார பாணி*
*யென்று செயம்பெருகி நின்றகோ தண்டபாணி* (சுகத்)

சரணங்கள்

1. *ஏதோ தெய்வச் செயலால் தேவரீர் கையினு*
*லிராவணன் மடிந்தானே பின்-ம*
*கோதரன் பிரகத்தன் விகடன்வி ரூபாக்கன்*
*கும்பனு முடிந்தானே*
*காதகன் தேவாந்தக னராந்தகத னகம்பனதி*
*காயனும் பொடிந்தானே*
*பாதகன் திரிசிரன் சம்புமா லிநிகும்பன்*
*பருத்திக்கண் ணனுடனே பொருதுசெயம்*
*[பெற்றீரே* (சுகத்)

2. *மலைபோலே வருங்கும்ப கர்ணனைப் போரில்*
*மாட்டியும் வதைத்தீரே—இன்னும்*
*மூலக்கண் டகனுன வோமசத் துருவையு*
*முடல்விழச் சிதைத்தீரே*
*பலபல வாய்வந்த மூலப லக்கடலைப்*
*பாணமொன்றிட்டுச் சிதைத்தீரே*
*தலைமையா கியராக்கதர் மாறச்செய் தீரே*
*தாமரைக் கண்ணனே ராமச்சந்திரனே—ஜய* (சுகத்)

3. *இந்திர சயித்தென்ற யெமனைவென்ற தாச்சரிய*
*மென்னென்று சொல்லுவோமே*
*கண்டு முந்தி மகிமையுங் கொண்டாட வேணுமென்றே*
*யுண்மையுடன் வந்தோமே*
*அந்தரா வணியைக் கொன்றீரே—ரகுநாத*
*ராண்மையைக் கண்டோமே*
*சிந்தை கூர்ந்திடுந் தம்பியர் பணியவுஞ்*
*சீதையு டனேகாண மாதவஞ் செய்தோமே.* (சுகத்)

## முனிவர்களிடம் இராமபிரான், அரக்கர் வரலாற்றைக் கூறுமாறு வேண்டல்

### விருத்தம்

செகங்கண்டு பணிதுறவோ ரிவ்வா ருகச்
சீரெல்லாங் கொண்டாடச் செயரா மன்ற
னகங்கண்டு பூரித்து மேதோ வய்யா
ஆச்சரிய மிந்திரசித்த னதிக மென்ன
மகங்கண்டு தேவரெல்லாந் துதிக்கு ஞான
வாரிதியே அரக்கர்வந்த வழிகள் யாவு
முகங்கண்ட முனிவோரே யின்ன தென்றே
யுரைசெய்வீ ரென்மீதி லருள்செய் வீரே.

கல்யாணி ராகம்] இதுவுமது [ஆதி தாளம்

### பல்லவி

சொல்ல வது தகுமோ—மாதவர்களே
துய்யவரே யதற்குநான் பொருட்டாலும் மனதய்யா
(சொல்ல)

### அநுபல்லவி

வல்லவனி ராவணனை வெல்லவே மிகவரிது
வில்லினு லவனையெய்து கொல்லலாச்சு தே-இன்னும்
சல்லியிராக் கதர்மாள வில்லையா அவன்மகனை
யல்லவோ அதிசயமென் றெல்லைசொன்ன
[பொருளென்ன (சொல்ல)

### சரணங்கள்

1. கும்ப னகம்ப னதிகாயன் திரிசிரனி
கும்பன் தேவாந்தக னராந்தகனுந்
சம்புமாலி பிரகஸ்தன் கும்பகர்ண னிவர்கள்
தன்பலத்தி லிந்திரசித்த னென்பவன திகமென்ன
(சொல்ல)

2. கோடி கோடி சேனை காதரும் கூடிய
மூலப லங்களின் மேலாக நாடியிங்கே
யிந்திர சித்தைச் சூடிப்பல வானென்று
தேடித் தேடி யுங்கொண்டாடி னீரேபெரி யோரே
(சொல்ல)

கண்டுமண் டர்வெருவும் ராட்சத ரான
 கண்டகர் வந்துதித்த காரணமுங்
கொண்டவரங் களுமனந்த துண்டரிகர் தம்பலமும்
 விண்டுகேட்க வென்றுமிச்சை யுண்டுவங்கை நெல்லிக்
 [காய்போல் (சொல்ல)

### அகத்திய முனிவர், அரக்கர் வரலாற்றைக் கூறத் தொடங்குதல்

விருத்தம்

ஈரேழு வுலகமெங்குஞ் சஞ்ச ரிக்கு
 மிருடிகளை வணங்கியிவ்வா றிராமன் கேட்கக்
காரேழு மதற்குள்ளே புகுந்து மாயங்
 களைச்செய்த யிந்திரசித்தின் கதியு மின்ன
பேரேழு குலவரைநே ரிராவ ணன்றன்
 பிரபலமு மரக்கரெல்லாம் பிறந்த வாறு
மோரேழு கடல்நீரை யுள்ளங் கையி
 லொடுக்கினர் கதைகள்சொல்லத் தொடக்கி னரே

### புலத்தியர் வரலாறும், திரணவிந்து முனிவர் பெண் கருக்கொள்ளுதலும்

**காம்போதி ராகம்] தரு: கண்ணிகள் [சாபு தாளம்**

1. கோசலை வரபுத்திர சூரிய குலதீப
 கோதண்ட பாணிரகு பதியே—முன்னாள்
 வாசவ னைச்செயித்த ராவணன் பிரபலம்
 வகுத்துச்சொல் வேன்ரகு பதியே.

2. சகமஞ்சு ராவணன் கும்பகர் ணன்முதலோர்
 சரித்திரங் கேளும்ரகு பதியே—திரேதா
 யுகந்தன்னில் பிரம்ம குமாரரி லொருவராம்
 உத்தமர் காணும்ரகு பதியே.

3. தருமம் புகழ்க்குணங்கள் துலங்கும்பி ரமரிஷி
 தக்க பெரியோரகு பதியே—நாலு
 சுருதிபொ ருளறியும் புலத்தியமகாமுனி
 துய்யவர் காணும்ரகு பதியே.

4. அவருக்கே யிணைசொல்லப் புவியிலொ ருவருண்டோ
ஆக்கினை காண்ரகு பதியே - அவர்
தவசு செய்யவேண்டி மாமேரு சிகரியில்
தடங்கொண்ட னர்காண்ரகு பதியே.

5. மல்லிகை முல்லை யிருவாட்சி செண்பகம்
பலவகையுண் டாமலர்ரகு பதியே - இன்னும்
நல்லபாரி சாதங்கள் சிவந்திமரு வேருண்டு
நாகரிக மாம்ரகு பதியே.

6. பங்கய வாவியுண்டு கற்பக விருட்சங்கள்
பலகனி யுண்டாம்ரகு பதியே - நாளும்
எங்கெங்கும் தேனருவி பாயும்பூஞ் சோலைசூழ்ந்
திருக்கும்வன மாம்ரகு பதியே.

7. சஞ்சீவி முதலான சித்தர்மூ லிகையுண்டு
தருக்கள நேகம்ரகு பதியே - மயில்
கொஞ்சுகிளி யன்னங்கள் மாடப்பு றவினங்கள்
குயிலும்வள ரும்ரகு பதியே.

8. மானுண்டு களிறுண்டு சிங்கம்பு லிமிருக
வகைமிக வுண்டாம்ரகு பதியே - நல்ல
தேனும்பா லும்போலே பூவும்வா சனைபோலும்
சிறந்துவா ழும்ரகு பதியே.

9. எப்போது மாதவர்க்குப் பட்சிமி ருகமெல்லாம்
ஏவல்செய் யும்ரகு பதியே - நாளில்
முப்போது நாலுவேதம் வேதாந்த மெங்கெங்கும்
முழங்குமிட மாம்ரகு பதியே.

10. நவநாத சித்தர்களும் யோகி பிரமரிஷி
ராசரிஷி யும்ரகு பதியே - கூடிக்
தவஞ்செய்யு மிடத்தில் திரணவிந்து மாமுனி
தாமு மொருவரகு பதியே.

11. அந்தமு னிவரன்றன் ஆச்ரம முநல்ல
அற்புத மென்றுரகு பதியே - கண்டு
வந்துபு லத்தியரும் மாதவஞ் செய்துகொண்டு
வாசஞ்செய் தார்ரகு பதியே.

12. அந்நாளில் பலபல கன்னியர் மிகமிக
அழகுள்ள பேர்கள்ரகு பதியே - ரிஷி

கன்னிகை யுயர்தேவ கன்னிகை ராசரிஷி
கன்னிமார் கூடிரகு பதியே.

13. மின்னலு மபரஞ்சி சொர்ணபி ரபைபோலே
விளங்கும வர்கள்ரகு பதியே - நல்ல
பொன்னின் குடத்துக்கொரு பொட்டிட்டது போலநகை
பூண்டவர் காணும்ரகு பதியே.

14. சித்தாடை யுடுத்திய சின்னஞ்சிறு யிடையும்
செங்கைம லரும்ரகு பதியே - மூக்கில்
முத்தாகும் வரிசையும் பூரணசந் திரபிம்ப
முகமுள்ள பேர்கள்ரகு பதியே.

15. கோயிற்பூஜை தேவர்க்கு அஞ்சாததென் பதுபோலே
கூடிக்கூ டியேரகு பதியே - வாவி
வாயினிற்கு ளிப்பார்கள் மருமலர் கொய்வார்கள்
வரிசையா கவும்ரகு பதியே.

16. அம்மானைக் கழங்குக ளாடுவ ரவரவர்
அங்கங்கே நின்றுரகு பதியே - பாடிக்
கும்மிய டித்தந்த வாச்சிர மங்களெல்லாங்
கொட்டம டிப்பர்ரகு பதியே.

17. ஆரியக் கூத்தாடி னுலுங்கா ரியத்தில்
கண்ணல்லோ வழக்கம்ரகு பதியே - என்றும்
பேருயர் புலத்தியர் மனங்கொண்டு சமாதிபலன்
பெருமை சிறந்தார்ரகு பதியே.

18. துரும்பொரு கலத்தண்ணீர் தேக்குமென் றேமுன்னோர்
சொன்னுர் சரியேரகு பதியே - மனம்
விரும்பிகிட் டைபொருந்தும் புலத்தியர் தவசுக்கு
விக்கினங் கண்டுரகு பதியே.

19. முன்னின்று விளையாடுங் கன்னியர் தமைப்பார்த்து
மொழிந்ததைக் கேளும்ரகு பதியே - ........பா
சொன்னே மன்........முன்வந்து கண்ட கன்னியர்
சூலாக வென்றுரகு பதியே.

20. முனிசாப மிடக்கண்டு அரிநாம கீர்த்தனமே
மொழிந்தோர்பாவம் போலேரகு பதியே - பெண்கள்
இனிமேல் வரவுமாகா தென்றுவா னிடந்தனுக்
கேகினர் காணும்ரகு பதியே.

மறுநாள் திரணவிந்து முனிகன்னி கையொருத்தி
வழக்கப் படிக்குரகு பதியே - சாப
மறியாமல் சகிமாரைத் தேடிக்கொண்டு வந்தே
யந்தவி டத்தில்ரகு பதியே.

துய்ய புலத்தியமா முனியைக்கண் டவுடனே
சூல்கொண்டாள் காணும்ரகு பதியே - அவள்
மெய்யெல்லாம் வெளுப்பாகி வேணிக்கொங்கை கருப்பாகி
வேத்துரு வாச்சுரகு பதியே.

பச்சைந ரம்புமீறிக் காணுத யிடைகண்டு
பருவமுண் டாகிரகு பதியே - மன
திச்சையுட னேயேதுந் தின்று பெருமூச்சுட
னேங்கி நடந்தாள்ரகு பதியே.

என்ன விதியோ வறியேனென் னம்மா
வென்றுசொல் லியேரகு பதியே - கன்னி
தன்னந்தனி யங்கங்கே சந்தியெடுத் துக்கொண்டு
தவித்து நடந்தாள்ரகு பதியே.

## கருப்பமுற்ற திரணவிந்து முனிவர் பெண், பிதாவிடம் முறையிடல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

வந்துபிதா திரணவிந்து முன்னே நின்றாள்
வடிவுகண்டா ராங்கவரு மேது பெண்ணே
யிந்தவுரு வங்கொண்டாய் சொல்வா யென்ன
என்னுடைய தந்தையே யின்ன தென்று
முந்தியறி யேன்வாங்கி மாரைத் தேடி
முனிபுலத்தி யருமிருக்கு மிடத்திற் சென்றே
னந்தவிடத் திதுகண்டே னென்செய் வேனென்
றஞ்சினள் வயிற்றினிற்சூல் மிஞ்சி னளே.

**தன் மகளைப் புலத்தியரிடம் திரணவிந்து சேர்ப்பித்தல்**

இதுவுமது

*நிசமிதென்று சொன்னகன்னி குறிப்புங் கண்டு*
*நிலவரமு மறிந்ததற்கு நிஷ்டை கூர்ந்து*
*முச்வாச நிச்வாசப் பிராண யாம*
*முற்றறிந்தே புலத்தியனர் சாப மென்றே*
*விசையுடனு மெழுந்திருந்தே யவர்பாற் சென்று*
*மிக்கபணி விடைக்கிவளே யோக்கிய மய்யா*
*விசுவாசம் மறவாள்கா ணென்று சொல்லி*
*மெய்ப்பிப்பார் கைகொடுத்தே மெய்ப்பிப் பாரே.*

**திரணவிந்து முனிவர் புலத்தியரிடம் கூறல்**

**மோகன ராகம்] [ஆதி தாளம்**

பல்லவி

*யோக்கிய மய்யா—பணிக்கிவள்*
*யோக்கிய மய்யா*

அநுபல்லவி

*யோக்கியங் கள்ஈச வாக்கியம் புலத்திய*
*வாக்கியந் தவருளே பாக்கிய வதியிவள்* (யோக்கி)

சரணங்கள்

1. *கிடைக்குமோ தவத்துக்கென் றெடுக்கின்ற சொரூபமுங்*
*கிடைத்ததே யிவள....தல்லோ வடுத்தது மேன்மேலே*
*நடக்குமே பரம்பரை தொடுக்குமே சந்ததி*
*படைக்கவுந் தந்தேன் தந்தே னடைக்கலங் காத்திடும்*
(யோக்கி)
2. *கண்ணுக்குக் கண்ணக வெண்ணியு மறுதினந்*
*திண்ணமுட னேகாரும் புண்ணிய முனிநாதா*
*நண்ணிய பிட்சையிந்தப் பெண்ணைக்கொடுத் தென்பாலில்*
*தண்ணிசேர்ந் தாலும்வெள்ளை வண்ணந்தரு மல்லவோ*
(யோக்கி)
3. *தருணந் தருணங்கன்னி நிறைசுப மங்கலியம்*
*பெறவுமுன் செய்யுந்தவத் திறமென்ற றிந்துகொண்டேன்*
*கிருபைநீர் செய்யுமய்யா மறையவன் குலதீபா*
*உறுதியுள் ளவள்மெத்தப் பொறுமையுள் ளவளிவள்.*
(யோக்கி)

## திரணவிந்து முனிவரின் பெண்ணிடம் விச்சிரவசு தோன்றல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

*உறுதியுட னிப்படியே திரண விந்து*
*வுங்கொடுத்த கன்னிகையை யுகந்து கொண்டு*
*பொறுமையுடன் செய்துவரு பணியுங் கண்டு*
*புலத்தியமா முனிமகிழ்ந்து புதல்வ னென்போற்*
*பெறுகவென்று சொலவீன்ற பிள்ளை வேதப்*
*பிரசங்க முடன்தவத்தின் பெருமை யாலே*
*பிரபலமாய் விச்சிரவப் பிரமா வென்றே*
*பேர்கொண்டான் பிதாவுக்கு நேர்கொண் டானே.*

### விச்சிரவசு முனிவர் வமிசாவளி

பூரிகல்யாணி ராகம்] தரு [ஆதி] தாளம்

1. *கோசல நாட்டினை யாளும் — ராச*
*கோதண்ட பாணியே கேளும்*
*வீசும்பு கழ்குண சீல — ரந்த*
*வேதப்பு லத்தியர் பாலர்.*

2. *பிரம குலத்தினில் வந்தோர் — நல்ல*
*பேருந் தவத்தி லுயர்ந்தோர்*
*தருமங்கள் செய்யும் விரதர் — நாளும்*
*சட்கரு மத்தி னிரதர்.*

3. *பாருக்கிங் கிசையைற் செய்யா — ருயர்*
*பானுவை யேற்கின்ற மெய்யார்.*
*பரப்பிரம வஸ்துவைத் தேடுவார் — வேத*
*பாராய ணத்தினை நாடுவார்.*

4. *தன்னுயிர் போலெங்கும் பார்ப்பார் - ஆசை*
*தள்ளி நிராசையை யேற்பார்*
*அன்னிய தெய்வத்தை நிந்தியார் - பாரி*
*லாரை யொருக்காலு நிந்தியார்.*

5. நல்லாரைக் காண்பது நன்றே - யென்று
நாட்டினிற் சொல்லுவா ரென்றே
வல்ல பெரியோரைத் தேடி - நாளும்
வந்தனஞ் செய்குவார் நாடி ;

6. வண்மை யிதுவெல்லாங் கண்டே - பரத்து -
வாச முனிமனங் கொண்டே
உண்மைய தாய்நல்ல நாளையில் - மிக -
உத்தம லக்கின வேளையில் ;

7. மாது நயகுண வஞ்சி - தேவ -
வாணியெ னுமப ரஞ்சி
கோது குயில்மொழி யாளை - நறுங்
கூந்தலாள் வேல்விழி யாளை ;

8. கற்புள்ள மங்கையைக் கொடுத்தார் - வேத
கற்பனை யுள்ளதைத் தொடுத்தார்
அற்புத யோகியர் சிறந்தே - நல்ல
ஆசீர் விளம்பினர் நிறைந்தே ;

9. விச்சிர வர்மனங் கூர்ந்தா - ரந்த
மெல்லியல் தன்னுடன் சேர்ந்தார்
உச்சித மாகியதீ பத்தில்................த........ப
முதித்தது போலேபிரதா பத்தில் ;

10. தரும நெறியுள்ள வேதம் - பர
தத்துவ மாகிய போதம்
பிரம குணங்களு முள்ள - பிள்ளை
பெற்றார் மனங்களி கொள்ள ;

11. தேவர் முனிவர்கள் சூழ - மயன்
சிந்தித்து மிப்பிள்ளை வாழ
மாவல்ல வன்தன் பதியா - மிந்த
மண்டலத் துக்கொரு நிதியாம் ;

12. உச்சிதப் பிள்ளையு மீதே - யென்று
முண்மையாய் வந்துமப் போதே
வச்சிர வணனென்று பேரா - யிட்டு
வாழ்த்தினு ரேரகு வீரா.

13. ஓமச்செந் தீநிறம் போலே - அந்த
வுத்தம னுமொருக் காலே
நேமமுட னேதவம் புரிந்தான் - மன
நிஷ்கள மாகவே யிருந்தான்

14. ஆண்டுதோ ராயிர மொத்துத் - தண்ணீ
ராகார மாகவே காத்துப்
பூண்டு நிராகாரம் சிலநாள் - பரி
பூரண மெய்த்தவம் பலநாள்

15. செய்யு முறுதியை மதித்தார் - பிரம
தேவர்விண் ணோருட னுதித்தார்
துய்ய குழந்தையே நில்லு - மனஞ்
சூட்டும் வரங்களைச் சொல்லும்

16. என்ற வுடன்மனந் தேறுவான் - சாமி
யென்று வணங்கியே கூறுவான்
நன்றான தன்பதி லோக - பால
ஞகியே வாழ்கவி வேக

17. மிக்கான சிந்தையும் வரவே - வரம்
வேணுமய் யாவருள் தரவே
தக்கவ ரேயென்று துதிக்க - அவ்வி
தாதா மனத்தன்பு கதிக்க

18. முன்னாலே யிந்திரன் சண்டன் - வருணன்
மூவரை யுண்டாக்கிக் கண்டன்
இன்னமும் நாலவன் வருக்க - மன
தெண்ணி யிருந்து தொகுக்க

19. அப்பதந் தன்னைநீ தொடுத்தே - யானென்
றூட்சிய தாய்வரங் கொடுத்தே
புட்பக மொன்றையு மீந்தார் - தேவ
போதனுந் தன்னிடஞ் சேர்ந்தார்

20. வச்சிர வணன்மனந் துணிந்தான் - வந்து
மாதா பிதாவையும் பணிந்தான்
இட்சு வரகுகுல ராமா - கேளு
இன்னுஞ்சொல் வேன்பரந் தாமா.

## குபேரன், விச்சிரவசுவை வணங்கி இருக்க இடம் கேட்டல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

*அய்யர்பா தம்வணங்கிப் பிதாவே யானு*
*மயனுலே யிட்டருள்ள வரங்கள் பெற்றேன்*
*துய்யவி டங்காட்டில் வாசஞ் செய்யச்*
*சுகமான விடமதொன்று சொல்லு மய்யா*
*மெய்யனே யென்றுசுதன் கேட்கும் போது*
*விச்சிரவர் மனமகிழ்ந்து வேலை சூழ்ந்த*
*வையகத்தில் புகழ்துலங்கும் தலமீ தொன்றே*
*மார்க்கந்தான் சொல்வதுவே தீர்க்கந் தானே.*

## விச்சிரவசு, இலங்கையில் வசிக்குமாறு குபேரனிடம் கூறல்

சங்கராபரண ராகம்] [சாபு தாளம்

பல்லவி

*அங்கிரு நீயே - என் குமாரனே - அங்கிரு நீயே*

அநுபல்லவி

*தென்கடல் தீவிலே - லங்கையெனும் தாவிலே (அங்கிரு)*

சரணங்கள்

1. *திரிகூடப் பருவத நுனி மேலே தடங்கொண்டு*
*தேவேந்திர னேவலால் விசுவகர் மனும்பண்டு*
*திரமாயுண் டாக்கிய பட்டணம தொன்றுண்டு*
*செம்பொன் மயமான கோட்டைக்கொத் தளங்கண்டு*
*(அங்கிரு)*

2. *கறையானும் புத்துகட்டப் பாம்புகுடிப் போம்போலே*
*காதக ராட்சதர்கள் வாசஞ்செய்தா ரப்பாலே*
*மறுகாலுங்........சிரம மூர்த்தியின் பயத்தாலே*
*மருண்டு ரசாதலத்திற் போனரே யினிமேலே (அங்கிரு)*

3. *அந்தவிடத் திலிப்போ வாருமில்லை யென்றேரு*
*அதனு லொருவருக்கு மிடைஞ்சலில்லை யேசேரு*
*சிந்தையிற் சந்தேக மென்பதெல் லாந்தீரு*
*செல்வனே உன்பாக்கியம் கிடைத்ததே பலம் பாரு.*
*(அங்கிரு)*

## குபேரன் இலங்கையில் ஆட்சி புரிதல்.

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

புத்தியுடன் தந்தைசொல்லைக் கண்டு கொண்டான்
புட்பகத்தி லேறிவச்சி ரவணன் சென்றான்
மற்றுமோ ராயிரம்பே ரியக்கர் சூழ
வளைந்திலங்கை மீதுமாக் கினைசெ லுத்திக்
கர்த்தனெனச் சிலவேநாள் வாசஞ் செய்தான்
கதிரவனுங் கிரணத்தால் விளங்கும் போலே
சித்தர்சா ரணர்கந்தி ருவரும் போற்றுந்
திடஞ்சேர்ந்தா னன்னைபிதா விடஞ்சேர்ந் தானே.

## இலங்கையில் அரக்கர்வந்த வழியினைக் கூறுமாறு இராமன் கேட்டல்

மாதவனுங் குறுமுனிவ னிவைகள் கூற
மன்னர்கோ னிராமசந்திரன் மகிழ்ச்சி கூர்ந்திங்
கேதையா சற்குருவே முன்ன மந்த
விலங்கைதனி லரக்கர்வந்த வழிக ளென்ன
நீதிமிகு வேதபுலத் தியர்கு லத்தில்
நிசாசரர்வந் துதித்ததுவுந் தசக்கி ரீவ
னுதியார் சரிதையெல்லா முரைக்க வென்றா
னன்பினுல் முன்பலரும் விளம்பி னூரே.

### முனிவர், அரக்கர் வரலாறு கூறல்

சௌராஷ்ட்ர ராகம்] தரு [மிச்ர [சாபு] தாளம்

1. இட்சு வாகுகுல நந்தன சுந்தர
ராம அயராசன் போர்க்காப் (?)
பட்சிக் கொருகண் கொடுத்த தயாளனே
பார்புகழ் கோதண்ட வீரா ;

2. வாருமையா வருவுந்திக் கமலத்தில்
வந்த பிதாமகன் பண்டுசகஞ்
சேரும் பிராணிகள் தன்னை வகுக்கவே
சிட்டி யதிகாரங் கொண்டு ;

3. நீரதை யுண்டாக்கி யங்கதை...ற்கு
நிமித்திய நெஞ்சிலே தோன்றிப்பரி
வார முடனே சிலதுயிர்களை
வகுத்துட னந்தப் பிராணி;

4. மிக்க பசிதாகந் தன்னுடன் கூடியே
வேதாவைப் பார்த்தங்கே தேறும் எங்கள்
பக்க லதிகார மின்னதென் றேதிட்டம்
பண்ணுமையா வென்று கூறும்.

5. அப்போதி ரட்சியு மென்றவர் சொல்லவே
யாத்து மங்கள்பரி யாசமாக
இப்போதி ரட்சித்தோ (யெ)[மிர]ட்சித்தோ மென்றே
யிணங்காத சொல்லங்கே பேச;

6. முன்னோர் வழக்கந்தன் வீட்டு விளக்கென்று
முத்தமிடப் போகா தென்றே சொல்வ
தின்னமுந் தாய்க்காகப் பிள்ளை யூர்க்காகாத
தென்பர் பழமொழி யொன்றே;

7. கேடு வருகின்ற போதேமதி யங்கே
கெட்டுவரு மென்பர் போலே விதி
நாடியங்கே நின்ற பிராணிகளைப் பார்த்து
நாட்டினு ரேசாப மேலே;

8. தன்னுடை வாயாற் கிணறுதுந் தாப்போலே
சர்ப்பங்க ளொத்ததே நீண்டு மது
என்னென்றால் ரட்சித்தோ மென்று சொன்னபே
ரிராட்சத ராகிய பூண்டு;

9. யெட்சித்தோ மென்றவர் யட்சர்க ளாகவும்
ஏத்துக் கொண்டபடி யானார் பூவில்
நச்சு மரமேனும் வச்ச மரமென்று
நாட்டவுங் காட்டினில் போனார்.

10. ஏதிபிர கேதியன் என்றி ரண்டுபே
ரிராக்கத ராமண்ணன் தம்பீ—யதி
லாதிபிர கேதி யென்பவன் மிக்க
வரமுந் தவமும் விரும்பி,

11. யேகினன் காட்டினி லவனுக்கு மூத்தவ
னேதி விவாகத்தை யெண்ணிக் கன
மோகமு டன்கால னென்பவன் தங்கையை
முனைந்துகலி யாணம் பண்ணி ;

12. அவனிடத் திலேவித்து ரக்கெச னென்றே
ராண்பிள்ளை தானே பிறந்தா னவன்
குவல யத்தில்பல வானு கவுங்
கூடியொ ளியிற்சி றந்தான்.

13. ஏலாகு மெவ்வனங் கண்டவன் தாதையா
மேதிமன தன்பு கூர்ந்தான் அங்கு
சாலக டங்கடை யென்றொரு கன்னிகை
தன்னை மணந்தின்பஞ் சேர்ந்தாள்.

14. அங்கவள் சூல்கொண்டு மந்தர கிரியைச்சென்
றந்தக் குழந்தையை யீன்றாள் அதைத்
தன்கண்ணி னலேபா ராமல்பார்த் தாவுடன்
சம்போகஞ் செய்வதற் கென்றாள்.

15. அருமை பெருமை யறியாத வன்மரி
யாதைய றிவானோ ராமா மன
தொருமையாய்க் கேளுமை யாரது நாதனே
உத்த ரவிகுல சோமா.

16. ஆகாய மார்க்கத்தில் பார்வதி தன்னுடன்
அரனர் வருகிற போதே கண்டு
மோகோ குழந்தையென் றம்மன் கிருபையு
கந்துசெய் தாளேயப் போதே ;

17. முக்கண்ண மூர்த்திய றிந்தாரி ராக்கதர்
மூர்க்கருக் கிரக்கமு மீவு மில்லை
யெக்கணம் பிள்ளைபி றக்குதோ மாதாவுக்
கேற்ற வயதினை மேவு ;

18. மென்றந்தப் பிள்ளை யமரனு மாகவு
மேற்கவே கேசரி மீதில் நாளு
நன்றாகச் சஞ்சாரஞ் செய்யப் புரமொன்று
நாட்டியுண் டாக்கிய போதில் ;

19. கற்பித்த வனுக்குக் காக்கக் கடனென்று
கர்த்தனைச் சொல்லுவ தாலே யந்தச்
சிற்பர மூர்த்தி வரங்கொடுத் தார்பர
தேவி யொன்று மேலே;

20. தானவர் கர்ப்பந் தரித்தவு டன்பிள்ளை
தாய்வய துகொண் டுதிக்க வென்று
தானே வரங்கொ டுத்தவர் சென்றபின்
தகுவன சிறப்புங் கதிக்கப்;

21. பேரா யுலகில் சுகேசனென் றேயிந்தப்
பிள்ளைபி ரபலமு நீளு—மயி
சூரியம் பொங்கிக் கருவமுங் கொண்டு
சுகத்திலி ருந்தானே கேளும்.

### தேவவதி சுகேசனை மணந்து புதல்வர்களைப் பெறுதல்

விருத்தம்

திறமிகுகந் திருவன்சிரா மணியென் போன்றன்
சேயிழையாந் தேவவதி தனைம ணந்தான்
கிறுவமிஞ்சி யந்தப்பெண் வழியிற் செம்பொற்
கிடாரங்கண் டெடுத்ததுபோல் சுகேசன் றன்னை
யுறுதியாய்ச் சேர்ந்திருந்தா ளவளி டத்தி
லுற்றதிக்கு வாரணமஞ் சனந்தான் கன்று
பிரபலமாய் மூன்றுபெற்ற ததுபோல் தானே
பெற்றிட்டா னுகந்தபேர் வைத்திட் டானே.

### சுகேசன் புதல்வர் பிரமனிடம் வரங்கள் பெறுதல்

உசேனி ராகம்] [திரிபுடை தாளம்

பல்லவி

ராகவேந்திரா கேளுமையா—ராமச்சந்திரா.

அநுபல்லவி

மேக வாகன னுடனே தேவரும்
வேத முனிவர்கள் மனிதர் யாவரும்
நாகந்த னைக்கண்ட வெலிபோ லஞ்சினர்
ராட்சதர்கள் தானே யுலகில் மிஞ்சினர் (ராகவேந்)

சரணங்கள்

முன்ன மாலியவான் சுமாலியா மூர்க்கன்
மாலியென் றியைபேர் பெற்றூர்
மன்னு பூமியந்தர முஞ்சுவர்க்கம் போல
வலிய சமரினில் வடவைக்க னலொத்தார்
துன்னும் மந்திரம் மூன்றும் பாரினிற்
சொல்லும்வல் பிணிமூன் றநனை யுற்றூர்
தன்னுடைய தந்தை வரங்களை யறிந்து
தாமுந் தவஞ்செய்ய மனதிலிச் சித்தார் (ராகவேந்)

2. மேருகிரி யிற்சென் றரக்கர் மூவரும்
மெய்யும் பொறுமையும் மிகுந்து துலங்கினர்
நெருங்க விடமில்லா மற்றினந் தோறு
நெஞ்சி லுறுதிகொள் நேமமி லங்கினர்
ஆருந் தொடுப்பதற் கரியதா குங்கோர
தவங்களால் முனிவர் மலங்கினர்
பாரு மாரு மவுணர் மனிதரும்
பயந்து மவரவர் நிலைக லங்கினர். (ராகவேந்)

3. மாதவங் கண்டு பிரம தேவர்வி
மான மேறிவந் தங்கே யுதித்தாரே
ஏது காரியங் குறித்த வரங்களை
யீவோ மென்றதா லரக்கர் துதித்தாரே
தாதை யெங்களை யொருவர் செயிக்காமல்
தருவீர் சிரஞ்சீவி யென்றுங் கதித்தாரே
வேதை யாம்பகை வென்று கட்டவிட
வேண்ட வயனு மப்படியே விதித்தாரே. (ராகவேந்)

**மாலியவான் முதலிய அரக்கர் இலங்கைக்குச் சென்று வசித்தல்**

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

வரம்பெற்ற மூவரா லசுரர் தேவர்
மட்டடங்கா வுபாதியினல் வருந்து நாளில்
புரமதொன்று மேரிமைய மந்த ரத்திற்
பொருந்தவிட மூண் டாக்கியதில் வாசஞ் செய்யத்
தரவிசுவ கன்மனிடங் கேட்கப் பண்டு
சதமகனே வலில்செயிலங்கை செல்வீ ரென்றான்
நிரம்பியதென் கடல்தீவில் சென்ற ரக்கர்
நிறைந்திட்டார் சிலகால முறைந்திட் டாரே.

**மாலியவான் சுமாலி முதலியோர் வரலாறு—தொடர்ச்சி**

**பூரிகல்யாணி ராகம்]** **[ஆதி தாளம்**

**பல்லவி**

*இன்னுஞ் சொல்வே னிராம பத்திரா—கேளு*
*மிரவி சுதனுக் கன்பா மித்திரா.*

**அநுபல்லவி**

*தென்னிலங்கையில் வந்த மாலியவான் சுமாலி*
*தேவர் வெருவுமாலி மூவர் சரித்திரங்கள் (இன்னும்)*

**சரணங்கள்**

*கந்தருவரின் மாது—நருமதை யீன்ற*
*கன்னியர் மூவரை யப்போது—மணஞ்செய்து*
*களிப்பு றப்புவி மீது—வாழ்ந்திடுங்*
*காலத்தைச் சொல்வ தேது—சுந்தரிக்*
*கேதுமதி வசுதை யென்பவர் மூன்று*
*தோகைய ரவர்பாரி யாகையால் விவரமாய் (இன்னும்)*

*உன்மத்தன் வச்சிர முட்டி—விரூபாக்கன்*
*ஓமகோபன் மத்த மட்டி—சுத்தக்கினன்*
*ஓங்குந் துர்முகன் துள்ளுகுட்டி—யேழ்பே*
*ருடனே பெண்ணொ ருத்தி—படைமிரட்டி*
*வாமி யனலை யென்னுங் கன்னிதனைப் பெற்றனே*
*மாலிய வானெனுங் கால னொருவனையா (இன்னும்)*
*தூமகேது விகடன் தெண்டன்—சங்கிராதி*
*சுபாரிசுவன் பிரகத்தன் மிண்டன்—அகம்பனுந்*
*துடுக்கன்கால் கார்முகன் வண்டன்—பிரகரன்*
*துணைபாச கரணன் பிரசண்ட—நாமன்*
*கைகசி கும்பசி பேகைபுட் பொற்கடை*
*நாலுகன் னிகையுஞ்சு மாலியீன் றனேமன்னா*
*(இன்னும்)*

*அனலன் அனிலன் சம்பாதி—யரனென்று*
*மதிக விவேகி தர்மநீதி—வீடண*
*னங்குனைச் சரணமென் றோதி—வந்தநா*
*ளவனுடன் வந்தார் சொன்னேன்—சேதி*
*இனையநால் வரையந்த மாலியீன் றனே ராமா*
*இப்படிப் பலவும்பெற் றப்படிக் கண்ட கரனர். (இன்)*

## மாலியவான் முதலியோர் செய்யும் தொல்லைகளிலிருந்து மீள அமரர் கூடி எண்ணல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

உத்தமனூர் தசரதற்கு வாய்த்த செல்வ
வுதயமே ராமச்சந்திரா வுன்க ருத்தை
வைத்துவின்னுங் கேளுமையா வரக்க ரான
மாலியவான் சுமாலியொடு மாலி செய்யுந்
தத்ததினுல் மிகமெலிந்தே கற்பக த்தின்
தருநிழலில் வச்சிரபா ணியுட னேமுப்
பத்துமுக் கோடி யமரருமி யோசனை
பண்ணினு ரிதற்குவகை யெண்ணி னூரே.

ஆனந்தபைரவி ராகம்] இதுவுமது [பக தாளம்

### தரு

1. கதிர்மணிக்குல நிறைவயற்கிசை கதிர்மணிப்பல நீடு
கனமேவி மலர்வாடை கமழ்கோசலை நாடு
விதிமுறைப்படி யரசுபெற்றுயர் விசையவற்புத ராமா
மிதிலேச னருள்மானை விளையாடிய ராமா.

2. கதைவிசித்திர மிதுசெவிக்கொடுக் கடறுத்திடு வீரே
கல்யாண ரகுவீர கருணுகர நீரே
சதமகப்பெய ரவனுமிக்குள சகலதிக் கதிகாரி
தன்தேவ ருடைநாகர் தவகேசர சாரி.

3. பலர்களுக்குயர் துயர்விளைத்திடு படரரக்கர்கள் தாமே
பழிமீறி வெகுதீது பயில்மாலிய வானே
கொலைகளுக்கிட மெனவுதித்திடு கொடியதுஷ்டசு மாலி
கொதிசோரி மதுபானி குணகேடெனு மாலி ;

4. எனவுமுப்பெயர் கொளுமரக்கர்க ளிடர்விளைத்தத னுலே
இமையோர்கயி லைமேவி யுமையாளைமென் மேலே
இனையசெப்பியெம் மிறைவிசிற்பர வெழிலுமைக்கொரு
எளியார்க ளிடர்தீர மிசைமாவிடை வாகர் ; [பாகர்

5. பரசுவைத்தகை நிமலநிட்கள பரமவப்பணி வேணி
பணியார்கள் புரமெரிப் பர்வெங்கை பூணி
வரமிகுத்திடு கருவமிக்குள வலுவரக்கர்கள் மூவர்
வகைசெய் திடுவோர் மமதையேயுள பாவர்.

6. சகவுபத்ரவ மதுவுமிப்படி செய்வித்தது மெனமோ
தெரியாதது போலே சிவன்என் மனமோ
பகையறுத்திடு மெனவவற்குரை பகருமுக்கண் முகனூர்
பரிவாகிய சுகேச பணியாகிய மகனூர் ;

7. எனையடுத்தவ ரவர்களுக்குநா மிடர்விளக்கில மகல்வீர்
இமையோரே நெடுமாலி னிடமேவிது புகல்வீர்
கனவரக்கர்கள் வலியறுத்திடு கையுமவர்க்கொரு கடனே
கடன்மேனி யனைநாடல் கதியாமென வுடனே ;

8. மணிதரித்திடு முரவிசித்திர மலர்மகட்கிறை யவனே
மதுசூதன முராரி வலுவாழியுள் ளவனே
பணியணைத்துயில் பவனிருக்குமுப னிடதமொத்திடு கடலே
அயிராவத வமுமாவு மதுமேவரு கடலே.

9. அமரருக்குறு துயர்விலக்கிய ததுதிருத்தகு கடலே
அருள்மாமதி யைவானி லருள்சீர்பெறு கடலே

*   *   *   *

*   *   *   *

10. நவமணிக்குவை கனகமிக்கது நளினமுற்றிடு கடலே
நலமேவு சுயமான நகைபூணிய கடலே
தவமிகுத்தவ ருரைசெய்கற்பக தருவையுற்றிடு கடலே
தவந்தனிதி மேவு சதிரேயுன் கடலே.

11. அரவணைத்துயில் பவனிருப்பிட மழகுபெற்றுயர் கடலே
அருள்வாரி பொருள்வாரி யரசாகிய கடலே
வருணனுக்குயர் நகரமுற்றிலு மகிமையிட்டிடு கடலே
வளர்தேனு முலைமீதில் வருபாலுயர் கடலே.

12. இடமெனச்சொலி வருமவர்க்குமுன் னினியரக்கர்கள் மாள்வ
ரிடர்தீரு மவர்வானில் இமையோர்களே வாழ்வர்
நெடுபுவிக்குயர் தருமமிக்கவு நிலைபொறுத்தத நீத
நெறிமீறி யுலகேழு நிற்றலிற்வா யகலாத ;

13. மழைதழைத்தன வுயிர்பிழைத்தன மனமகிழ்ச்சிக ணீடும்
வகைவாரி யதிஞேசை வரவேதிரை யாமே
கருவமுக்கிய நிசிசரப்படை களையறுக்குமு பாய
கதிதேடி யமரர்ப கவனூரண ராய

14. இறையிடத்தினில் வருமவர்க்குமு னெதிர்கொடுப்பது
இசைவான திரைகூடி யெதிரேவரு மேலே [போலே
நெறிகள்தப்பிய கொலையரக்கர்கள் நிபிடதுர்ச்சன ராலே
நிலைமாறி யலைவாகி நெடிதோடிய காலே;

15. உடலினைத்துடன் வெருகளைப்புக ளுறுமவர்க்கெதி ராக
உயர்வான பனிநீரி னுடுவாசனை யாகத்
தடமலர்க்கைவிசி றியெடுத்துவிசி றுவதொத்தது குளிரே
தருநீள்புன் னையின்மேவு தட்பமாகிய தளிரே.

## தேவர்கள் திருப்பாற்கடலில் திருமாலைக் காணுதல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

சருகுகனி காய்கிழங்கு புசிக்கு மெங்கள்
தவத்துக்கே விடர்செய்த வரக்கர் சோரி
பருகியவுத் தண்டகோ தண்ட பாணி
பருதிகுலம் விளங்கவரு பார்த்தி பேந்திரா
நிருதர்பய மொழிந்திடவே வந்த தேவா
நிலைகலங்கா தபடிக்கே யமர தேகந்
தருவமுத மளித்திடும்பாற் கடல்வை போகந்
தனைக்கண்டார் சேடசய னனைக்கண் டாரே.

## திருமால் சிறப்பு

தோடி ராகம்] [ஆதி தாளம்

பல்லவி

சேஷ சயனத்திற் கண்டாரே—கண்டு மகிழ்ந்து
தேவர்க ளானந்தங் கொண்டாரே.

அநுபல்லவி

கோஷமேவு திருப் பாற்கடல் நடுநிலை
கொண்ட கொண்டல் மேனியனை யாயிரந் தலை (சேஷ)

சரணங்கள்

1. காயாம்பூநேர் மெய்யானைக் கலந்தாழிச் சேர்க்கையானை
மாயாந்தகனை வையானை வனமாலி யானை
தூய பிரமன்முத லாய தேவர்களுக்குஞ்
சுருதிக்கு முனிவர்க்குந் துறந்தமெய்ஞ் ஞானிகட்குங்
காயமே யுலர்த்தி யோகஞ்செய் வார்களுக்குங்
காணொணடி யார்கண்ணிற் காணுந்த யாபரனை (சேஷ)

2. பாதாம்பு யத்தினனைப் பாஞ்சசன் னியத்தினனைப்
போதார்ந்த வயத்தினனைப் பொருளாகி னனைப்
போதாமா முனிவர் சூழநின்று ஒருக்காலே
புகழ்ந்து நாரதர்பாடி நடித்துமுள் ளன்பினாலே
காதலாய்ப் பணியப் பாற்கட லதன்மேலே
கருங்கடல் போற்கிடந்து கண்வளர்ந் திருமாலை (சேஷ)

3. வாடாமு கவிலாசனை மலர்மா துறையுநேசனை
தாடாளனை உல்லாசனை சாரங்கத் தானை
கோடி மன்மதநிக ரானசுந் தரத்தானை
கொண்டு வலக்கைக்கீழ்க் கொடுத்திடுஞ் சிரத்தானை
யோடவைத் தங்கம்போ லொளிர்பீதாம் பரத்தானை
யுலகங்க ளனைத்துமுள் ளடங்குமு தரத்தானை (சேஷ)

4. பேராயிரங் கொண்டானைப் பெருமண்டல முண்டானைக்
கோராரிட மண்டானைக் கூர்ம மானனை
வார்கடற் குள்ளிருந்து சூரிய னெழுந்திட
வகையாய் மார்பினிற்கவுத் துவமணி ஒளிவிட
சீர்செல்வி நிலமகள் செங்கையி னல்வருடச்
சிவந்த கமலமலர் சேவடி பணிந்திட (சேஷ)

5. தொண்டர்க்குள்ளாய் நின்றானைத் துதிவேழமுன்
[சென்றானை
அண்டர்துயர் வென்றானை அரியாகி னனை
வண்டுபிர மன்வட மேருக்கோட் டையின்சாதி
வலியகசங்க ளிதழென வண்டமெ னுஞ்சோதிப்
புண்டரீ கமலர் புறப்பட விட்டநீதி
போன்றவுந் திக்குளத்துப் பூரணன் தன்னையாதி
(சேஷ)

6. பீமாங்க மூர்த்தியானை மிகவாகுங் கீர்த்தியானை
நாமாது மேத்துவானை நாரா யணனை
மாமாலைக்குப் பூண்கட்டும் வகையேதோள் வளைநீடும்
வரிசை யிரண்டுமுத்துப் பவழங்குண் டலத்தோடும்
தாமரை யிரண்டும்வில் லிரண்டுமீ துடன்கூடுஞ்
சந்திரமண் டலமொத்த முகத்தானை யிசைந்தாடும்
(சேஷ)

வாழும்பல் லாண்டினே மதுசூதனப் பெம்மானைச்
சூழுமானந் தத்தேனைத் துளபமா லோனை
ஆழிமுத லாயுத மைந்துங்காவ லாயுற்ற
வனந்தபோ கத்தின்மேலே கருடனு லாவிச்சுற்ற
ஊழியா யிரங்க ளொருகண மாயுதித்த
யோக மிகுந்தவனை யுயர்ந்தம கிமைபெற்ற. (சேஷ)

## இந்திரன் திருமாலைத் துதித்தல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

போரங்கந் தனிலிரா வணனை மாட்டிப்
பொன்னிலங்கை வீடணர்க்கே கொடுத்துப் பின்னுஞ்
சீரங்க நாயகனை யருளிச் செய்த
தீரரகு பதியின்னுந் தெரியக் கேண்மோ
காரங்க மேனிவிராட் புருடா தார
கப்பிரம மூர்த்தியருட் கடலாய் நின்ற
சாரங்க பாணியிரு தாளுந் தன்னி
தயஞ்செய்வா னிந்திரன்து தியுஞ்செய் வானே.

பைரவி ராகம்] இதுவுமது [சாபு தாளம்

பல்லவி

எவர்தா மறிவா ருனது மாயலீலை
எனையாண்ட பரம புருடா

அநுபல்லவி

நவ மோகனனே பவ மோசனனே
நளின லோசனனே சுந்தரனே
தவத்தின் முனிவர்க்குமே லெவர்க்குங் காண்ப தரிய
புவன நாதனின் திருவடியின் மகிமை (எவர்தாம்)

சரணங்கள்

1. பலவா மண்டமும் படைத்தளித்துப்
படியா யொழியும் படியே
யுலகேழையுமுண் டுமிழ்ந்துநீ யளந்தாய்
உபநிடத நூலதன் முடியே

நலனே பூரணனே காரணனே
நலியாதா ரணனே நாரணனே
நிலநீர்தீ வளியாகி நிறைந்தவெ ளியுமாகி
நிலையுயிர்க் குயிராகி நின்றிடு நின்கருத்தை (எவர்தாம்)

2. செயமாய் நின்றசெ ழுஞ்சுடராய்ச்
சீவனு கியுமே விதியாய்
நயமாய் விளையா டவுமேநீ யகண்ட
நல்லுயிர்க் குயிர்போலே நிதி
யாயபரந் தாமாபி ராமா
வாயிர நாமா சாருவ பூமா
தூய சொல்லுட் பொருளாகிச் சுகாந்த மாகி
இயலெள்ளுக்கு ளெண்ணெய்போ லெங்குமாய்
[நிறைந்ததை (எவர்தாம்)

3. கடகாதிக் குக்கன கமதாய்க்
கடல்மேற் றிரையை நிகராய்ப்
படிமே லெழுதா ளதுபோ லுன் னிடத்தில்
பலசு ரர்மனு வென்றுபகர்
அடியாய் வந்தாயே விந்தாயே
யகமகிழ்ந் தாயே தந்தை தாயே
அடைவாயன் னியமாகி யருவு முருவுமாகி
நடுவான பெண்ணலியாய் நீநாடகஞ் செய்குவதை
(எவர்தாம்)

4. பிறவா னென்னும் பிறப்பானுமாய்ப்
பலமாய்ப் பெரிதா னவனே
நிறைவாயுள தாயிலதாய்ப் பகையில் லானே
நெடுமா லேயிருடி கேசனே
கருணையா கரனே வீசுரனே
கனதா மோதரனே சீதரனே
உறுபல சமயநூ லுதவின வனுமாகி
மறையி னுருவமாகி மந்திரங் களுமான (எவர்தாம்)

5. கசடாம் பவக்கடலை விட்டுக்
கரையே றவுமே யறியார்
அசடா கியபல சமயந்த னில்மயங்கி
யவத்திற் பிறந்திறக்குஞ் செறியார்

விசுவ சொரூபனே கேசவனே
விமலேமார் பவனே மாதவனே
அசையாத கண்டனுகி ஆதியந்த மில்லேயாகி
நிசமாயச் சுவத்தனுகி நிறைநின் கருணையை
(எவர்தாம்)

6. பகையாக வேபற...வவுணர்
படையாம வண்வே ரறவே
வகையாந் திகிரி வளையுங்கை யில்வைத்த
மணிவண்ண னேயெங்க ளுறவே
அகர விகிதனே யச்சுதனே
ஆரா வமுதனே அற்புதனே
அகிலபு வனங்களே யணிந்துமா லிலேமீதில்
மகிமைபெறு திருக்கண் வளர்ந்து மகிழுமிடம்
(எவர்தாம்)

7. அருவேதி யற்கன விடமாய்
அடியா ரிடமே யவராய்
வருயோ கியர்தன் மனதினி டமதாகி
மாஞானிக் கெங்கு நிறைபவராய்
அரிபிர ணவனேஓ ரிறையவனே
ஆனந்த பவனே பிராபவனே
திருப்பாற்கடல் விளங்குந் திவ்வியமங்க ளமூர்த்தி
அருட்பாற்கட லாயென்னே யாண்டவன் பெருமையை.
(எவர்தாம்)

## தேவர்கள் தங்கள் துன்பத்தைத் திருமாலிடம் முறையிடல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

பத்தியுட னிப்படிக்கே தேவ ராசன்
பணிந்துதுதி திருச்செவியில் சாத்தக் கொண்டு
நித்தியநி ரஞ்சனமாய் நின்றான் யோக
நித்திரையி னீங்கியெழுந் துவந்து நீங்க
ளுற்றவகை யேதெனவே தேவ ரெல்லா
முலகத்தினில் தென்னிலங்கை யரக்கர் செய்யு
பத்திரமத னல்மெலிந்து மேப டுந்துன்
பஞ்சொல்வார் மனச்சஞ்ச லஞ்சொல் வாரே.

............ராகம்] இதுவுமது [ஜம்பை தாளம்

பல்லவி

உந்தனிரு பாதார விந்தமே கதி
வேதத்துட் பொருளே கிருபை யாளனே.

அநுபல்லவி

செந்திரு வளர்மார்ப தேவாதி தேவனு நீ
திக்குவே றில்லை ஐயா அரியே (உந்தனிரு)

சரணங்கள்

1. வலிய தீவர கருவமிகு லங்கை
யரக்கரா மைபோலு நிறமாலியே
உலகெலா மிகமெலிய விரைக்கோட்டைக் கெலிபோலே
யுண்டாகிய சுமாலியே
கொலைகார ரிருவற்கும் பெரிய மாலியவான்
குடிகேட ரிவர் சோலியே
சிலுகுபல வாய்நாங்கண் செக்கிலெள்ளுப் பிழைத்தாப்போல்
தெ............தோம் வனமாலியே—அரியே (உந்தனிரு)

2. ஊழி நெருப்பெனு மரக்கர் குலத்தை வே
ரறுத்துமினி உலகாள்வை வாளின் கையா
ஆழியனே கார்க்குக்களை யெடுத்தாப்போல் அவர்களைநீ
யழியாது விடுதியேல் மெய்யா
ஏழுலகி லுயிர்களையு மின்றுதொட்டுப் படைக்க வேணு
மென்ன சொல்வோ மபயந் துய்யா
வாழுமரச னிருக்க நகருமழி வதுமிலையே
வந்தோ மெங்கள் குறை தீரையா—அரியே (உந்தனிரு)

3. சுத்திக் காதவழிக் கொருத்தருமில் லாததனு
லசுவமேத யாகம் பண்ணு முனே
சத்திய சௌசமில்லா பாவிகையிற் காட்டிக்கொடுத்தா
லாரு துணைபெம் மானே
இத்தனை யவதிக்கும் பராமுகஞ்செய் யொண்ணுதே
யினியருள் செய்செங்கண் ணனே
புத்திரரை வளர்ப்பதற்குந் தாய்க்குண்டோ வுபசாரம்
புண்ணிய னேஎம் பிரானே—அரியே (உந்தனிரு)

## அரக்கர் படையெழுச்சியும், திருமால் தேவர்கட்கு அபயமளித்தலும்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

கண்டகரா கியவரக்க ருபாதி யாலே
 கடவுளரு மிருடிகளுங் கயிலை நீல
கண்டனிடஞ் சென்றுரைத்துக் கூவும் போது
 கங்கைசூ டியுமந்திர மொன்றற் யீங்கெங்
கொண்டல்வண்ணன் பாற்செல்வீ ரென்று ரென்றுங்
 கூறினர் நாரணனு மபயந் தந்தார்
அண்டரெல்லாங் களிப்புற்று ரென்றே கேட்டார்
 அழும்பினு ரரக்கர்படை யெழும்பி னரே.

**நாதநாமக்கிரியை ராகம்]** **[சாபு தாளம்**

பல்லவி

போரினிற் றெடுத்தார்—நாரணனுடன்
பொருதோட்ட மெடுத்தார்.

அநுபல்லவி

வீரம்பேசிக் கொண்டேயாம் வெற்றிபெற லாமென்று
 மாருமெதி ரிலையென்ற கருவங்கொண்ட மூடர்கள்
வாரிதியை யுங்கூட வைத்தடிப் போமென்று
 மாலிசு மாலிமா லியவான்ப டையுங்கூட (போரினில்)

சரணங்கள்

1. உரமிகுஞ் சிங்கம்புலி கரடிசெந் நாய்கழுதை
 ஒட்டகை பன்றிஆளி பட்சிபணி மீனேறி
யிரதகச துரகங்கா லாளிராக் கதரிரண்டு
 முகத்தர் நாலுமுகத்த ரைந்து தலைய
 ரிருபது கையோர்—அதிசூரர்
 பருவத மெய்யோர்—புலிமுகத்தர்
பரிமுகம் யானைமுகம் பலபல வகைமுகம்
 படைத்த வரக்கர்சேனைப் படைத்தலை வருஞ்சூழப்
பரசுசூ லாயுதம் வேலாயுத மும்பிண்டி
 பாலமி ருப்புலக்கை பருத்த கத்திக ளீட்டி

பதினெட்டா யுதமும்—விருதின்னும்
பலவுமுச் சிதமும்—கொடுங்கணை
வரிசையும் ரெணபேரி வாங்காகர் ணபூரி
வாத்திய மொலிக்கவே நாற்றிசை சலிக்கவே
வரம்பெற்ற கருவமும் வாழ்வு மழிவதற்கு
வந்த தருண மென்றே சிந்தையி லெண்ணமல்
(போரினில்)

2. அண்டருல கம்புகுந் தாரையுஞ் செயிப்பமென்
றரியர னயன்மூவ ரதிகாரந் தமதென்று
சண்டனு மஞ்சவே யட்டகா சம்பண்ணிச்
சகல பிராணியும் பூமியும் நடுங்கவே
தடைமெத்தக் கண்டார்—பாராமலே
தொடைதட்டிக் கொண்டார்—வரும்போது
கொண்ட விரத்தமழை வருஷிக்கச் சமுத்திரங்
கொதித்துக் கரைபுரளக் குன்றங்கள் தெறிக்கவே
பண்டு விருத்திராசுரன் வலன்செம்பா சூரன்மேல்
பொருந்தே வேந்திரன் போலே
பருதியை மூடும்—பனியன்ன
வருவதை நாடும்—கடவுளர்
விண்டு சக்கரபாணி அபய மபயமென்று
வெருவுதல் கண்டங்கே கெருடன் மீதி லேறிக்
கொண்டு நாராயண னுதிக்க வரக்கர் கூடிக்
கொடுங்கணை பலபல விடுங்கை கலந்துசெய்து
(போரினில்)

3. நீல மலையைச் சூழ்ந்து கருமேகம் பொழிந்தாப்போல்
நிசிசரப் படைமாலை நெருங்கி யுலகுக்கூழி
காலம் வந்தது போலே மலையை மசகம்கூடிக்
கவிந்தாப்போல் கடைநாளில் காலாக்கினி யைப்
கடுங்கணை விடுத்தார்—இராக்கதர் [போலே
கொடுஞ்சண்டை தொடுத்தார்—பதுமநாபன்
தால நடுங்கக் கையில் சாரங்க மெனுமந்தத்
தனுவும் பாஞ்சசன்னியச் சங்கமுந் தொனிக்கவே
காலச் சொருபங்கொண் டேயரக்கர் படைகளென்ற
காட்டுக்குத் தீயாகக் கண்டங்கண் டங்களாக்கிக்

கையொடு சிரங்கள்—கழுத்துகள்
மெய்யொடு தரங்கள்—துண்டுதுண்டாக்கி
ஞாலத்தில் ரத்தநதி யோடிப் பிணங்குவிய
நாயு நரியுங்கூடிப் பேயுந்தின்று கொண்டாட
மேலுங் கவந்தமாட விழுந்த வரக்கர்பலர்
வேண்டிச்சில பேரோட மீண்டுஞ்சு மாலிவர
(போரினில்)

4. துடுக்கன் சுமாலிகணை சொரிந்துகை தோள்களெல்லாந்
துளைக்கக்கண் டரியங்கே களைக்காமற் சினங்கொண்டு
தடுத்தவன் தேர்ப்பாகன் தலைதூக்கிப் பரிநாலுஞ்
சரத்தாலே விழவெய்ய வரக்கன் மனங்கலங்கத்
தம்பியாமாலி—வந்தெதிர்க்க
அம்புகள்கோலிக்—கொக்கரிக்க
அடுக்களை பூனைபோலே தேவர் பதுங்கக்கண்ட
அச்சுதன் பாலேயவன் தேர்ப்பரியு மாளத்
திடுக்கென் றவனுமண்மேல் குதித்துக் கதையாலே
சிறகுள்ள கருட னெத்தியி லடிக்கும்போ
திகிரியை யேவி—மாலிபெருஞ்
சிரசறுத் தாவி—கொன்றபோது
நடுக்கத்துட னரக்க ரிருவருஞ் சேனையும்
நாடலங் கைமுகமா யோடச் சிறைக்கருடன்
முடுக்க மாலியவானும் பொருதுப லர்மடிய
முற்பிறப்பின் தவத்தால் தப்பியபா தாளஞ்சேர்ந்தார்.
(போரினில்)

## வானில் குபேரன் செல்லக்கண்ட சுமாலி, கைகசியிடம் கூறல்

### அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

இப்படி ரசாத லத்தி லிருக்குநாள் கடலே சூழ்ந்த
வைப்பினில் வருக வும்சு மாலிகை கசியாம் பெண்ணு
மப்பவே குபேரன் வான்மே லங்குப்போ வதையுங்கண்டே
மைப்படிக் கண்ணு ளுக்கோர் மதிசொல்வான் கதிசொல் வானே,

பைரவி ராகம்] இதுவுமது [ஆதி தாளம்

பல்லவி

எந்தன் சொற்படி கேளு கண்ணே—கைகசியே
யெழின் மிகுந்த [வ]பரஞ்சிப் பெண்ணே.

அநுபல்லவி

கந்தருவன் குலத்தில் வந்த கேதுமதி—யென்
காதலி யானந்த மாது சவுந்தரி
யோதிம மேபுவி மீது சிறந்திட (எந்தன்)

சரணங்கள்

1. எந்தவொரு கன்னிகையால் மூன்றுகுலந் தானே கீர்த்தி
ஓங்கு கன்னிகாதான பலந் தானே
திருவைப்போ லுன்னைச் சொல்லு நிலந் தானே
ஒருசேதி யுரைப்பேனின்னு நலந் தானே
பெருமை பெருகியதோ பாரவன் போலே வீர
பிரதாப முள்ளபிள்ளை பெற்று மகிழ்ச்சி நேரத்
தருண மிப்போ நீகண்டாய் கணவனை நீ சேரச்
சந்ததி விளங்கவே யெந்தன் மனது கூற (எந்தன்)

2. தனபதி யிவனங்கு பேர னுமே—அயன்
தனயன் புலத்தியர்க்குப் பேர னுமே
கனமிகு வரம்பெற்ற வீர னுமே—தெற்குக்
கடலினடுவி லங்கை யூர—னுமே
கனகமய புஷ்பகவி மான மேற்கொண்டுங்
கடவுளர்க் கரசனுக் கிணையெனச் சொல்வ துண்டு
இனமிவ னுதிக்கங்க ளென்னசொல்லு வேன் விண்டு
மிப்படி மகன்பெற வேணு மென்றிதங் கண்டு (எந்தன்)

3. பன்றிபல குட்டியாற் பயனேது யானை
பருத்தகுட்டி யொன்றிற் பலன்புவி மீது
மென்றிது சொல்லுவார்க் கென்ன வாது மானே
எழுத்து விதியிருந்தா லுணுவுந்தப் பாது
ஒன்று கேளு விச்சிர வரிடந் தேடு
உறுதிகொண்டு நல்ல வரங்களை நாடு
நின்று வாங்கிக் கொண்டு களித்துற வாடு
நிலத்தி லவருடனே சேர்ந்தின்பங் கூடு (எந்தன்)

## புலத்தியர் கைகசிக்கு வரங்கொடுத்தல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

வண்டுகுழல் கைகசியிங் கிதனைக் கேட்டு
மாலைநே ரம்பவுலத் தியரி டத்தைக்
கண்டுதெய்வ பூசைசெய்யும் வேளை தன்னிற்
கரடியைவிட் டோட்டினது போலே சென்று
கொண்டுநிலங் கீறிநின்றாள் பேரூர் கேட்டுங்
குறிப்பறிந்தே யிவ்வேளை கொடூர மென்றே
விண்டுகொடிய ராக்கதரைப் பெறுவா யென்று
விதித்திட்டார் தவத்தினிலுங் கதித்திட் டாரே.

### இதுவுமது

தம்பியிலக் குமன்முதலோர் பணியும் ராமச்
சந்திரனே கேளுமையா வுவமை யொன்று
கம்பளிமூட் டையிதென்றே யெடுக்கப் போகக்
கரடியதா யிருந்தவா றுச்சென் றெண்ணி
வெம்பிமுனி பதத்திலடி பணிந்தாள் மின்னாள்
வேதியர்சொல் வார்கடைசிப் பிள்ளை யாலே
அம்புவியில் புகழ்பெறலா மெனமூன் றறசே
யரைப்பெற்றாள் தசக்கிரீ வனைப்பெற் றாளே.

## இராவணன், கும்பகருணன், சூர்ப்பனகையாதியோர் பிறப்பு

சாவேரி ராகம்] [ஆதி தாளம்

பல்லவி

கேளுங் கேளுமையா—ராவணன் பிறந்ததைக்
கேளும் கேளும் ராமா.

அநுபல்லவி

தாளுமோ ரிரண்டு—தோளு மிருபது
தலையொரு பத்தோன் மை—மலையினை பெற்றேன்
வாளுக்கு மிணையான பல்லு—மிராக்கத
வடிவு மொளிசிறந்தான் படியில் வந்து பிறந்தான்
(கேளும்

**சரணங்கள்**

1. ஓரிகள் கதறிட நாய்கள் மூலைக்கு மூலை
   ஊளையிட வேநரி கூவ
   பாரினிற் பட்சிக ளிடசாரி வலசாரி
   பறந்து பறந்து விண்ணில் தாவ
   வாரி கொழிக்கமேகங் குமுறி யிடத்தூரத்த
   மாரி பொழிந்து கனல் - தூவ
   சூரியன் கதிரொளி மழுங்கியிப் படிபல
   துர்நிமித்தங்கள் தாமே மேவ—இன்னும் (கேளும்)

2. திக்குக ளெல்லா மொருவுருப் பட்டாப் போலே
   தேவரிஷிகள் பயம் பூண
   ஓங்கிய வுலகுக்குக் கண்டக னுகவந்தே
   யுதித்தானென் றனைவர்க்குந் தோன்றத்
   தூங்குங் கும்பகர்ணனுஞ் சூர்ப்பனகை யாம்பெண்ணுந்
   துணையாய் வர மலை நாண
   நாங்களெல் லோருமும்மை யயோத்திமா நகரினில்
   ராசசே கரனுகக் காண வென்றும் (கேளும்)

3. நல்ல மரத்தினிற் புல்லுருவி முளைத்தாப் போலே
   நான்முகன் குலத்தில் வந்தானையா
   வல்லரக் கனைக்கண்டா லெமனு நடுங்குவானே
   வாய்பேச்சோ எங்கள் சொல்லும் பொய்யா
   வெல்லப்பட் டவனுக்குத் தெரியும் படைக்க லக்கமன்
   றெழுதின வெழுத்தழிக்கப் போமோ துய்யா
   கொல்லுங்கொலைக் கஞ்சாத ராட்சதன் செய்கையின்னுங்
   கூறுவேன் ரகுநாதா கோதண்டக் கையா வீரா.
   (கேளும்)

## விபீடணன் பிறப்பும், இராவணன் கோகர்ணத்தில் தவமியற்றலும்

**எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்**

மையரிக்கண் கைகசிக்குக் கடைசிப் பிள்ளை
   மதிமானும் விபீடணனும் பிறந்தா னையா
வையகத்தில் நால்வர்களும் வளர்ந்தா ரிப்பால்
   வானவர்க்கு மிருடிகட்கு மிடைஞ்சல் மிக்க

செய்யுநா ளன்னைசொல்லாற் குபேரன் போலே
திறம்பெறக்கோ கர்ணதலஞ் சேர்ந்து மங்கே
செய்யபஞ் சேந்திரியங்கள் தனைய டக்கிச்
செபஞ்செய்தா னிராவணனுந் தவஞ்செய் தானே.

## இராவணன், கும்பகர்ணன், விபீடணன் ஆகியோர் தவநிலை

**த்விஜாவந்தி ராகம்]** **[ஆதி தாளம்**

**பல்லவி**

தசக்கிரீவனுந் தம்பிகளுஞ் செய்த
தவஞ் சொல்லக் கேளுமையா.

**அநுபல்லவி**

திசைக்கு ளாருந்தலை யசைக்க வுறுதியிற்
சேகர மாய்மன தேக மாய்ப்பரி
வாகிய நேமமாய்க் கோகர ணத்தினில் (தசக்கிரீவ)

**சரணங்கள்**

1. உக்கிர வெய்யில தோங்கிய மாதம
தாகிய வானியாடி தன்னிலு றுதியதாய்க்
கும்பகர்ணனும் பஞ்சாக்கினி மத்திதன்னிற் கூடி
மிக்கவும் வருடா காலத்தில் வெளியினி
லசையாம லிருப்பது நீடிப் - பனி
மிகுந்திடு நாளையிற் சலத்தினி லிருந்துகொண்
டரிய தவங்களைத் தேடித்
திக்குகளெல் லாமயங்கத் தேவர்களெல் லாந்தயங்கத்
தக்க குபேரனை வெட்கிடச் செய்யவென்
றக்கரை யாகவ ரக்கர் சிகாமணி (தசக்கிரீவ)

2. தருமத்திற் சிந்தனை பெருகிய வீடண
ராச(ன்) நியமத்திற் சேர்ந்து - வேத
தத்துவ மாயொரு காலில் நின்றுகொண்
டையாயிர வருஷந் தீர்ந்து
கருமத்தை யெண்ணுமல் தண்மையில் மிக்கவுங்
கலந்தித யங்களி கூர்ந்து – இரண்டு
கைகளை வுயரத் தூக்கியை யாயிர
வருஷந் தவத்தினில் தேர்ந்து

மருமலர் வானோர் சொரியமண் டலத்தில்புகழ்
விரிய அருமையாய்ச் சுவர்க்கத்தி லிருக்கின்ற
சுகம்போலே ஒருபதினுயிர வருஷமுந் திரமாக
(தசக்கிரீவ)

3. தயரத ராமனே கேளுமையா—வந்த
ராவண காதகன் கோரம் - பத்துத்
தலையினி லொன்பது தலையொன்ப தாயிரம்
வருடத்தி லதிக கொடூரம்
மயமாக வரிந்தத்தை யக்கினி குண்டத்தி
லாகுதி செய்திட்ட வீரஞ் - சொல்ல
வாக்குண்டோ நாவுண்டோ வென்னென்று சொல்வது
அரக்க னுடலான தீரந்
தயவு நீங்கிச் சாவை(யி)ட்டுச்
சமுத்திர முழங்கால் மட்டு
பயமில்லை யென்றுரை வயணத்தை யெண்ணியே
உயிருக்குத் துணிந்தவன் சுயசூர னல்லவோ.
(தசக்கிரீவ)

## இராவணன் எதிரில் பிரமதேவன் தோன்றுதல்

### அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

மூவர்களு மிப்படிக்கே யொருபதினு யிரவருஷம்
முயன்றார் பாரில்
யாவர்களும் நடுக்கமுறத் தசமுகன்பத் தாந்தலையை
யரிய வென்றே
வீவதற்குத் துணிந்ததுகண் டண்டகடாக நடுங்கும்
வேளை கண்டு
தேவர்களும் புடைசூழச் சேயன்வந்தார் மலர்மீதி
லயன்வந் தாரே.

## இராவணன், விபீடணன் ஆகியோர் வரங்கள் கேட்டலும் பிரமதேவன் அவற்றை அளித்தலும்

காம்போதி ராகம்] தரு [சாபு தாளம்

1. வந்தேன் வந்தேனடா பொறுபொறு மிஞ்சாதே
வரமென்ன வேணுந் தசமுகனே இப்போ
உந்தன் தவமுங்கண்டே னெந்தன் மனமகிழ்ந்தேன்
உகந்தேன் கண்மணி தசமுகனே.

2. மேதினி படைத்தோனே சரசுவதி நாயகா
விதியே போதனே பிரம்ம தேவனே
மாதவ முகுந்தமால் திருவுந்திக் கமலத்தில்
வந்த சதுர்முகப் பிரம்ம தேவனே.

3. கருணைபெரு வெள்ளமாந் தேவரீர் திருவடி
காணப் பெற்றேனே பிரம்ம தேவனே
உறுதியொருமை செலுத்துமென்னை யாள்வது மெய்யாற
லொன்று விண்ணப்பம் பிரம்ம தேவனே.

4. மரணத்தைங் காட்டிலும் வேறொரு பயமிந்த
வையகத்தி லுண்டோபிரம தேவனே - சாமி
சரணஞ் சரணமையா எமனைக்காட் டிலுமொரு
சத்துரு வுண்டோ பிரம்ம தேவனே.

5. அமரர் கருடர் நாகர் எட்ச ரிராட்சத
ரசுரர்களாலே பிரம்ம தேவனே - எனக்
கமடுவா ராமற்சாகா வரந்தர வேணுமையா
அயனே வேதாவே பிரம்ம தேவனே.

6. மனிதர் முதலானோ ரெனக்கெதிரோ ஒருதுரும்பு
மாத்ரமையா பிரம்ம தேவனே - அதை
நினைவிற் பொருட்டாயெண்ணி நான்கேட்க வில்லைவேத
நிதியே சுயம்புப் பிரம்ம தேவனே.

7. அந்தப்படியே தந்தே னின்னமு மொருவர
மதிகங் கொடுப்போந் தசமுகனே - நீயு
முந்தியோ மத்திலிட்ட தலையறுக்க வறுக்க
முளைக்கு மடாதச முகனே.

8. எந்த வேளையி லென்னரூபந் தரிக்கவென்று
மெண்ணிக்கை கொண்டால் தசமுகனே - அப்போ
வந்தரூ பங்களெல்லா முனக்கே வரக்கடவ
தாகுந் தந்தேன் தசமுகனே.

9. வேதநெறி மிகுந்த பௌலத்தியர் குலத்தில்
விளங்கும் பிள்ளையே விபீஷணனே - யோக
சாதனே செய்துநீ புரிந்த தவத்தில்மிகச்
சந்தோஷ மானேன்விபீ ஷணனே.

10. தவத்தள வாகுமாந் தான்பெற்ற செல்வமென்று
சாற்று முலகுவிபீ ஷணனே - உந்தன்
கவலையைச் சொல்லிவரங் கேட்பது தருகிறேன்
கண்ணே மணியேவிபீ ஷணனே.

11. பூமியந்தர சொர்க்க மூன்றுக்குங் குருவான
புண்ணிய வானே பிரம்ம தேவனே
சாமிசாமி யென்தவத்தினிற் சந்தோஷ மெய்யானுற்
தமியேன் விண்ணப்பம் பிரம்ம தேவனே.

12. தீங்கேதுகள் வந்தாலும் அதர்மத்தி லேமனஞ்
செல்லாதிருக்கப் பிரம்ம தேவனே - மிகப்
பாங்காகப் புண்ணிய சிந்தனே மனதினிற்
பதியவுந் தாரும் பிரம்ம தேவனே.

13. வையகந் தன்னிலெந்தச் சீவன்கள் மேலுந்தய
வாகவிருக்கப் பிரம்ம தேவனே - தந்தென்
ஐயனே தேவரீர் பிரம்மாத்திரமுந் தந்தேயருள்
செய்ய வேணும் பிரம்ம தேவனே.

14. தந்தேன்தந்தே னீயு மரக்கர்சா தியில்வந்தும்
சாந்த மிகுந்தாய் விபீஷணனே - இன்னு
முந்தனுக் குயர்தேவ பதமுஞ் சிரஞ்சீவியு
முவந்து கொடுத்தேன் விபீஷணனே.

## கும்பகருணனுக்கு வரங்கொடுக்க எண்ணிய பிரமனிடம் தேவர் முறையிடல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

இப்படிக்கி ராவணன்வீ டணனி ரண்டு
விராக்கதற்கும் வரங்கொடுத்தா ரிப்பா லையா
வப்படிக்கே கும்பகர்ணன் முகத்தைப் பார்த்தே
அயன்திரும்பும் போதுபின்னே வமர ரெல்லாம்
எப்படிக்கென் றகங்குழைந்து நடுக்க மெய்தி
யிங்கிவன்பால் வரங்கொடுப்ப தெண்ண வேண்டா
மைப்படிக்கண் வாணிமன்னு வென்றே மிக்க
மறைசொல்வார் தங்கள்மனக் குறைசொல் வாரே.

### தேவர்கள் முறையீடு

**காபி ராகம்]** **[சாபு தாளம்**

பல்லவி

இவன் பாதகனுக்கு—வரமுங் கொடுத்தால் நாங்க
ளேது பிழைப்ப தையா.

அநுபல்லவி

அவனிக்குக் கும்பகர்ணன் கண்டக னென்பது பொய்யா
வஞ்ச ராட்சத னையா—பிரம்ம தேவரே (இவன்)

சரணங்கள்

1. வெறுவாய் மெல்லுறவனுக் கவலகப்பட்டால் மேலும்
விடுவானோ சொல்லுஞ் சொல்லும்
கருவக்கார னவனை மோசஞ்செய்ய வேண்டிப் பல்லுங்
கெஞ்சுகிறோம் நில்லு நில்லும் - பிரம்ம தேவரே
(இவன்)

2. கிளியை வளர்த்துப்பூனை கிட்டவுங் கொடுக்கலாமா
கேட்ப தென்ன வய நாமா
எளியார்போ லெங்கள்மன திப்படிக்கு மிகநோமா
என்ன சொல்வோம் பரந்தாமா - பிரம்ம தேவரே
(இவன்)

3. நரிக்குக் கொண்டாட்டம் நண்டுக்குப் பிராணவத்தை
[யென்றே
நாட்டினிற் சொல்லுவ தொன்றே
தரிக்க வொட்டாமல் தேவ - ரசுரர் பலரைத் தின்றே
சாதித்தான் பிறந்த வன்றே - பிரம்ம தேவரே.(இவன்)

## கும்பகர்ணன் நெடுங்காலந் தூங்குதற்கு வரங்கேட்க, பிரமன் அதை யளித்தல்

**எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்**

*புந்திநொந்து தேவரிட்ட முறையைக் கேட்டே*
*போதனங்கே பாரதியை நினைக்க வுந்தாந்*
*தன்மனதின் படிக்கேகும்ப கர்ண னுடைய*
*நாவிருந்து சொல்லென்று ரைக்கி சைந்தா*
*ளந்தநிலை கண்டவனே வரத்தைக் கேளென்*
*றதிகமாய்ப் புகழ்ச்சிசெய்தா ரவனுங் கேட்பான்*
*எந்தனுக்கு நெடுங்காலந் தூங்க வென்றே*
*எடுத்திட்டா னப்படிக்கே கொடுத்திட் டாரே.*

## வரம்பெற்ற கும்பகர்ணன் நிலையும், இராவணன் முதலானோர் வனத்தில் வசித்தலும்

**புன்னுகவராளி ராகம்]** **[மிச்சிர[சாபு] தாளம்**

**பல்லவி**

*கோதண்டக் கையோனே - இரவி*
*குலத்தில் வருஞ் சோமா.*

**அநுபல்லவி**

*அந்தக் கொடிய ராட்சத சரித்திர*
*மின்னுங் கூறுவே னபிராமா*
*காதக னந்தக்கும்ப கர்ணன்*
*கருத்துருகி நின்று னென்ன*
*காரணமாய் முடிந்த தென்றே*
*கலங்கிமன மழன்று னையா* (கோதண்டக்)

**சரணங்கள்**

1. *பாதாளஞ்சனம் போட்டு—நாயின்*
*பருத்தெலும் பிழுத்திட்ட*
*பழங்கதை யாச்சு தென்றே—சிந்தையிற்*
*கருதினன் கும்ப கர்ணன்*
*ஆதியில் விதியெழுத்தைப்—புத்தி*
*யனுசரிக்குமே மெய்யே—இந்தப்*
*பேதகந் தேவர் செய்தன ரென்றுகை*
*பிசைந்து கொண்டான் திரும்பவும் வீர*
(கோதண்டக்)

2. எக்காலுங் கொம்பிற் றேனை - முடவ
னிச்சை கொண்டால் வருமோ - தின
முக்காலுங் காகந் தண்ணீர் - குளித்து
மூழ்கினு லுங்கொக் காமோ
மிக்காங் கங்கையிற் படிந்தும் - பேய்ச்சுரை
விரைந்து நல்லதா யாமோ - பலந்
தக்கா........போனுன் கேளுங்கேளு மையா
சகல சத்துரு சங்காரஞ் செய்யுங் (கோதண்டக்)

3. ஊருடன் பகைக்கின் வேருடன் கெடு
முறுதி யென்பாரே பெரியோ - ரிதைப்
பாரும்பாரு மின்னு மென்ன - காட்சி
பரதன் பணியும் பாதா
ஆரு மஞ்சு மிராவ ணுதிகள்
அமர்ந்திருந் திடுமிடத்தைச் சொல்லிற்
பேருஞ் சிலேட்டுமா தகவன - மதிற்
பிரபல மாகவிருந் தாரே - ஐய. (கோதண்டக்)

## சுமாலி இராவணனிடம் இலங்கையை அடைந்து வசிக்குமாறு கூறல்; இராவணன் மறுத்தல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

இந்தவகை யறிந்திரா வணன்தன் பாட்டன்
இராக்கதன்சு மாலி-ரசா தலத்தை விட்டு
வந்துபிர கத்தன்விரு பாட்ச னின்னு
மாரீசன் மகோதரன்சூழ் வரவே நந்தஞ்
சொந்தவிலங் கையையுன்முன் னேன் குபேர னுள்வான்
சொல்லக்கே ளப்பதியை யடைவா யென்று
னெந்தனண்ண னேஎன்குருவோ டெதிர்க்க வொண்ணு
தென்றிட்டான் பேசாம னின்றிட் டானே.

## இலங்கையை அடைந்து வாழுமாறு பிரகத்தன் இராவணனிடங் கூறுதல்

கலித்துறை

காலக டங்கட னிப்படிக் காய்வன சாரிசில
காலமி ருக்குமந் நாளையி லேயைய காகுத்தனே
மேலவன் மாமன் பிரகத்த னென்பவன் வேண்டியானு
கூலம தாயொரு காரண முங்கொண்டு கூறுவனே.

சுத்தசாவேரி ராகம்] [ஆதிதாளம்

பல்லவி

எந்தன் வார்த்தையைக் கேளு மருமகனே - யந்த
இலங்கையிற் சேரு - தசமுகனே.

அநுபல்லவி

உந்தனுக்குத் தெரியாத புத்திகள்நான் சொல்வ தென்ன
உண்டுஉண்மை கண்டுவொரு பண்டுமொழி கொண்டு
[சொல்வேன் (எந்தன்)

சரணங்கள்

1. கனத்தவ னுக்குஅண்ணன் தம்பியென்பது மேது
காசிபர்க்குத் தான்திதி யதிதி யிரண்டுபேர் மாது
இனத்தின் மூத்தவ ளறுபத் தாறு கோடிபேர்
தயித்தியரைப் பெற்ருள் சரித்திரங் கருத்துக்
கேளும் (எந்தன்)

2. இளையாள் திதியொரு முப்பத்து மூன்று கோடி
யென்ற தேவரைப் பெற்ரு ளிவர்க ளரியைக்கூடி
கிளைக்கு மூன்றுலகுக்குக் கரணமா (?) ரசுரரைக்
கெலித்தேயவர் வலுத்தா ரையா பெலத்தார்க்கே
[ளிலத்தாதிக்கம் (எந்தன்)

3. தனக்கு மிஞ்சி யல்லவோ தருமங்கள் செய்ய வேணுங்
தாயார்கை பொன்னிற்றன் கைத்தவிடு போதுங் காணு
மெனக்கு மெந்தனைப் பெற்ரேன் தனக்குமுன் தாய்மாருக்கு
மெல்லார்க்குஞ் சல்லாபமாம் வல்லாளனே யுல்லாசனே.
(எந்தன்)

## இராவணன் பிரகத்தனைக் குபேரனிடம் தூதனுப்பல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

மூலகார ணம்பிரகத்தன் சொன்ன தாலே
முகூர்த்தமொன்று தசமுகனு மாலோ சித்தான்
மேலவனைக் குபேரனிடம் தூத னுப்ப
வேயிலங்கை யரக்கனெந்தன் பாட்டன் காணி
யாலென்பால் விடவுனக்கே தரும மென்ரு
னவன றிந்து பிதாவிடத்தில் வந்து சொல்லப்
பாலகனே யவனுடனே வுனக்கு மென்ன
பகையென்பார் விலகுவதே வகையென் பாரே.

ஆனந்தபைரவி ராகம்] இதுவுமது [ஆதி தாளம்

பல்லவி

உறுதி சொல்லுவேன் வேத சீலா - வந்த
வுண்மையைச் செய்வ.... ...யால்.

அநுபல்லவி

பொறுமையோ ரரசாள்வார் பொங்கினவர் காடுறைவார்
பூமி வழக்கச்சொல்ல தாமே குபேர நல்ல (உறுதி)

சரணங்கள்

1. துட்டனைக் கண்டால் நல்லோர் தூர விலக வேணு
முட்டன் வரமடைந்த முழக்கமென்ன தான்தோணுஞ்
சிட்டனீ யானதாலே தெரிந்தோவுன் மனங்கோணும்
திட்டமா யுன்வாழ்வு செழிக்கவென் னன்புபூணும் (உறுதி)

2. அரக்க னுடன்பகைத்தா லதனாலே தையாலாபம்
வரக்காண்ப துண்டோசொல்லு வந்திடு மேகலாபந்
தரைக்குள்ளே கெட்டமாடு தான்தேடுமுன் னெட்டுலாபம்
பெருக்கத் தேடலாமின்னும் பெருகுமுந்தன் பிரதாபம் (உறுதி)

3. கைலாச மலைச்சார்பின் கண்மந்தா கினிதீரம்
வயணந்தேவ கின்னரர் மற்றுள்ள பரிவாரம்
பயிலுமிடத் தைச்சேர்ந்தால் பலருக்கு முபகாரந்
தைரிய சாலிநீயுன் சுகுணத்துக் கிதுசாரம். (உறுதி)

## குபேரன் இலங்கையைவிட்டு வெளியேறுதலும், இராவணன் தம்பியருடன் அங்குச் சென்று முடிபுனைதலும்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

தாதைசொன்ன படிக்கிசைந்தா னையா ராம
சந்திரனே கேளுமையா தன்தன் சேனை
பாதியாம் பெண்டுபிள்ளை சகல பாக்கிய
மதனுடனே யிலங்கைவிட்டே யப்பால் வந்தா
னீதறிந்தா னிராவணனு பிரகத்த னாலே
யெழுந்துதம்பி மார்சேனை யுடனே லங்கை
மீதுசென்று முடிபுனைந்தா னவனுக் காக
விளைந்தீட்டி ரரக்கரைவோர் களைந்திட் டிரே.

## குபேரன் அளகாபுரிப்பட்டணத்தில் வசித்தல்; இராவணன் கும்பகர்ணன் ஆகியோர் திருமணம்; இந்திரசித்து தோற்றம்

நாதநாமக்கிரியை ராகம்] தரு [ஆதி தாளம்

1. அஞ்சனை குமாரனெனுஞ் சிரஞ்சீவி யனுமானை
   அடிமை படைத்தவனே ரகுவீரா
   தஞ்சமென்ற பேர்களுடை நெஞ்சுக்கவலைகள்தீர்க்குந்
   தாசரதி நீயே நாதா ரகுவீரா.

2. வச்சிர வணனுமன திச்சையுடன் கைலைமலை
   மந்தாகினி தீரத்திலே ரகுவீரா
   உச்சித வமராபதி வச்சிரன் பதிக்குமின்ன
   வுச்சமா மளகாபுரி ரகுவீரா.

3. பட்டணம தொன்றுண்டாக்கி யிட்டமுட னிருந்தானே
   பகருவே னரக்கன்கதை ரகுவீரா
   துட்டனந்த விலங்கையிற் சட்டமாயி ருக்குநாளிற்
   சூர்ப்பனகையாந் தங்கையை ரகுவீரா;

4. காலனுக்கு நிகரான காலகேயர் சம்பாதனுங்
   கண....கனவித்துச் சிங்கவண்(?) ரகுவீரா
   மாலையிட்டுக் கலியாணங் கோலமாய்ப் பண்ணிக்கொடுக்க
   மகிழ்ந்தானே தசமுகன் ரகுவீரா.

5. நாட்டமுடன் வனத்திலே வேட்டையாட வென்றொருநா
   ளிராவணன் வரும்போதே ரகுவீரா
   பாட்டையில் மயன்றன்பெண்ணை கூட்டிக்கொண்டு வரும்
   பார்த்துநீயா ரென்றானையா ரகுவீரா. [போது

6. ஆரு மனிதர்கள்சஞ் சாரமில்லா வனத்திலே
   அண்டிவந்த தேதென்றனே ரகுவீரா
   வாருமையா யென்னைப்பெற்றாள் பேருந்திதி யென்பார்கள்
   மயனென்பேர் என்றுசொன்னன் ரகுவீரா.

7. ஏமாவென தெய்வப்பெண் ணுமொருத்தி கேட்டதுண்டோ
   என்றுசொல்லி யின்னுஞ்சொல்வான் ரகுவீரா
   தாமவளை யெந்தனுக்கு நேமமாய்க் கொடுத்தார்தேவர்
   சந்தோஷமாய்க் கொண்டேனென்றான் ரகுவீரா.

8. அஞ்சுகம் விளக்காய்ச்சொர்ண மிஞ்சுமேமா புரஞ்செய்து
மதிலிருந்தோ மென்றானையா ரகுவீரா
கொஞ்சிக்கொஞ்சி விளையாடி யஞ்சுநூறாண் டவருடன்
கூடிவாழு நாளினிலே ரகுவீரா ;

9. மாயாவி துந்துபியென்னுஞ் சேய ரிருவரிந்த
மங்கையையு மீன்றாளென்றான் ரகுவீரா
சேயிழை தேவகாரிய மாயந்த வுலகத்தினிற்
சென்றுபதிநா லாண்டாச்சு ரகுவீரா.

10. பேடுபிரிந்த சேவல் கூடிலாத வுயிர்போலே
பிரமங்கொண்டே னென்றானையா ரகுவீரா
வாடிமனந் தளர்ந்ததென தேடியிங்கே நானும்வந்த
வரலாறு கேளுமென்றான் ரகுவீரா.

11. தாயிலாத தகப்பன்தானே தாயாதி யாகுமென்று
சாற்றுவா ருலகத்தார்கள் ரகுவீரா
பேயும் பெண்ணுக்கிரங்கு நியாயமதொன் றுண்டல்லவோ
பிழைகள்வர லாகாவே ரகுவீரா.

12. காலஞ்செய் வதுபின்பு கோலஞ்செய்யு மோவென்று
கன்னிகாதானஞ் செய்யவே ரகுவீரா
ஞாலத்தி லிவளுக்கேற்ற சீலநாய கனைத்தேடி
நாடிவந்தே னென்றானையா ரகுவீரா.

13. செம்மையா யுள்ளதைச்சொன்னே னும்மையு நானின்று
[றென்று
தெரிந்துகொள்ள வேணுமென்றான் ரகுவீரா
எம்மையும் விச்சிரவசு தம்முடைய பிள்ளையாகு
மென்றறிந்து கொள்ளுமென்றான் ரகுவீரா.

14. ஒப்பிலாப் பிரமனுக்கு முப்பேர னெனென்று
முத்தரங்கள் சொன்னானையா ரகுவீரா
வைப்பினிலெனை யெல்லாருஞ் செப்பமாய்த் தசக்கிரீவா
வென்றழைப்பா ரென்றான் ரகுவீரா.

15. தருமநெறி தவறாத பிரமரிஷி பிள்ளையென்றே
சந்தோஷ மாகிமயன் ரகுவீரா
மருமலர்க் குழலியான வருமைப்பெண் ணபரஞ்சி
மண்டோதரி யென்றபெண்ணை ரகுவீரா ;

16. மிக்கவு மகமகிழ்ந்து பக்குவமிது வென்றந்த
வேளைதானே கேளுமையா ரகுவீரா
தக்கதந்தை வனத்திலே அக்கினிசாட் சியதாகத்
தசமுகனுக் கேகொடுத்தான் ரகுவீரா.

17. குத்தமொரு பழுதில்லாச் சத்தியென்னும் வேலாயுதங்
கொடுத்தானே கோதண்டக்கை ரகுவீரா
யுத்தத்தில் பண்டுசென யித்திரலட் சுமணர்பேரி
லோங்கிப்போட்ட வேல்தானையா ரகுவீரா.

18. இப்படிக் கலியாணமன தொப்பனையாய்ச் செய்துகொண்
டிலங்கையிற்சென் றானையனே ரகுவீரா
அப்படித்தம் பியர்க்குஞ்சி றப்புடன்கலி யாணஞ்செய்ய
வாலோசித்தான் தசமுகன் ரகுவீரா

19. வைரோச னன்பெண்ணு டையபெண்ணு மங்கொருத்தி
வச்சிர சுவாலைதன்னை ரகுவீரா
பயங்கர ரூபமுள்ள கயவன்கும்ப கர்ணனுக்கே
பண்ணிவைத்தான் கலியாணம் ரகுவீரா.

20. கந்தருவ ராசனென வந்தசை லூஷன்தந்த
காரிகை சரமைதன்னை ரகுவீரா
தந்தையே மகிழ்ந்துமக்கே சொந்தமாம் விபீஷணரே
திருப்பூட்டச் செய்தானையா ரகுவீரா.

21. நந்தன வனத்திலுறுங் கந்தருவர் தம்மைப்போலே
நாடிச் சுகித்திருந்தார் ரகுவீரா
அந்தநாளிற் தசமுகன் சொந்தமண் டோதரியோ
ராண்பிள்ளை பெற்றாளையா ரகுவீரா.

22. கண்டகன் பிறந்தவுடன் சண்டமேக முழக்கம்போற்
கதறியழு தானையா ரகுவீரா
துண்டரீக ராவணனுங் கண்டுமேக நாதனென்றே
சொல்லிப்பேரு மிட்டானையா ரகுவீரா.

23. ஏகமா யுலகிற்சொல்லு மேகநாத னேயவ
னிந்திரசித்தன் தானையா ரகுவீரா
ஊகமாக நீருமுன்னே யோகோவென்றிந் திரசித்தை
யூன்றிக்கேட்டீர் கண்டுகொள்ளும் ரகுவீரா.

24. அங்கவனந் தப்புரத்து மங்கைய ரட்சணைசெய்
தவத்தினல் வளர்ந்தானையா ரகுவீரா
எங்கள்தபோ பலனும்மை யிங்கேகண் டதனாலே
யிருந்துசொல்லு றேனையா ரகுவீரா.

## கும்பகர்ணன் உறங்குதலும், இராவணன்; தேவர், முனிவர் ஆகியோரைத் துன்புறுத்துதலும்.

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

சிலகால நடக்குநாள் கும்ப கர்ணன்
தீயனுக்கே பிரமனுக் கினியாற் றாக்கம்
பலமயக்க விரண்டுயோ சனைவி சாலம்
பகர்நீளம் நாலுயோ சனையோர் வீடு
நிலமிரா வணன்செய்தா னதனிற் றம்பி
நெடுங்காலந் தூங்குவதா லண்ணன் கூடிப்
பலதேவர் ரிஷிகளையே யவமா னங்கள்
பண்ணினன் கடூரபுத்தி யெண்ணி னனே.

## இராவணன் நந்தன வனத்தை யழித்தலும் குபேரன் தூதனுப்புதலும்

அறுசீராசிரியச் சந்த விருத்தம்

நந்தன மென்றவ னத்தும ரங்களை நாடிமு றித்திடவே
இந்தவி தங்கள்கு பேரன றிந்துமி ராவண னுக்குரைசெய்
சொந்தமி தென்றொரு சேதிகொ டுத்தொரு தூதைய
[னுப்பிடவே
வந்துமி லங்கையி லங்கவ னுக்குமிவ் வாறுகள் கூறுவனே.

உசேனி ராகம்] இதுவுமது [சாபு தாளம்

பல்லவி

இந்தச் சேதி அய்யா—இலங்கேசனே
இந்தச் சேதி அய்யா.

அநுபல்லவி

உந்தன் தமையனள காபுரிக் கீச
னுத்தமொழி சொன்ன தத்தனையுஞ் சொல்வேன்
(இந்த)

சரணங்கள்

1. நந்தன வன முறித்தது—நாட்டில்
நான்முனி வோருயிர் பறித்தது
மந்தார நடுங்கக் குறித்தது—மின்னு
மாரையு மெண்ணமற் செறுத்தது

இந்த விதங்கள் கண்டாரா—மவ
ரின்னமுங் கேள்விகள் கொண்டாரா
மெந்தன் பேச்சைத் தடுக்கா னென்றாராம்—என்
றெடுத்தாரே சொல்லத் தடுத்தாரே—தூது
விடுத்தாரே யென்னை (இந்த)

2. இலங்கை யுன்னிடம் விடுத்தது................
மைபாரிச மெடுத்தது
நலந்த ருந்தவந் தொடுத்ததும்—பூத
நாத னளகையைக் கொடுத்ததும்
கலந்து..............சங்க ளானது—மிடக்
கண்ணொன் று பிங்கள மானது
மலைமடந் தையைப்பார்த் ததனால்—வந்த
வாறென்றார் பெற்ற பேறென்றார்—திரம்
நூறென்று ரையா (இந்த)

3. நடத்தை களிது மார்க்கமோ—வென் று
நாலு பேருக்கு மேற்குமோ
திடத்தி லுமக்கி தார்க்குமோ—உந்தன்
சிறுபிள்ளை புத்தி தீர்க்கமோ—வென் று
மடக்குவா ரில்லை யென்பரே—பின் னு
மாருஞ் சொல்வார் வன்பரே
குடத்தைக் கவிழ்த்துப் பயத்தைச் சொரிந்த
கூறதோ மனம் வேறதோ—வென்ன
மாறதோ வென்றார். (இந்த)

## இராவணன் தூதுவனைக் கொன்று, குபேரன் வசிக்கும் அளகாபுரியை நோக்கிப் படையெடுத்தல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

தூதனிது சொன்னவுட னரக்கன் சீறிச்
சொல்லுவா னுங்கவன்ற னடிமை யல்லேன்
தீதுசெய்வே னானுமூ வுலகுள் ளோரைச்
செயங்கொள்வேன் பரமேசன் சிநேக மென் று
வாதுசொன்ன னலவோவென் றதட்டி வாளால்
வந்ததூது வனைவெட்டி யுண்பாற் கீந்து
சாதுரங்க தளத்துடனே குபேரன் திக்கைச்
சார்ந்திட்டான் பூசலுக்கு நேர்ந்திட் டானே,

## இராவணன் திக்குவிசயம்: குபேரனுடன் போர்புரிந்து வெற்றிகொள்ளல்

**மோகன ராகம்]** [சாபு தாளம்

பல்லவி

*திக்கு விசயஞ் செய்யக் குறித்தானே—குபேரனுடன்*
*தக்க புட்பகத்தையும் பறித்தானே.* [பொருது

அநுபல்லவி

*மிக்க மகோதரன் பிரகத்தன் காரணன்*
*வீர மாரீசனுடன் சுக சாரணன்*
*உக்கிர புகைக்கண்ணன் ராக்கத கராவண....*
*....நாலுமந்திரி சூழுமி ராவணன்*
*மைக்கடல் படைத்தாட்டு கொக்கரிப் பதுமிட்டுச்*
*சிக்கெனப் புறப்பட்டு முக்கிரத் துடனெட்டு* (திக்கு)

சரணங்கள்

1. *தேரும் பரியுங் கரியுங் காலாள்வகை*
*சேனைத் தளங்கொண்டு வந்தான்*
*....மலை நதிகாடுகள் மிக்கவே*
*யோடி முகூர்த்தகத்திற் கடந்தான்*
*ஆரும் பயந்திடக் கயிலாச பாரிசத்தில்*
*ஏகினு னியக்கர்கள் கண்டார்*
*வாருங் குபேரமகா ராசனே உன்தம்பி*
*வந்தானென்றே சொல்லிக் கொண்டார்*
*போராக வவர்வந் தங்கே நாடி*
*கோபங்கள் விளைந்தங்கே கூடி*
*எறியீட்டி வல்லயம் சத்தி சூலாயுதம்*
*வில்லம்பு கத்தி கைகளில்*
*வாங்கியு மெட்சர்கள் சேனை பலங்கொண்டு*
*மாட்ட வரக்கர்களின்....கை....கொண்டு*
*மோங்கியி ராவண னூழிய னல்போலே*
*வுறம்பெற்ற கைகதை யாலே—சமர் மேலே*
*உதட்டைக் கடித்தானே பதைத்து மடித்தானே*
*உறுக்கியே சென்றானே நறுக்கியே நின்றானே*
(திக்கு)

2. வெட்டுண் டுதட்டைக் கடித்துக் கொண்டே மண்ணில்
வீழ்ந்தார்கள் யட்சகர்கள் சிலபேர்
எட்டுத் திசையிலு மோடிப் பிழைக்கலா
மென்று மொளித்தபேர் சிலபேர்
பட்டகா யத்துடன் அரக்கரைக் கும்பிட்டுப்
பல்லைத் திறப்பார்கள் சிலபேர்
விட்டு விடவென்று புல்லைத்தின் றுபுத்தின்
மேலே யேறுவார் பலபேர்—பின்னும்
வண்டினை வீரன்சங்கி யோதகண்டக தீரன்
மாரீசனை மீறி யடித்தான்—விழுந்தவன்
தேறிப் பிடித்தான்—பலத்தினில்
மிஞ்சிமா ரீசனுங் கைக்கொண்டு சாடவே
விரைந்து சங்கியோத கண்டக னோடவே
அஞ்சாத ராவணன் கண்டு மகிழ்ந்திட்டுப்
பார்த்தள காப்புரிக் கோட்டை புகுந்திட்டும்
ஆனைபோற் சூரியன் பானுவாம் வீரிய
னுருயிர் கல்லியே தூரமுஞ் சொல்லியே (திக்கு)

3. போரிட்டுச் சேனைக ளைக்கு பேரனும்
புஷ்பக மீதினி லேறி
நேரிட்டு முன்மானி பத்திரனு மந்திரி
நேர்ந்து விருதுகள் கூறிப்
பேரிகை பூரி முழங்க நாலாயிரம்
பேருங்கண்டு பூசல் கூட
சூரமா ரீசன் பிரகத்தன் மகோதரன்
சூழ்ந்தந்த யட்சரைச் சாட
அங்கே தூமக்கண்ணன் தான்கதை கொண்டுமே
மொத்தவுந் தான்மணி பத்திரன்
துடித்தெதிர் வந்தான் தடிகொண்
டடிக்கவே நொந்தான்—இராவணன்
துரத்திக்கொண் டேவர மூவேலு ரத்தினில்
சொருகவிட் டானதை யெண்ணுமல் சிரத்தினில்
பரித்தகிரீ டத்துடனே தலைபின் பாகவே
பாரிச மூலியென் றேபெய ராகவே
பங்க மியற்றினன் துங்க புயத்தினன்
பல்லையுங் கடித்தான் வில்லையும் பிடித்தானே (திக்கு)

4. இத்தனையுங் கண்டு குபேரனும் வந்து
மெதிர்த்து மிராக்கதத் தியா
புத்திகெட் டோனே நரகத்துக் கீடாகப்
போவாயடா துட்டா பேயா
கற்றறி மோழையாய்ப் பிரம குலத்திற்குக்
·காதக னய்வரு வாயா
பெற்றதாய் தந்தை குருதுணை வர்க்குப்
பிழைசெய்த நீயுமா வாயா
..........பெறுவதுண் டோடா
ஆயிசுகள் குறைந்திடு மூடா—தேகத்தைப்
பெருக்க நம்பாதே—பின்னாலே
இருக்க நம்பாதே—நமன் கையில்
பேரான துன்பத்தைப் படுவாயென் றிடித்தான்
பெரியகைக் கதையாலே யோரடி யடித்தான்
போராடித் தடிகொண்டி ராக்கத வீரனும்
புடைக்க மயங்கின னந்தக்கு பேரனும்
பூங்காநந் தனத்தினில் தேங்கவே கணத்தினிற்
புயமது கொட்டினன் கயிலையைக் கிட்டினன். (திக்கு)

## இராவணன் புட்பகவிமானத்தில் செல்லல்; கயிலையங்கிரி இடையே இருத்தல்; நந்தீசுவரர் தடுத்தல்; இராவணன் கருவத்துடன் கூறல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

வாச்சுதென்றே ராவணன்புட் பகவி மானம்
வான்வழியாய்க் கயிலைமேல் வரும்போ தங்கோ
ராச்சரியஞ் சொல்லுகிறே னகா யத்தி
லதுதானே தடங்கிநின்ற தங்கே நந்தி
யீச்சுரர்பார்த் தடிகொண்டே யோடி வந்து
முனிந்திதுசங் க்ரர்மலையா மெனவே யென்ன
பேச்சுரைத்தாய்ச் சங்கரனார் பார்ப்போ மென்று
பிலுக்கினன் தோள்களெல்லாங் குலுக்கி னனே.

## இராவணன் நந்திதேவரை இகழ்தலும், அவர் சாபமிடுதலும்

பதினொன்குசீர்க் கழிநெடிலாசிரியச் சந்த விருத்தம்

கண்சி வக்கவுத டுந்து டிக்கமயிர்
கம்பி போல்நிமிர வேகமாய்க்
கடிய கோபமுட னுங்கு தித்துமுயர்
கயிலேயின் புரம தணுகவே
வெண்கி ரிக்கதிபன் வாசல் நந்திகையில்
விசய சூலமொடு நிற்கவே
வீர ருத்திரனை யொத்த வீரியனை
வெண்கு ரங்குமுக மாரெனப்
பண்பி துசொலி யங்கை கொட்டியொரு
பத்து வாய்கொடு நகைத்தனன்
பார்த்து நந்தியுமி ராக்க தாவுனது
...........கறுங்கிளையு நகர்களும்
வெண்கு ரங்குகர டிக்கு லங்களின்னும்
வெகுவி தக்கவிகள் கூடியே
வேர்க ளைந்திடுவ தென்று சாபமிட
மீறினன் விருது கூறினன்.

## இராவணன் கயிலேயங்கிரியை அசைத்தல்

கல்யாணி ராகம்] [சாபு தாளம்

பல்லவி

கைகொண்ட சைத்தானே—இராவணன்
கைலேயங் கிரியைத் தானே.

அநுபல்லவி

மைநாக மலேயொத்த வாயின் பல்லேக்கடித்துப்
போய்நில மதிருற்று முடுகி யிரண்டுபத்துக் -
(கைகொண்டு)

சரணங்கள்

1. அண்ட பித்திக ளெல்லா மதிர்ந்து செவிடுபட
அடுக்குச் சட்டி சரிந்தாப் போலவே திக்குக்கெடக்
குண்டலி ஆதிசேஷன் நெரிந்தான்-வாய்விடக்
கூர்மாவ தாரமுந் திடுக்கிட்டு நடுங்கிட (கைகொண்டு)

2. அம்புலி சூரிய னிருவருங் கதிகெட்டும்
அட்டதிக் கயங்களும் வாய்விட்டு வீறிட்டும்
அம்பரந் தனில்நட்சத் திரகணம் பொடிபட்டு
மாழியுஞ் சுவறிட வரக்கனும் வெளிபட்டுக்
(கைகொண்டு)

3. தேவரி ஷிகளெல்லா மயங்கி யுயிர்கள் துள்ளச்
சித்தர் சாரணர் மற்றோர் சேதிக ளென்னவிள்ள
ஓவென்று பூதகண மெல்லா ருடம்புந் தெள்ள
ஓடிப்பர மேசனைப் பார்வதி கட்டிக்கொள்ள.
(கைகொண்டு)

**சிவபெருமான் காற்பெருவிரலால் கயிலைமலையை அழுத்துதல்;**
**இராவணன் கதறியழுது சாமகானம் செய்தல்;**
**ஈசுவரன் அருள்கூர்தல்**

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

பதறிவந்தா ளுமையென்றே நகைத்து மீசன்
பாதமொன்றின் பெருவிரலா லழுத்தி னார்காண்
கதவிடுக்கில் நெருக்குண்ட மூஞ்சூ றைப்போல்
கதறினன் மூவுலகும் நடுங்கத் தானே
அதன்மேலும் மாரீசன் முதலோர் சொற்கேட்
டாண்டோரா யிரஞ்சாம கானம் பண்ணி
சதகோடி தோத்திரங்கள் செய்தான் துன்பந்
தடுத்திட்டார் அரக்கன்கை விடுத்திட் டாரே.

**சிவபிரான், இராவணன் என்ற பெயர் அளித்தல்;**
**பலவரங்கள் தருதல்;**
**இராவணன் இமயபருவதத்தைச் சேர்தல்;**
**வேதவதியைப் பார்த்தல்;**
**அவளைத் தீண்டுதல்;**

**அடாணா ராகம்] தரு [ஆதி தாளம்**

1. மனுகுல சிகாமணியே ராமசந்திரனே — எங்கள்
மாதவமீ டேற்றவந்த ராம சந்திரனே
இனியுரைக்கக் கேளுமையா ராமசந்திரனே — அந்த
இராக்கதனுக் கெதிராக ராம சந்திரனே.

2. சங்கரனு மெழுந்தருளி ராமசந்திரனே—அந்த
தசமுகனைப் பார்த்துச்சொல்வார் ராமசந்திரனே
இங்குமிட்ட கூக்குரலால் ராமசந்திரனே—பேர்
இராவணனென் றிட்டோமென்றார் ராமசந்திரனே.

3. பிரமதேவர் தன்னிடத்தில் ராமசந்திரனே—அவன்
பெற்றவரந் தனக்கு....ம் ராமசந்திரனே
வரங்கொடுத்த தென்னவென்றால் ராமசந்திரனே—இன்
வயதின்மிச்சந் தந்தோமென்றார் ராமசந்திரனே. [னும்

4. சந்திரகாச மென்றகத்தி ராமசந்திரனே—யொன்று
தான்கொடுத்தார் மேலுங்கேளும் ராமசந்திரனே
அந்தவாளை நிந்தித்தக்கால் ராமசந்திரனே—அது
அவரிடத்தில் வரவென்றாரே ராமசந்திரனே.

5. புந்தியின் பயத்தை விட்டே ராமசந்திரனே—எங்கே
போகவேணும் போவென்றாரே ராமசந்திரனே
சிந்தைமகிழ்ந்து ராவணனும் ராமசந்திரனே—சிவனை
தண்டன்பண்ணி யனுப்பிக்கொண்டான் ராம
[சந்திரனே)

6. தாயிட்டபே ரூரிட்டழைக்கும் ராமசந்திரனே—அதுபோற்
சகலரும்ரா வணனென்றாரே ராமசந்திரனே
தூயசாம வேதகான ராமசந்திரனே—செய்த
சுகிர்தமென்ன சொல்வேனையா ராமசந்திரனே.

7. தலையிலிடித்தால் தாழக்குனிவார் ராமசந்திரனே—இந்தத்
தரணியில் வழக்கமையா ராமசந்திரனே
சொல்வதொன்று கண்கெட்டபின் ராமசந்திரனே—யாருஞ்
சூரியநமஸ் காரஞ்செய்வார் ராமசந்திரனே.

8. தாப்புக்கொண்டி ராவணனும் ராமசந்திரனே—எங்கும்
தான்சயிக்க வேணுமென்றே ராமசந்திரனே
கோப்புடனே பூமியடங்கல் ராமசந்திரனே—சுற்றிக்
கொண்டுபுட்பக மேறிக்கொண்டே ராமசந்திரனே ;

9. சூரனரக்கன் கருவமிஞ்சி ராமசந்திரனே—அவன்
துட்டத்தனத்தை விட்டானில்லை ராமசந்திரனே
மாரைக்குனிந்து பார்த்துக்கொண்டு ராமசந்திரனே
—இன்னும்
வலிமைசெய்தான் கேளுமையா ராமசந்திரனே.

10. பூவுலகத் தரக்கர்களை ராமசந்திரனே—அரக்கன்
பொருதுசெயங் கொண்டானையா ராமச்ந்திரனே
பாவவுரு வரக்கனையா ராமசந்திரனே—இமய
பருவத்தைச் சேர்ந்துவரச்சே ராமசந்திரனே.

11. அந்தவிடத்தில் தவஞ்செய்கன்னி ராமசந்திரனே—ஒருத்தி
அழகில்மிக்க வவளைக்கண்டான் ராமசந்திரனே
சிந்தைகலங்கி மோகங்கொண்டு மிராமசந்திரனே - அவளைத்
தேட்டவென்றே நினைத்துச்சொல்வான் ராமசந்
[திரனே.

12. காரிகைநீ யார்சொல்லென்றே ராமசந்திரனே—கேட்கக்
காரணங்களை வகுத்துச்சொல்வார் ராமசந்திரனே
வீரனே குசத்துசன்பெண்ணும் ராமசந்திரனே—தன்பேர்
வேதவதி யென்றும் பின்னுஞ்சொல்வா ரிராம
[சந்திரனே.

13. என்னைப்பாரி யாக்கவென்று மிராமசந்திரனே—தேவ
ரிராக்கதர்கள் அசுரர்சிலபே ரிராமசந்திரனே
முன்னங்கேட்கக் கொடுக்கவில்லை ராமசந்திரனே—வேத
மூர்த்தியெந்தன் றகப்பன்றன்னை ராமசந்திரனே.

14. சம்புவென்றோ ரசுரன்வந்தே ராமசந்திரனே—இரவில்
தானடித்துயிர் பறித்தானென்றாள் ராமசந்திரனே
வெம்பியிவள்தா யிறந்ததாலோ ராமசந்திரனே—தவசி
வேடங்கொண்டே னென்று சொன்னாள் ராம
[சந்திரனே.

15. விண்டுவுக்கே பாரியாக ராமசந்திரனே—நானும்
விரதம்பிடித்தே னென்றுசொன்னா ளிராமசந்திரனே
விண்டுவாரென் றேபழித்தா னிராமசந்திரனே—அரக்கன்
வீரன்தன்னைச் சேரச்சொன்னா னிராமசந்திரனே.

16. கண்டித்துக்கன்னி சொன்னதாலே ராமசந்திரனே—
[அவளைக்
கற்பையழிக்க நினைத்தானையா ராமசந்திரனே
கொண்டைகுலைய யிழுத்தானையா ராமசந்திரனே—அவன்
கொஞ்சபுத்தியை யென்னசொல்வேன் ராம
[சந்திரனே.

### வேதவதியின் சபதம்

**எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்**

கன்னிகூந்த லேப்பிடிக்கக் கோப மாகிக்
கைதானே கத்தியா யறுத்துக் கொண்டு
வன்னியென்னுந் தீவளர்த்து வீழு முன்னே
மண்டலத்தில் தான்யோனி வாய்ப்ப டாமல்
கன்னியாய்ப் பிறந்தரக்கா வுன்பி ராணன்
களைந்திடுவே னெனவிழுந்தா ளந்தச் சாப
முன்னிலேயாய்ச் சீதையா யிலங்கை யில்தீ
மூட்டினுள் மாலேயுன்பால் சூட்டி னாளே.

### சானகி வரலாறு

**இதுவுமது**

உகமுதலில் வேதவதி யிரண்டிற் சீதை
யுத்தமிபாக் கியசாலி யுறுதி யுள்ளாள்
சகமதிலே கலப்பைநுனி தனிலெ ழுந்தாள்
சீதையென்றே பேர்தரித்தா ளும்மைச் சேர்ந்தாள்
தகைமைபெற்ற பதிவிரதை யருந்த திக்கும்
தாயாமே சனகமன்னன் தவத்தில் வந்த
சுகமயிலே மாலேயிட்ட ராமா வின்னுந்
தொகுக்கிறேன் கதைஎெல்லாம் வகுக்கி றேனே.

### இராவணன் பல தேசங்களை வெற்றிகொள்ளல் ; மகேசுரயாகம் நடைபெறல் ; பட்சிகள் முதலியன வரங்கள் பெறுதல்

**சங்கராபரண ராகம்] தரு [சாபு தாளம்**

1. வேதவதி சாபங்கொண்டு மிராவண
வீரன் வெகுவெகு தேசஞ்—செல்லும்
போதி லொருதல மானதுவே நல்ல
பூமி யுசிர விசு.

2. அங்கோ ரீராசன் மருத்தன்ம கேசுர
யாகஞ்செய் வானதை நாடித்—தானே
யெங்கெங்கு முண்டான தேவ ரிஷிகளு
மெல்லாரு மாய்வந்து கூடி ;

3. இருக்கின்ற வேளையில் வந்தானென் றிந்திரன்
யமன்வரு ணன்குபே ரன்உய[ர்]த்தி
கருக்கென்று சொல்லி மயில்காக்கை யன்னங்
கரட்டோணு ஞகியந் நேரம்;

4. முனைமு கத்தினில் நிற்கப் படாதிவன்
மூர்க்கனென் றேபயங் கொண்டார்—தேவ
ரனைவரும் வேஷங்கள் மாறிக்கொண் டேயிருந்
தங்கனே தப்பித்துக் கொண்டார்.

5. பிச்சைச் சட்டியில்ச னீசுரன் புகுந்தாப்போல்
பிராமண போசன வேளையில்
எச்சிலை யிட்டாப்போல் மருத்தனை வந்துமெ
திர்ந்தானே ராட்சத காளை.

6. அண்ணன் குபேரன் விமானம் பறித்ததை
யாண்மைகள் சொல்லிக் கொழிக்க—வென்ன
வெண்ணமல் லாந்துநீ மார்பிலு மிழ்கின்ற
யென்று மருத்தன் பழிக்க;

7. என்னுடன் சண்டைக்கு வாயில்லை யாகி
லிளைத்தோ மென்றுசொல் மருத்தா—வென்று
சொன்னவன் தன்னுடன் சண்டைகள் செய்யாத்
துணிந்தான் மருத்தன் கருத்தாய்.

8. தீட்சித ஞனவன் கோபம் பண்ணலாமோ
செய்யலாமோ சண்டை காணு—மிந்த
ராட்சதன் றன்னை வணங்கு மகேசுர
யாகம் நடந்தேற வேணும்.

9. தவக்குறை வரலா காது ருத்திரன்
றன்னைக் குறித்தது யாக—மிந்தப்
பவத்தை யெண்ணுதி ராட்சதன் முன்னின்று
பயந்திட்டே னென்பது வுகம்.

10. என்று மருத்தன் குருசங்க வர்த்த
னெடுத்துச்சொன் ஞனதை யேற்றான்—முன்னே
நின்று மருத்தன் பயந்திட்டே னென்றசொல்
நேரிட்டுச் சொன்னதைப் பார்த்தான்.

11. இளைத்தான் மருத்தனென் றேகையைக் கொட்டி
யிராவண னும்யாக பூமி--தன்னை
வளைத்திரு டிகளை விழுங்கினதைச் சொல்ல
வாயுண்டோ சொல்லுமென் சாமி.

12. இருடிக ளிரத்தங்கு டித்தும தாந்தனு
யிறுமாப்பு மிஞ்சியே போனன்—பின்னும்
பிரபல மருத்தன் மகேசுரர் யாகம்
பெருக்கச்சே மய்யமன மானன்.

13. தேவர்க ளெல்லாம் நிசரூபங் கொண்டார்
சிறப்பாய் நடந்தது யாகம்—வெகு
ஆவலாய்க் கைநீட்டி யிந்திராதி தேவ
ரடங்கலும் வாங்கினர் பாகம்.

14. தைரிய முண்டாகித் தேவர்கள் முன்னே
தரித்திட்ட பட்சிகள் சாதி—அதில்
மயில்காக்கை யன்னங் கரட்டோ னுனுக்கும்
வரங்கொடுத் தாரனு பூதி.

15. மயிலின் இறகினிற் கண்களுண் டாகவும்
மழையைக்கண் டால்விரித் தாடப்—பாம்பின்
பயமில்லை யென்று கொடுத்தானே யிந்திரன்
பாரும வன்புகழ் நீட.

16. காக்கை யிடஞ்சோற்றை யிட்டா பிதிர்க்களை
கரையேறு வாரென்று கூறி—யெம
னுக்கினை யால்வியாதி யில்லை யென்றே
யாட்சி கொடுத்தானே தேறி.

17. தன்படி சாவில்லை மனிதனடி கொண்டால்
சாவென்று காக்கைக்குத் தானே—வெகு
வன்பாய் வருணனுஞ் சுத்த வெள்ளைநிறம்
அன்னப்பட் சிக்குத்தந் தானே.

18. ஓணன் பலபல வர்ணமும் பொன்னிற
முண்டாக வென்றனள கேசன்—வர
மூணிக் கொடுத்துமே தன்னிடஞ் சென்றரென்
றேதுவ னேமுனி ராசன்,

## இராவணன் அயோத்திமேற் செல்லல் : அனரணியராசன் சாபம்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

கனமிகுந்த ராசாக்க ளநேகம் பேரைக்
கப்பமிடச் செய்தரக்க னயோத்தி மேவி
யனரணிய மகராசன் றனையெ திர்த்தே
யடித்தமரில் விழுத்தாட்டி யாண்மை சொல்லிப்
பனைமரம்போல் விருந்தானென் றேகை கொட்டிப்
பகடிபண்ணக் கேட்டுமந்த ராசன் சொல்வான்
எனதுகுலந் தனில்ராமன் பிறந்துன் மார்பி
லிடிப்பனென்றுன் கிளையோடே மடிப்பனென் றனே.

## இராவணன் செல்லும் வழியில் நாரதர் எதிர்ப்படல்

நேரிசை வெண்பா

கோசலதே சம்புரக்குங் கோவேயி ராகவனே
மாசிலா மெய்ஞ்ஞான வாரிதியே - தேசமெல்லா
மாரதஞ்செ லுத்தரக்க வீரன்வ ருந்தடத்தில்
நாரதர்வந் தார்சொலுவே னுன்.

நாதநாமக்கிரியை ராகம்] [ஆதி தாளம்

பல்லவி

நாரதர் வந்தார் ஐயா
நாரதர் வந்தார்.

அநுபல்லவி

காரிய காரண மிரண்டி னிதானங்
கண்ட தேவரிஷி கலகப் பிரிய னுன (நாரதர்)

சரணங்கள்

1. தாரகப் பிரமத்தை மனத்தினி னுடிச்
சிதானந்த வெளிதனிற் கூடி
சீரிசை யறிந்து சங்கீதம் பாடித்
தெருவிற்சண்டை கண்ணுக்குக் குளிர்ச்சி
[யென்பது தேடி (நாரதர்)

2. புலித்தோ லுடையர் சூலப்பிர காசர்
போத மிகுந்தமெய்ஞ் ஞானியர் விசுவாசர்
கலிக்குப் புதுமையென்ற தந்திர வுல்லாசர்
காடக தமரகஞ் செய்யவல்ல முனிராசர் (நாரதர்)

3. நிருத னிராவணன் சாபங்க ளேற்கவே
நிமிண்டிவிட் டரக்கரை யெமபுரஞ் சேர்க்கவே
யொருவரொ டொருவரை யெதிரிட்டுக் கோக்கவே
ஊரார் பிள்ளையைக்கொண்டு கிணற்றாழம்
[பார்க்கவே. (நாரதர்)

**இராவணனிடம் நாரதமுனிவர், இராமனை வெல்லுமாறு கூறி, இயமனிடமுஞ்சென்று, இராவணனைப்பற்றிக் கோள்மூட்டுதல்**

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

வந்தநா ரதமுனியை வணங்கி யேதன்
வரலாறெ லாஞ்சொன்ன நகைத்தா ரப்போ
இந்தமா னிடரையெல்லாங் கொல்லு வானே
எமனாலே துன்பமுறு மெளியோ ராமே
உந்தனுடை வீரத்தா லெமனை வென்று
லுலகெலாம் வசமென்றே யுறுதி சொல்லி
முந்தவவன் செலுமுன்னே நமன்பாற் சென்று
மூட்டினா ரரக்கன்வரக் காட்டி னாரே.

பந்துவராளி ராகம்] [ஆதி தாளம்

பல்லவி

எமனுலகினைச் சென்று கண்டானே—துடுக்க
னிராவணன் தொடைதட்டிக் கொண்டானே.

அநுபல்லவி

சமரில ரக்கன்கிளை களையெல்லா நீர்மடிக்கத்
தானதற்கு முன்னவன் பார்த்தே யிடம்பிடிக்க
(எமனுல)

சரணங்கள்

1. வேதாகமங்க ளோதும் வேதியருக் கிசைந்த
மேதினி தன்னிற்பூசை செய்தவருக்கு முந்த
பூதானங் கோதானங் கன்னிகா தானமுந்தப்
புண்ணியஞ் செய்தவற்கே யுபகாரஞ் செய்யுமந்த
(எமனுல)

2. நந்த வனமுந் தேவ ராலயஞ் சாலைமடம்
நல்ல தண்ணீர்ப்பந்த லன்ன சத்திரந்தட
மிந்தவகை தரும வான்களுக் கெதிர்நட
மிடை....ர் மாதர் செய்யுந் தரும சபையவிடம் (எமனுல)

3. இரந்தும் பரந்தவர்க்கே யிட்டவருக்கு மெத்த
இட்ட பாக்கியமெல்லா மிருப்பது மதைச்சுத்த
சுரமுஞ் சங்கீதமேள முழுக்குங் கொலுவி வைத்த
சுகிர்தவான் களுக்கின்பஞ் சிறக்கு மிப்படிக் கொத்த
(எமனுல)

4. மண்ணி லிருந்து கொண்டு வழக்கோரஞ் சொன்னபேரும்
மனையா ளிருக்கமறு மாதரைச் சேர்ந்துளோரும்
எண்ணமில் லாமற்பெரி யோர்களை நிந்தித்தோரு
மிவர்களெல்லாந் துன்பத்துக் கிடமாய் நரகஞ்சேரும்
(எமனுல)

5. கோள்சொல்லிக் குறளையுங் கொலைசெய்த பாவியருங்
கொடிய சண்டாளரான குணங்கெட்ட கோவியரும்
வாள்கையிற் கொண்டுசண்டை பின்வாங்குந் துரோகியரும்
மாபாதகரை யெல்லாம் வதைக்கு நரகுயரும் (எமனுல)

6. களவாண்ட பேர்களையுங் கள்ளுதனைக் குடிக்குங்
கண்டக ரிவர்களை யெமதூதரும் பிடிக்கும்
அளவில்லாத் துன்பமுற விழுத்து முதைத்தடிக்கு
மருநரகிற் கிடந்து மவர்கள் துடிதுடிக்கும் (எமனுல)

7. அலறி முறைகளிட்டுக் கூவென்பா ரொருக்காலே
யவரைக்கட்டி யிறுக்கி யடிப்பார்கள் தாடைமேலே
பலவாகச் சொல்லுவானேன் ராமநா னினிமேலே
பத்துத்தலை யரக்கன் பட்டானே வும்மாலே. (எமனுல)

## நமனுலகஞ் சென்ற இராவணன் நரகத்துன்பமுறுவோரை மீட்டலும், நமனுடன் போர் செய்தலும்

### அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

தளங்கொண்டு மரக்கன் சென்றானமனுல கத்தின டத்தை
யுளங்கொண்டு நரகத் துன்ப முறுவோரை யகற்றி விட்டான்
வளங்கொண்டு கால தூதர் வளைந்துநே ரிட்டு மாபோர்க்
களங்கொண்டு மரக்கர் காட்டைக் கண்டித்தார் துண்டித் தாரே.

## இயமன்-இராவணன் போர்

புன்னாகவராளி ராகம்] [சாபு தாளம்

பல்லவி

எமன்சண்டை கேளும் ராமா—ராவணனுடன்
எமன்சண்டை கேளும் ராமா.

அநுபல்லவி

எமன் சண்டை கேளும் ராமா
வமரர் துதிக்கு நாமா
யீண்டி யரக்கர் கூடித் தாண்டிக் காலரை நாடி
எத்தி வளைதடி சத்தி குறுந்தடி
இருப்புலக்கை சூலம் பருத்தபிண்டி பாலம்
எடுத்துக் கையிற்கொண்டு தொடுத்த வமர் கண்டு
மதிர்த்து மிதித்தாரே வதைத்துக் குதித்தாரே. (எமன்)

சரணங்கள்

1. காலன் படைகள் கூடியே—யரக்கர் படை
மேலே கைகொண்டு சாடியே—பாசங்க ளாலே
கட்டுவா ரநேகம் பேர்களைத்—தலைதெறிக்க
வெட்டுவா ரநேகம் பேர்களைச்—சிலது பேரைக்
கையுங் காலையு மொடிப்பார்—ராட்சத ரெல்லா
மையே வென்றிட வடிப்பார்—எமவா தையைக்
கதையாலு மறியீரோ யிதையெண்ணிக் குறியீரோ
காட்டு நரிகள் நீங்கள்—தாட்டிகச் சிங்க நாங்கள்
கடிப்போ முங்கள் ரத்தங் குடிப்போ மிதுசித்தங்
கடுவன் கண்டவெலி படுமே யென்றுசொலி
காட்டி யுரஞ்சொல்லி மாட்டி யுயிர்கல்லிக்
களைக்கும்படி கண்டார் வளைத்துச்சண்டை
[கொண்டார் (எமன்)

2. அரக்கன் படைகள் தாழவே—ராவணன்றன்னை
நெருக்கிக் காலருஞ் சூழவே—புட்பகத்தின் மே
லார்த்தா ரேசர மாரிகளைத்—தூவி
தூர்த்தன் மேல்மிகுஞ் சோரிப்—பெருகிட
வசைத்தா னரக்கன் றலையைப்—பல்லைக்கடித்தே
விசைத்தான் கையம்புச் சிலையை—வணக்கியவ

னடித்தானே வீரம் பேசி நொடித்தான் பலவு மேசி
யாசில் மந்திரந் தொட்டான் பாசுப தத்தை விட்டா
னடர்ந்து கேசரி யாகப் படர்ந்துபே ரரியாக
வங்குங் கூறு கூறாய் எங்கு நீறு நீறாய்
அந்தக னுங்கண்டெ முந்துசி னங்கொண்டு
மதட்டிச் சீறி னனே ரதத்தி லேறி னனே (எமன்)

3. எருமைக் கிடாவின் மீதே—யேறும் வீரன்
தருமரா சனுமப் போதே—கால தண்டமு
மிருப்புலக் கையும் பாசமுங்—கையினில் கொண்டு
நெருப்புக் கக்கிய ரோசம்—பொங்கியே நமக்
கீடா பத்துத்தலைப் பூச்சி - கொள்ளித்தேளே - நீ
வாடா நின்றுவிடு சீச்சீ - செங்கண்ணனே
எட்டடாநீ அடடா துட்டி வெட்டடா சபாசு கெட்டி
என்றுசொல்லி யுறுக்கினனே நின்றுமீசை முறுக்கி
ஏமன்கை வளமாஞ் சாம சபளமா [னனே
மென்ற நாயுங் கொண்டு நின்ற நிலை கண்டி
ராக்கதரு மோட மூர்க்கனம ராட
எவரு நடுங்கிடப் புவன மொடுங்கிட (எமன்)

4. முப்புரச் சூரருஞ் சிவனுஞ்—செய்தசண்டை
யொப்பெனவே எமனு மவனும்—ரணகளத்தில்
முனைந்து கோடை யிடிபோலே—கர்ச்சனை செய்து
சினந்துகைக் கடுமை யாலே - ஆயுதங்கள் கொண்டு
மோதி யெதிர்ந்து வளைக்க - இருவர் வில்லில்
நீதி யமரை விளைக்க - யேழுநாள் சண்டை
மூவுல கெரிமிஞ்சத் தேவர் முனிவ ரஞ்ச
முட்டின ரெட்டாநாளுந் தட்டினர் தொடைதோளு
முடுக்கியீ ரைஞ்னூறு வடிக்கணை கள்தூறு
மூலங் கண்டு மோங்கக் கால தண்டம் வாங்க
முன்னம் வரமது சொன்ன வயனிது
முடிக்க வேண்டா மென்று னடிக்கா தவன்
[சென்றான். (எமன்)

## இயமனுலகை வென்ற இராவணன் மற்றும் பலரை வெற்றிகொண்டு, சூர்ப்பனகையின் கணவனைக் கொன்று, அருணசலம் அடைதல்

### இரட்டை யாசிரிய விருத்தம்

நமனுலகை வென்றுபின் போகவதி மேவியே
நாகரை வசப்படுத்தி
நன்மணி மதியினிவ தகவச ரசுரருட
னடிவோ ராண்டுபொருதுஞ்
சமனுக யிருவரையு முறவாக வேபிரமன்
சந்திசெய்ய வப்படிக்கே
தசமுகனே ராண்டிருந் தங்கசுர மாயையது
தான்தொண் ணூற் றொன்பதுபடி
யமரரு நடுங்கிடவு மசுமபட் டணமீதி
லசுரராங் காலகேய
ரவருடன் கூடவரு சூர்ப்பனகை நாயகனை
யங்கைவாள் கொண்டுவெட்டி
நிமைகொட்டு முன்னமே வருணுல யங்கண்டு
நேரிட்ட தென்னசொல்வேன்
[மதி]தட மாதவர்கள் துதிசிட்ட ராமய்ய
நிட்டர்சூ ழிரகுபதியே.

## அரசர் பலரை வெற்றிகண்ட இராவணன், பெண்களை சிறைப்பிடித்து இலங்கை மீளுதல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

காமதே னுவின்முலையாற் பெருகு நன்பாற்
கடல்சூழ்ந்த வருணை லயத்தைச் சேர்ந்து
தாமுனந்தச் சுரபியைக்கண் டடிப ணிந்தான்
சலிலரா சனைக்காணு தவன்சேய் பேரன்
கோமுகன்புட் கரனேடப் பொருது வெற்றி
கொண்டுமீண் டிலங்கைபுகு மரக்கன் றானே
தீமைசெய்து மூன்றுலகு மநேகம் பெண்கள்
சிறைகொண்டா னவகீர்த்தி நிறைகொண் டானே.

## இராவணன் பல வுலகங்களிலுமுள்ள பெண்களைத் துன்புறுத்தல்

**அடாணு ராகம்]** **[ஆதி தாளம்**

பல்லவி

*நல்ல பெண்டு பிடித்த - ராவண*
*ராட்சதன் தீமை கேளும் ராகவா.*

அநுபல்லவி

*சொல்ல நடுக்குதே - நெஞ்சுது ணிந்தசூரன்*
*துட்டத்த னஞ்செய்தது மட்டுமி தங்களுண்டோ (நல்ல)*

சரணங்கள்

1. *அமரர் கின்னரர் நாகர் கந்திருவர்க*
*ளசுரர் ராட்சதப் பெண்ணநேகர் மனிதப்பெண்*
*குமரிப் பெண்கள்தமை விமான மேற்கொண்டு*
*கொடுமையாகவே வெகு கொட்டமிட்டழகு*
*[சட்ட வட்ட முலை (நல்ல)*

2. *ஏழையழுத கண்ணீரே கூர்வா ளாமே*
*ராமா வவனுயி ருண்டீரே - கற்றறிந்த*
*மோழை வரங்கள் பாழதான தென்சொல்வேன்*
*சாபம்பொய் போமோ ராமா - வவன்*
*மூர்க்கமார்க் குண்டையா பார்க்குள் தீர்க்கமுள்ள (நல்ல)*

3. *பூவையர்கள் கற்பையுங் குறைத்தான் - சிறைபிடித்தான்*
*புட்பக விமானத்தையு நிறைத்தா - னழுதவர்மேல்*
*கோவஞ் செய்துமே விடேனென் றாக்கிர னவர்கள்*
*வயிறெரியக் கொண்டுதுண்ட ரீகன்கண்ட*
*[கண்டிடத்தில். (நல்ல)*

## துன்புற்ற மாதர்கள் சினந்து சாபமிட, இராவணன் இலங்கையை யடைதலும், சூர்ப்பனகை வருதலும்

அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

*குடிப்பெண்டிர் வயிறெரியக் கோடிச்சீலை நின்றெரியுங்*
*கூறு போலே*
*துடியிடைமா தரைப்பிடிக்கத் தாயில்லாப் பிள்ளையைப்போல்*
*கோப முற்றே*

படிமேற்பெண் ணுலரக்கன் மாயவென்றே சாபமிடப்
பலிக்கு மந்த
முடிபத்தா னிலங்கைசென்ருன் றங்கைசூர்ப் பனகைவந்து
முறையிட் டாளே.

## கணவனை இழந்த சூர்ப்பனகை, இராவணனிடம் பலப்பல கூறிப் புலம்பி முறையிடல்

நீலாம்புரி ராகம்] தரு [ஆதி தாளம்

1. அந்தோ அந்தோ முறையோ முறையோ
அநியாயமோ யெந்த - னண்ணுவே
உந்தன்கை வாளாலே யெந்தன் பிராணேச
னுயிரை வதைக்கலாமோ - அண்ணுவே.

2. தாலிகட்டச் சொல்லியே நீயவன் கைகொடுத்துத்
தாரைநீ ருதவினு - யண்ணுவே
காலகேய னுடனே சண்டையிடச் சேயெந்தன்
கணவனைக் கொல்லலாமோ - அண்ணுவே.

3. பல்லக்குமேல் வாசலிற் கொடுத்துக்கீழ் வாசலிற்
பறித்திட்ட கதையாச்சே - அண்ணுவே
வல்லாளனே யுலகிற் பிறப்புங் கசக்குமோடா
மைத்துனப் பகையுமுண்டோ - அண்ணுவே.

4. தன்கைய சைய தந்தன்கை பகையென்று
சாற்றுவது மெய்யாச்சே - அண்ணுவே
தன்காடு வேற்றுக்காடு மில்லையோ வென்னையிந்தச்
சதிசெய்ய லாமோபாவி - அண்ணுவே.

5. கயிலைமலை யெடுத்த ராவணேசுரன் றங்கை
கைம்பெண்டாளு ளென்பாரடா - அண்ணுவே
அயலார்க ளெல்லா நகைப்பதற்கு இடமாச்சே
அபகீர்த்தி யின்னமுண்டோ - அண்ணுவே.

6. மருமகனுக் காக்கின சோற்றை மகனுக்கிட்டு
வயிறெரிந்தா ளென்பார்க - ளண்ணுவே
அருமை மைத்துனனென்றுந் தயவுரை யாமற்போன
அவ்கேட்டை யென்னசொல்வே - னண்ணுவே.

7. ஆராரி ருந்தாலென்ன ஆனைகடல் வாழ்ந்தாலென்ன
   ஆவதுண்டோ யினிமே - லண்ணுவே
   ஏருத பழியேற்ற யுன்னுடன் பிறந்தவென்னை
   ஏளனங் கண்டாயடா - அண்ணுவே.

8. வேலிபயிரைத் தின்றப் போலேயென் கணவனை
   வெட்டினது தர்மமோயென் - அண்ணுவே
   பாலுஞ்சோற் றையுமிட்டு மென்னியைப் பிடித்தாப்போலே
   பாதகஞ்செய் தாயோயெந்த - னண்ணுவே.

## கீழ்விழுந்து அழும் சூர்ப்பனகையை இராவணன் தூக்கி எடுத்துத் தேறுதல் மொழிகள் கூறல்

### அறுசீராசிரிய விருத்தம்

ஆக்க மிழந்த சூர்ப்பனகை
   யடித்து விழுந்திப் படியலறத்
தூக்கி யெடுத்துக் கண்ணீரைத்
   துடைத்து முபசா ரங்கள்சொல்லித்
தாக்குஞ் சமரிற் கண்ணேகை
   தப்பி விதியுந் தான்கூட
மூக்கை யறுத்த தென்றுபல
   மொழிந்தா னும்மா லழிந்தானே.

## இராவணன், தண்டகாரணியஞ் சென்று வசிக்குமாறு சூர்ப்பனகையிடம் கூறல்; அவள் செல்லுதல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

கொண்டகணை வன்போனு லதனு லென்ன
   குறையுனக்கு சோதரமே கூறக் கேளாய்
தண்டகா வனத்தில்நஞ் சிறுத்தாய் பிள்ளை
   தம்பியெனுங் கரன்படைக்குத் தலைவ னுனேன்
துண்டரிக தூடணன்திச் சிரனி ருப்பார்
   துயர்வேண்டா மங்கிருநீ சுகமா யென்றன்
மண்டலமே நடுங்கவந்து யிருந்தா னும்மால்
   மறைபட்டாள் செவிமூக்கு குறைபட் டாளே.

## இந்திரசித்து, நிகும்பலையிற் பல வேள்விகள் இயற்றுதல் ; சிவபெருமான் வரங்கள் கொடுத்தல்

வஸந்த பைரவி ராகம்] [ஆதி தாளம்

1. *நீலமேக மேனியனே ராமா - ராகவனே—ஐயா*
   *நித்திய கலியாணனே - சீதாபதியே - ராகவனே*
   *தாலமெல்லாம் புகழ்ச் சக்ரவர்த்தி ராகவனே - ராசன்*
   *தசரத குமார சாருவ பூமா ராகவனே.*

2. *அண்டர் முனிவர்களது துன்பந் தீர்த்த ராகவனே - அந்த*
   *அரக்கன் சரித்திர மின்னுஞ் சொல்வேனையா*
   *[ராகவனே*
   *தண்டகா வனத்திலவன் தங்கையை ராகவனே-அனுப்பித்*
   *தன்னரண் மனையில்வந்து சேர்ந்தானே ராகவனே.*

3. *மேகநாத னிகும்பலை வனத்திலி ராகவனே - இருந்து*
   *வேள்வி செய்வதையுங் கேட்டுச் சென்று*
   *[னிராகவனே*
   *ஏகவீரன் மகனைத் தழுவியேபின் னிராகவனே - பாலனே*
   *என்ன காரியஞ் செய்கிறு யென்றிசைத்தான்*
   *[ராகவனே.*

4. *அங்கிட்டோம மசுவமேத யாகம் ராகவனே - இன்னும்*
   *அரிதாம் வாசபேய மிராசசூய மிராகவனே*
   *இங்கு கோமேதம் வைஷ்ணவ மயேசுரம் ராகவனே*
   *எழுமகஞ் செய்தானெனவே சுக்கிர னியம்பியும்*
   *[ராகவனே.*

5. *இப்படி யாகஞ் செய்தானே கைலை யிறையவன் ராகவனே-*
   *[மகிழ்ந்தே*
   *எழுந்தருளி வரங்கள் கொடுத்தா ரென்று*
   *[ரிராகவனே*
   *எப்படி யிச்சையோ அந்தவிதமே ராகவனே - நடக்க*
   *எழும்பி வானிற் சஞ்சரிக்கவு மெங்கள் ராகவனே.*

6. இரத மொன்றுந் தாமசி மாயை யென்ப திராகவனே-
[அதுதான்
இருளையுண் டாக்கிடவே அஞ்சுவ ரெதிரிகள்
[ராகவனே
சுரர்க ளசுரர்கள்வந் ததிர்த்தாலுஞ் சொல்வே
[னிராகவனே - யார்க்கும்
தோன்றாதை யாஅவன் பாண மெதிரியைத் துளைக்கு
[மிராகவனே.

7. தொடுக்கவ நேகம் பாணங்க ணிறைந்த தூணி யிராகவனே-
[யிரண்டு
துங்க வில்லுக் கத்தி யொன்று சூர விராகவனே
ஒடுக்கிச் சகல சத்துரு சங்கார முறுமேனி ராகவனே -
[அத்திர
மொன்று மின்ன மநேக வரங்கள் உதவியே
[ராகவனே.

8. வேள்வி சம்பூரண வாகுதி கொடுக்க வேண்டி
[யிராகவனே - நல்ல
வேளை பார்த்துத் தகப்பன் வாவென்றும் வீரந்தா
[னிராகவனே
தாழ்வி தென்றே ராவண ராட்சதன் தனயனை ராகவனே -
[யாகத்தை
தடுத்தே கட்டிக்கொண் டவ்விடந் தன்னைச் சார்ந்தா
[னிராகவனே

## இராவணன் சிறைப்பிடித்த பெண்களை இலங்கையரண்மனையில் கொண்டுசேர்த்தல் ; விபீடணன் இராவணனுக்கு அறிவுரை பகர்தல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

வீட்டில்வந்து கன்னியரைத் தேரி றக்க
வீடணன்கண் டனனேயீ தென்ன பாவம்
வாட்டுமடா வுன்குலத்தைக் கிளையோ டையா
மட்டினங்கேள் சூரனு மதுவா லேநம்
பாட்டன்மா லியவான்பெண் ணனலை யீன்ற
பாவைகும்பீ னிசியும்பிடி பட்டாள் கன்னி
கேட்டவர்க்கு நகையாய்நங் குலத்தின் மானங்
கல்லினு னென்றிடித்துச் சொல்லி னுனே.

## இராவணன், கும்பகர்ணனுடன் மதுபுரஞ் செல்லுதல்; கும்பீனிசி மாங்கலியப் பிச்சை கேட்டல்; அரம்பையைக் காணல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

*அதுகேட்டு வாளரக்கன் மகனுந் தம்பி*
*யாங்கும்ப கர்ணனுடன் படையுங் கூடி*
*மதுபுரத்திற் செலக்கும்பீ னிசியாம் பெண்ணும்*
*மங்கல்யப்பிச்சை தாவென்று கேட்கக் கண்டான்*
*இதுவுமிராக் கதமணமா மென்றே விட்டு*
*மிமையவருல கம்பிடிப்போ மென்றே கூடிக்*
*கதுமெனவே சென்றளகா புரியோ ரங்கங்*
*கையைக்கண்டான் தோப்பிலரம் பையைக்கண்*
*டானே.*

## அரம்பை, நளகூபரனைச் சந்திக்கச் செல்லுதல்

செஞ்சுருட்டி ராகம்] [ஆதி தாளம்

### பல்லவி

*ரம்பை ஒயிலாய்நடந் தங்கே வந்தாள் - தெய்வ*
*ரம்பை ஒயிலாய்நடந் தங்கே வந்தாள்.*

### அநுபல்லவி

*தம்புருகூடி சங்கீதம்பாடி*
*தத்தளாங்கு தத்திங் கணத்தோ மென்றேயாடி (ரம்பை)*

### சரணங்கள்

1. *பூரண சந்த்ரவத னத்தினள் நல்ல*
*பொன்னின்கிண்ணம் போலவே தனத்தினள் -*
*[தெய்வ (ரம்பை)*
2. *மாதளம் விதைநேர் வரிசைப் பல்லினள்*
*வடித்த வமிர்தம்போலே சொல்லினள்-தெய்வ (ரம்பை)*
3. *வலம்புரிச் சங்கெனுங் கழுத்தினள் யோக*
*மாதவர் மயங்குங்கண்மை எழுத்தினள்-தெய்வ (ரம்பை)*
4. *சிலம்பங்கள் நடவாது யோகிகா ளெனப்பொற்*
*சிலம்பு சிலம்புபதப் பெண்கிளிபோல் - தெய்வ (ரம்பை)*

5. செந்தா மரைமலர்ப் பெண்ணிவ ளென்னவே
தீர ராவணன்முன்னே சோதி மின்னவே - தெய்வ
(ரம்பை)

6. நாகரீகன் தனபதி குலமது நீடவே
நளகூப ரீனயன்பாய்க் கூடவே - தெய்வ (ரம்பை)

7. வசந்தகா லங்கண்டு மாலைநே ரங்கண்டு
மதிநிலவு வீசிய வேளைகண்டு - தெய்வ. (ரம்பை)

## இராவணனை அரம்பை சபித்தல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரியச் சந்த விருத்தம்

அளகையா திபன்சேயன் பாரி நானென்
றரம்பைசொல்ல வலுவந்த மாய மரக்க
னுளங்கலங்கி மேல்விழுந்து மேதோ செய்தா
னேபாவி யினிமேலிவ் வுலகத் துள்ளோர்
களபமுலை யாரைமன தின்றித் தீண்டிற்
கற்பெரியி னல்சாம்ப லாவா யென்றாள்
நளகூப ரனுந்தலையே பிளப்பா மென்று
நாட்டினன் சாபமது சூட்டி னனே.

## இந்திரசித்து தேவர்களுடன் போர்புரியத் தொடங்கல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

காமியைப்போற் பாவியுண்டோ வுலகத் துள்ளே
காகுத்தா கேளுமையா சொல்வே னின்னும்
பூமியெல்லா நடுங்கிடவே வரக்கன் சேனை
பொழுதுவிடிந் தக்கணமே பொருக்கென் றேகித்
தாமிமையோர் நாடடைந்தா னமர ரென்ன
சஞ்சலமாய் மாயனிடங் கண்டே சொன்னார்
நேமியான் றடுத்துரைத்தான் மேக நாதன்
நினைந்திட்டான் பூசலுக்கு முனைந்திட் டானே.

## தேவர்களுடன் இந்திரசித்து போர்புரிதல்; போர் வருணனை

**சௌராஷ்ட்ர ராகம்]** **[ஆதி தாளம்**

பல்லவி

மேகநாதன் சண்டை கேளும் - ஸ்ரீ ராமசந்திரா
மேகநாதன் சண்டை கேளும்.

அநுபல்லவி

மேகநாதன் வெகுதீரன் - மோக மாயை வல்லதீரன்
வேள்வியைத் தொடுத்து விட்டான் - தாழ்வுசெய்து
[மதிகெட்டான் (மேகநாதன்)

சரணங்கள்

1. மிக்க வேகமுடன் கூடி - யொக்க ராவணனு நாடி
மேருவொத்த கும்பகர்ணன் - பாரினுக்கிர பாசகர்ணன்
வெத்தியில்லா சம்புமாலி - புத்தியில்லா வன்சுமாலி
வெட்டுணி கும்பனிகும்பன் - துஷ்டமா ரீசனகம்பன்
மேதினிக்குக் கண்டக(னு)னும் - மகோதரன் குண்டகனும்
வீமனெனுந் தூமகேது—காமரூபி சூரியமாது
மிண்டனெனும் புகைக்கண்ணன்—ரண்டனுமக் கினிக்
[கண்ணன்
வேடனுந் துர்முகன்கரன் - நூடனனுந் திரிசிரன்
வேறுருவை மாற்றுசுக—சாரணனு மின்னுமிக
வேயரக்கச் சேனபதி - தீயரான ஸ்தானபதி
மிஞ்சுகடுங் கோவிய—ரஞ்சாத பாவியர்
வீம்புசொல்லிப் பிதுக்கியும்—காம்புத்தோளைக் குலுக்கி
விட்டமாதே வரையின்று—கட்டநல்ல வேளையென்று [யும்
மீசைகள் முறுக்கிக்கொண்டு—ரோஷமாயு றுக்கிக்
மிதமில்லாத பற்படிக்க—வுதடுது டிதுடிக்க [கொண்டு
விசையநா மேற்பமென்று—புசபலம் பார்ப்போமென்று
மெத்தவும் வெருவிக்கொண்டு—கத்தியை யுறுவிக்கொண்டு
வெட்டுவோ மிந்திரனைக் கட்டுவோ மவன்றலையிற்
குட்டுவோம் நாங்தொடைகள் தட்டுவோ மென்றுவந்த
(மேகநாதன்)

2. சிங்கமுகத் தார்பலர்—குரங்குமுகத் தார்பலர்
செங்கழுதை முகத்தவர்—பங்கரைகள் மிகுத்தவர்
செங்கனலி னேத்திரர் - துங்கமுள காத்திரர்
சீறியேவெம் புவிமேலே—யேறியோமை மலைபோலே
தின்றிடுவோ மென்பார்சிலர்—கொன்றிடுவோ மென்பார்
[சிலர்
தேவர்களை வெல்லுவோ—மூவுலகுங் கெல்லுவோந்
திக்கசத்தைப் பிடிப்போம்—நொக்குநொக்கா யடிப்போஞ்
சிவன்மலையை யெடுக்க—அவரும்வரங் கொடுக்க
சேதியெல்லாந் தெரிந்ததும்—வேதவல்லி யெரிந்ததுந்
திண்டனெமன் கூடினனே—சண்டையிட்டு மோடினனே
சிட்டுக் குருவிக் கூட்டந் - தேவர்க்கென்ன
கட்டுக்கோப் பாட்ட மெங்கள்—முன்னே
சில்லிசில்லி யாகிப்போகும்—நெல்லிக்காய் மூட்டையாகுஞ்
சேவகத்தி ராணியென்ன—யிவர்களைநாங்
காவுகொள்ள லாகுமென்று—பாதாளத்திற்
சென்றோமே நாகரையும்—வென்றோமே காலகேயர்
செய்தசண்டை கண்டிட்டோமே—வருணலோக
மெய்திக்கொள்ளை கொண்டிட்டோமே-யெந்தவெந்தத்
திக்கிலு மெதிரியா—ருக்கிர ராவணன்பேர்
தெரியாதோ பார்த்த விடங்கள் - புகையெழும்பி
யெரியாதோ வண்ட கூடங்க - ளென்றுகைகள்
நீட்டியும் வேலாயுதங்க - ளீட்டியுஞ் சூலாயுதங்கள்
சிலைக்கைப் படைகள் பலபேர் - கையினிருப்
புலக்கைப் படைகள் பலபேர் - யானைபரி
தேருடனே கால்பலங்கள் - பாருடன்ர சாதலங்கள்
திடுக்கிட் டதிர வெழுந்தே - அண்டபித்தி
அடுக்குக் குலைந்து விழுந்தே - சூரியனுந்
திங்களுங் கதிதயங்கி - எங்கணுந் திசைமயங்கி
சித்தர்கள் பயந்து வாடவே - கிம்புருடரும்
வித்தியா தரரு மோடவே - மூவுலகுஞ்
செவிடுபடு மெக்காளந் - தவில்களுடன் கைத்தாளஞ்
சின்னமெடுத் தூதிவர - நாகசுரம்
வன்னமெடுத் தூதிவர - மத்தளங்கள்

நித்தாங் நித்தாஞ்செனு - தத்தாங் தத்தாங்தணத்
திங்கணத் தோமென்று மோசை - தாளங்க
ளுங்கணீர் கணீரென் றோசை - யரிவையர்
தெய்தெய்தெய் திரி - கிட தை தை தரிகிட
செந்தாரி யென்று நடிக்க - யநேகவி
தந்தாள வகை பிடிக்க - ஆலவட்டங்
திடக்கொடி சாமரங்க - ளிடக்கியந் தோமரங்கள்
சித்திரக் குடைக ணெருங்க - முத்துநவ
ரத்தினத் தோரண நெருங்க - விந்திரனை
செயங்கொள்வோ மென்றுகண்டு - பயங்கர ரூபங்கொண்டு
சிங்கமீதி லேறிவரு - மிராவணற்கு
மங்களங்கள் கூறுவாரு - மிப்படிக்குத்
தேவருல கிற்சென்று - தேவர் படைகளெல்லாந்
தெறிகெட வடித்தார்கள் - திக்குக்கபடு
முறிபட வடித்தார்கள் - இருதிறத்துச்
சேனைபதிகள் கூடி - நானுவிதங்கள் சண்டை
செய்யும் போதிற் சுமாலி - சரமாரி
பெய்யவே யம்பு கோலி - தேவர்சேனை
திட்டமின்றி மடியவே - யட்டவசுக் களிலொரு
தீரனுஞ் சாவித்திரன் - கொதித்தெழுந்து
போரிலே கனவிசித்திரன் - சுமாலி தேரைக்
சின்னபின்னப் படுத்தி - யென்னுண்மை பாரென்று
செங்கையி னிற்கதை வாங்கிச் - சுழற்றிவிட
வங்கது மெழுந்து மோங்கி - காலகாலன்
சீற்றம்போலக் கொல்லவரு - கூற்றம்போல ஆலகாலந்
திரண்டு வருவதே போல் - வடவையனல்
புரண்டு வருவதே போல் - மாயவன்
கைச்செஞ்சுடர்ச் சக்ரமென்ன - சிவன்கையிற்
[சூல மென்ன (மேகநாதன்)

3\. தேவராசன் சதகோடி - என்னவொரு
மூவுலகு மஞ்சக்கூடி - சுமாலியுடை
சிரசில்வந்து விழுந்து - பருவதம் போலிருந்த
தேகத்தைக் கரைத்த தையா - குழவியம்மி
யாகவு மரைத்த தையா - சுமாலியுரு

தெரியாமற் போகக்கண்டு - தரியாமற் பயங்கொண்டு
சேனைகள் தெறிகெட் டோடத் - தேர்ப்பரிகள்
யானைகள் முறிபட் டோட - அந்தவேளை
சிக்கென ராவணிபாரி - லக்கினிச்சொ ரூபத்தேரில்
சினங்கொண்டு மேறினனே - சபதங்கள்
கனங்கொண்டு கூறினனே - இராக்கதர்கள்
திரும்பவுஞ் சண்டைசெய்ய - விரும்பவும் தங்களுக்குச்
செயந்தர மதித்தாரே - இந்திரன்மகன்
சயந்தனை யெதிர்த்தாரே - அங்கவன்றன்
தேர்ப்பாகன் கோமுகனும் - ஏற்பாகக் கான்முகமுந்
தேரைச் செலுத்தி னனே - வீரஞ்சொல்லிப்
பேரை வலுத்தி னனே - அவன்தேருஞ்
சின்னபின் னங்களாகத் - தன்னுண்மை மேலாகத்
தேவருக்குச் சனியென்னவே - பிடித்தரக்கர்
யாவருக்குந் தனியென்னவே - மேகநாதன்
சேகர மரக்கர்சேனை - சாகரமுங் கொண்டுவெகு
திண்டுமுண்டு பண்ணி னனே - தேவர்களைத்
துண்டுதுண்டு பண்ணி னனே - கைகால்கள்
சேதிக்கக் கண்டிதமாய் - வாதிக்க வண்டர்படை
திக்குக்கெட்டுப் போச்சு தையா - இராக்கதர்க்கு
மிக்குவலு வாச்சு தையா - அந்த வேளை
செப்பமாய்ப் புலோமன்வந்து - தப்பவே சயந்தனையுந்
தேக்கவென்று பாட்ட னடுத்தான் - வாரிக்கட்டித்
தூக்கிக்கொண்டு மோட்ட மெடுத்தான் - சமுத்திரத்தில்
தேங்கின னெனவரக்க ரோங்கினர் கையிலுற்றத்தி
வாங்கினர் முனிவரெல்லா மேங்கின ரிப்படிக்கொத்த
(மேகநாதன்)

4. படர்ந்த படையொடுங்கி - தொடர்ந்து மிகநடுங்கி
பயந்து மொளித்துகொண்டு - சயந்த னிருப்பக்கண்டு
பார்த்து மாதலிபோடா - யேற்றதேர் கொண்டுவாடா
பார்ப்போமொரு கையென்று-தேர்ப்பாகற் குரை
[யொன்று
பண்ணினன் விசுவாசம் - நண்ணினன் தேவராசன்
பச்சைநிற மாமென்னு மூர்ச்சைசி ரவமென்னும்

பரிகட்டு மாரதமும் - கரிஅயிரா வதமும்
பருத்தசூரியர் பன்னிருவர்
உருத்திரர் பன்னொருவர்
பாருமேழு மருத்துக்கள் - சீருமிக்க வுருத்துக்கள்
பப்பளிக்கை நாடியவர்—முப்பத்துமுக் கோடிதேவர்
படைக ளெழுந்து விட்டதே - கோபாக்கினிப்
புடைகள் கொழுந்துவிட்டதே - விடநாக
வாணமும் சூர்யசந்த்ர - வாணமும் வருணவாயு
வாணங்க னநேக மாக - அக்கினிரூப
வாணங்க ளமோக மாக - சொரிந்து நாலு
பக்கமு மவசகுனம் - மிக்கவுமுண்டாகத் தேவர்கள்
பரவைகள் பண்ண வில்லையே - ராவணாதிகள்
வரமதை யெண்ண வில்லையே - இராக்கதன்
பத்துத்தலை ராவணன் - மற்றுமுள்ள சேனையுடன்
பணிகள் பூட்டிய தேரில் - ஏறிக்கொண்டே
அணிவகுத் தானேபோரில் - பின்பலனும்
பாமரன் கும்பகர்ணன் - மாமேரு மலைபோலே
படைத்துணை யுடனாடி - மூவுலகுங்
கெடுப்பேனே யென்னக்கூடி - கட்டாரிசூலம்
பரசுப ருத்தசத்தி - யுரசுகள் பேசுக்கத்திப்
பளபள வெனத்தரித்துக் - கைகலந்து
மளமள வெனநெரித்து - ஆயுதங்கள்
பல்லவக் கணையினாலும்—மல்லுயுத்தங் களினாலும்
பகல்மறைந் திருள்மிஞ்சவே - தேவசேனை
மிகவங்கே கைமிஞ்சவே - இரத்தநதி
பாயவடிக் கும்போது - தீயராட் சதசேனை
பத்திலொரு பங்கு மீந்தும் - ஒன்பதுபங்கே
சுத்தமாய்க் களத்தில் வீந்து - போனதையே
பார்த்தானை யாவுமக்குத் - தோற்றானே ராவணப்
பாதகன் தலைய சைத்தான் - கோபங்கொண்டு
காதகன் வில்லை வளைத்தான் - சாரதியைப்
பார்த்தடா தேவேந்திரர்க் - கேற்றதேர்மு னென்தேரைப்
பாய்ச்சிநான் செயங்கொள்ளுறேன் - தேவர்கால
மாச்சுது விழத்தள்ளுறேன் - என்றுகைகள்

பறக்கக்கண் ணில்நெருப்புப் - பிறக்க இந்திரன்கிட்ட
பத்தியே பல்லைக் கடித்துச் - சிங்கேறு போலே
கத்தியே துடித் டித்து - அற்பனுக்குப்
பவுசுவந்தது போலேயவன் - கண்மண் தெரியாமல்
வாணம் வருஷிக்கத் தானே - என்னதான் சொல்
காணுங் கருஷித்தானே - இரகுவீர [வேன்
யாக சாதனனதி - வேகமா யிராக்கதப்
படைக்கடல் முறிய வெட்டி - ராவணனைப்
பிடிக்கவென் றருகு கிட்டி - வீரங்கள்
படிக்கக்கண் டேஅரை - நொடிக்குள்ளே மேகநாதன்
பதட்டமாய்க் கடுக டுத்துத் - தொடையைத்தட்டி
யுதட்டை மடித்துக் கடித்து - நீலகண்ட
பரமேசன் முன்கொடுத்த - வரமதன் பலத்தாலே
பண்ணினன் வெகுறாட்டி - மாயைகொண்டு
கண்ணினு னிருள்காட்டி - யென்னசொல்வேன்
பாவிமுழு மூடர்க - ளீவிரக்க மில்லாத
பதடிகள் நெஞ்சு போலே - கடலில்வந்த
மிதமில்லா நஞ்சு போலே - உலகத்தின்
பாவமெல் லாந்திரண்டு - மூவுலகுங் கம்பினுப்போல்
பாயிரு ளாச்சு தையா - அண்டரண்ட
மாயிரு ளாச்சு தையா - ராவணன்தலை
பத்தினி லொன்பதுதலை - கத்தரிகொண் டறுத்தேயோமம்
பண்ணினன் ரணவீரன் - அவன்பெற்ற
கண்ணுமாஞ் சுயசூரன் - வாசபேயம்
பசுமேதம் ராசசூய - மசுவமேத மயேசப்
பலமெல்லா மொத்துக் கொண்டதே - இருள்வந்து
தலமெல்லா மொய்த்துக் கொண்டதே - காருக
பத்தியத்தின் முதலான - முத்தீயி லவனவிர்ப்
பாகங் கொடுத்த வேளை - வரத்தினின்
யோகங் கெடுத்த காளை - நாராச
வாணங்க ளர்த்தசந்திர - வாணமக் கினிக்கணை
பாம்புக் கணைகள் கோடி - விட்டுவெகு
தீம்புக்க ளுட னுடி - தேவேந்திரன்
பாதமுதற் கேசங்கள் - மீதுசல்ல டைக்கண்ணுயப்
பாதகன் துளைத்தானே - அண்டரையெல்லாங்
காதகன் வளைத்தானே - எமன்கையில்

பாசங்கொண் டுயிர்களை - வீசிப் பிடிப்பதுபோல்
பயமற்றுச் சாடி ஞனே - உருத்தெரியா
வயணத்திற் கூடி ஞனே - குளங்கலக்கிப்
பருந்தி னினங்களுக்கு - விருந்தளிப் பதுபோலே
பலபாடு களாக்கக் - கால்மாடு
தலைமாடு களாக்க - அதிசயித்து
பயமா யமரர்மன்னன் - அயிராவ தத்திலேறிப்
பரக்கப் பரக்க வாட - யிராவணித
• னுருவைக்காண வென்று தேட - வேளையகப்
பட்டுதென்றே யிந்திரனைக் - கட்டியவன் விருதையும்
பறித்து இரதத்திற் போட்டே - ராவணன்போரை
நிறுத்திய ரக்கர் மீட்டே - இலங்கையென்னும்
பட்டணந்தனில் வந்து - கட்டுப்பட்ட விந்திரனைப்
பருஞ்சிறை யதனில் வைத்தான் - தேவர்களை
அருஞ்சிறை யதனில் வைத்தான் - இப்படிக்குப்
படர்ந்து மண்டங்களையுங் கடந்து மமரர்களை
அடர்ந்து முனிவர்களைத் தொடர்ந்து கொலைகள்செய்த
(மேகநாதன்)

5. அண்டரு மண்டலவருந் - தண்டு கமண்டலவரும்
அரக்கருக் கஞ்சுவாரு - மிரக்கமாய்க் கெஞ்சுவாரும்
ஆகுதியை மறந்தோரும் - யோகநெறி துறந்தோரும்
அடவியி லொளிப்போருங் - கடலுள்ளே
[யொளிப்போரும்
அநியாய மென்பார்களும் - தனியானே மென்பார்களும்
ஆச்சரியப் படுவாரும் - மாச்சரியப் படுவாரும்
ஆகட்டு மென்பார்களும் - போகட்டு மென்பார்களும்
அழிபிள்ளை யென்பார்களும்-பழிகார னென்பார்களும்
அட்டமச்சினி யென்பாரும் - துட்டனிவ னென்பாரும்
ஆவியது துடிப்பாரும் பாவியென்று படிப்பாரும்
அலம்பலா யிந்தப் படிக்கே - யனைவரும்
புலம்பினர் நேர்ந்த படிக்கே - கீரிவாய்க்கு
ளரவங்க ளானோமென்றே - பிரமதே வரைச்சென்றே
ஐயா பிரம தேவா - வாணிமன்ற
துய்யா பிரமதேவா - அரக்கர்கையா

லடிபட்டான் தேவராசன் - பிடிபட்டா னினியென்ன
ஆதிக்க மிருக்குதையா - தேவருக்கென்ன
நீதிகளி ருக்குதையா - தேளுக்கே தா
னதிகாரங் கொடுத்தாப்போல் - விதியோராக் கதருக்கே
யன்றுவரங் கொடுத்தீரே - எங்களை யு
மின்றுகாட்டிக் கொடுத்தீரே - சாமியுமக்
கடைக்கல மிந்திரனை - விடுத்தெங்கள் மனக்குறை
யாற்றி ரட்சிக்க வேணும் - துன்பமெல்லாம்
மாற்றி ரட்சிக்க வேணும் - என்றுசொல்ல
அப்படியோ யிந்திரனுக் - கிப்படியோ வந்ததென்றே
அந்தரத்தின் மார்க்கங் கொண்டே - யிலங்கைக்கு
வந்திரா வணனைக் கண்டே - தசமுகனே
அட்டதிக்கும் நீதானே - திட்டமாகச் செயம்பண்ணி
ஆதிக்கம் படைத்தாயே - வெகுதவஞ்
சாதிக்கக் கிடைத்தாயே - சத்துருக்க
ளாரெங்கும் பயந்திட - போரெங்கும் பிரபல
மாக்கிய வீர னீயே - கயிலாசந்
தூக்கிய வீர னீயே - யிராக்கதர்க்கு
மரசேசம் விச்சிரவன் - வரசேயே வுன்னுடைய
அதிக பலமுங் கண்டோம் - சந்தோஷ
மதுவும் மிகவுங் கொண்டோம் - வெகுவெகு
யாகங்கள் செய்யவைத்த - மேகநாதனைப் பெற்றவுன்
னருமையை யென்ன சொல்வேன் - என்குலத்தின்
பெருமையை யென்ன சொல்வேன் - பிள்ளையென்ன
அணிப்பிள்ளை தென்னம்பிள்ளை-குணப்பழு தெண்ணுமலே
அமரர்மன் னனையுங் கட்டிச் - சிறையில்வைத்த
குமரனைப் பெற்றதே கெட்டி - பூமியுட
னந்தரஞ் சுவர்க்கமெங்கு - மிந்திரசித்த னென்றுசொல்ல
அவனுக்குப் பேர ளித்தோம் - வீரசூர
னிவனென்று கண்டு களித்தோம் - என்றுதுதித்
தயரும் வெகுவிதங்கள் - வயணமாய்ச் சொல்லியின்ன
மட்டி யொன்று செய்யாமலே - யிந்திரனை
விட்டு இங்கே வையாமலே - என்பதன்முன்
அம்பலத்தி லிராக்கத - கும்பலுட னிருந்தவ
னவன்பிள்ளை மந்திர சித்த - னிருளுக்குத்
தவஞ்செய்த விந்திர சித்த - யெழுந்திருந்தே

யமரத்து வங்கிடைத்தே - யெமனைச் செயிக்கவர
மருள்செய் தால் விட்டுவிடே - னிந்திரன்றன்
கரமதின் கட்டுவிடுவே - னென்றபோது
அன்னவாகனன் சொல்வா - ரென்னகா ரியஞ்சொன்ன
யாரங்கு நித்தியங் கண்டா - ரந்தஅதி
காரங்கள் மற்றது முண்டோ - செகத்தினிலே
யானைமுத லெறும்புக்குங் - கானமதின் மரங்கட்கு
மமரத்து வங்க ளில்லையே - யுனக்குமது
மமரச்சொல் வகையில்லையே - ஆருக்கு
மடவாது எந்தனுலே - நடவாது எந்தனுக்கு
மாயுசுக் கணக்கு நூறே - கேட்பதென்ன
போயினும் வரங்கள் வேறே - சொல்லெனவு
மண்டியெதி ராளியுடன் - சண்டைசெய்யும் போதுகண்டு
மக்கினியில் வெகு க்ஷேமம் - கொடுபூசை
மிக்கமந்தி ரத்தி ஹோமம் - தவறும
லாகுதி கொடுத்தாலந்த - மாகனலிற் குள்ளிருந்தே
அற்புதக் குதிரை பூட்டித் - தேர்வரவு
முற்பனமாய்க் காணு மேட்டி - மையுடனே
யந்திரமேற் கொண்டா - லெந்தயெதி ராளியானு
மழியா வரங்கள் தாகும் - புசபல
மொழியா வரங்கள் தாரும் - எனச்சொல்ல
அப்படிக்கே யோமவிதி - தப்பாமல் நடத்தினு
லாகட்டு மென்று கொடுத்தா - ரிந்திரன்பதிக்
கேகட்டு மென்று விடுத்தா - ரிலங்கையி
னறையிலடி பட்டிடுஞ் - சிறைச்சாலை விடுபட்டே
அப்புற மிந்திரனும் வந்தான் - புலியின்வாயில்
தப்பினவன் போலே நொந்தான் - சத்துருப்பா
லகப்பட வைத்ததெண்ணி - மிகப்பட வெட்கமது
வாகியே றிட்டுப் பாரான் - பிரமனையே
போகிறே ரிட்டுப் பாரான் - தேவராச
னவமானத் தால்மெலிந்தே - கவலையா யுள்ளமது
அலைவாய்க் கனிக னிந்தே - பேசாமல்
தலை[யும் குனி]கு னிந்தே - நின்றதுகண்
டயனிந்தி ரனைப்பார்த்து - வயணமொன்று சொல்வா
ரகலிகையைத் தொட்டவினையே - சுற்றிக்கொண்டு
தகங்கொடுத் ததுமுனையே - யுலகினில்

அன்னியன் பெண்டாட்டிகளை - யுன்னுதற்கு வழிவிட்டா
யப்பாவஞ் சும்மா விடுமோ - ரிஷிகள்சாபஞ்
தப்பாதே யென்ன கெடுமோ - நல்லதினி
யாகட்டும் வைணவ - யாகத்தைத் தொடங்கென்றே
யாற்றவே யவன்தேறி - யெல்லோருங் கூடி
நேர்த்தியாய்வி மானமேறி - யமரர்பதிக்
கையா சென்றார் கோதண்டக் கையா வரக்கருயிர்
வையா தடிக்கவந்த மெய்யாரவி ராமசந்திரா.
(மேகநாதன்)

## கார்த்தவீரியனின் வீரச்சிறப்பினை அகத்திய முனிவர் கூறத் தொடங்கல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

குறுமுனிவ னிந்தவகை கூற ராமன்
கூறுவார் பொதியமலைக் குருவே கேண்மோ
திறமிக்கா னவனென்றே புகழ்ந்தீ ரிந்தத்
தேசத்தி லோரிராசர் சிலைபி டித்தோர்
உறுதியுட னிவனைக்கொண் டடைத்தீதா ரார்தா
முண்டான துரைசெய்வீ ரெனவு மாங்கே
பிரபலமாங் கார்த்தவீ ரியன்தன் சேதி
பேசுவான் கதைவெளியாய் வீசு வானே.

சாரங்கா ராகம்] [சாபு தாளம்

### பல்லவி

கார்த்த வீரியன் சரிதை கேளுமிராமா - யோகயாதிப
கார்த்த வீரியன் சரிதை கேளு மிராமா.

### அநுபல்லவி

கார்த்த வீரியன் சரிதை கேளும்-நாற்றிசையும் புகழ வாழும
யோத்திமா நகர்வந்த பார்த்தி வேந்திரா - வீரசவுரிய
(கார்த்த)

**சரணங்கள்**

1. மாகிஷ்டு மதியென் றெங்கும் - பேர்பெற்ற புரந்தா - னதில்
    வளருஞ் சக்கரவர்த்தி யாமொரு சிரத்தான்
  ஏகவீரப் பிரதாப னுயிரங் கரத்தா - னங்கு
    மிருந்து செங்கோல் செலுத்தி னுன்வெகு வரத்தான்
  நாக ரீக மதாகவே பண்டு
    நாளொன் றிற்புன லாடலாய்க் கொண்டு
  தோகை மாருட னிமயமலை கண்டு
    துய்ய நர்மதை நதியிற்சென் றது ண்டு (கார்த்த)

2. பத்துத்தலை யரக்கனுஞ் சென்றுனங்கே நாடி - அந்தப்
    பட்டணத்தினி லருச்சு னன் றனைத் தேடி
  சுத்தி மந்திரிமாரைப் பிடித்துழு டாடி - வழி
    துறையெல்லாங் கண்டு சதுரங்கப் படை கூடி
  மத்து நர்மதை யாடியே - தங்க
    மயம தாகிய சிவலிங்கம்
  வைத்து மணற்றிட்டிற் பூசை யதனங்கம்
    வரிசையாய்ச் செய்தானேயா நர சிங்கம் (கார்த்த)

3. மேற்கு முகமாய்க் கடலைச் சேருமா றோட்டம் - நேரே
    மேற்கே அருச்சுனன் மாத ராயிரங் கூட்டம்
  தீர்க்கமாய் நடுச்சூலத்தி லேவிளை யாட்ட - மாடிச்
    சிறந்த வேளையிற் சிவக்கவே அவ னுட்டம்
  பார்க்கவன் கதிர்போலுந் திரளவே - பாணி
    யனுருல டைக்கப்பு ரளவே
  மூர்க்க முதலைகள் மீன்கள் மிரளவே
    மூண்டு மிதித்தேறி வெள்ளம் புரளவே (கார்த்த)

4. கிழக்குப் பாரிச மணலெலாம் பரந்தடிக்கப் - பூசைக்
    கிரியை யிராவணன் பேசாமல் விரல்நொடிக்க - இந்தப்
  பிழைக்குக் காரணமாரென் றவனுயிர் குடிக்க - என்று
    பலத்த சுகசாரணர்க ளோடிக்கண்டு பிடிக்க
  மழைக்கையன நிறவரக்க ருக்குச் சொல்ல
    வாய்த்ததென் றெழுந்து படைகளுடன் செல்ல
  வழிக்கு ளருச்சுனன் மந்திரிகளு நல்ல
    வார்த்தை சொல்லக் கேளாதவரை யங்கே - கொல்ல
(கார்த்த)

5. இந்தச் சேதிகளைச் சிலவே மந்திரிமார்கள் - சென்று
மேக யாதிப ராசனிட முரைத்தார்கள்
அந்த வாறறிந் தவனுஞ் சீக்கிரம் போர்கள் - செய்வோம்
அடடா படைஞரேன் மங்கையரைக் காப்பீர்கள்
தொந்த யுத்தம் பாரு மென்று வலுக்கவே
சுழட்டிக் கைக்கதைகொண் டதட்டிக் குலுக்கவே
வந்த ரக்கர் படைகிலு கிலுக்கவே
வாது பேசியே பிரகத்தன் பிலுக்கவே (கார்த்த)

6. இருப்புலக் கையைக்கொண்டு பிரகத்தன் துதித்திடும்
[வேளை - அங்கே
எமனைப்போற் சீறிய'டித்தா னருச்சுனன் காளை
கருப்பங் கலங்கவே யசைந்தா னுயிரந் தோளைப்
பல்லைக்கடித்தே யடிக்கவே சிதறி பிரகத்தன் மூளை
வருத்த மாகவே யிரத்தங்க ளைக்கக்க
மடிவு வந்த தென்றே - அரக்கர் பிரமிக்க
நிருத்த மிட்டுத் தேவர் யாவரு நகைக்க
நெருங்கி யிராவணனும் வந்து வளைக்க (கார்த்த)

7. இருவருங் கதைசுழற்றியே வெகுவீரம் - பேசி
யெறிந்து கொண்டுபோ ராடினர் வெகுநேரம்
பருவ மெனவென்று அருச்சுனன் கனகோரஞ்-செய்து
பத்துத் தலையினை யடித்ததென்ன சொல்வேன் சூரம்
குருதி கக்கிடவே மூர்ச்சை யாக்கினன்
கூறறிந் தவனை யுடனே தூக்கினன்
விருதுசொல் லிக்கொண்டவ மானம் போக்கினன்
வரிந்து கட்டிக்கொண் டேசிறையிற் றாக்கினன்.
(கார்த்த)

## புலத்தியர் இராவணனைச் சிறைமீட்டல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

சிறைச்சாலை தனிலிலங்கே சனைய டைத்த
செய்தியெல்லாம் புலத்தியரென் றெங்குஞ் சொல்லு
மறைமுனிவன் கேட்டுவந்து கார்த்த வீர!
மன்னனிடஞ் சமாதான வாசை பேசி

முறையாயக் கினிபகவன் சாட்சி யாக
முடிப்பத்தா னவிடச்செய் தவரும் போனார்
குறையில்லா ரகுவீர! வாலி வீரங்
கூறுவே னனந்த மீறு வேனே.

## வாலி இராவணனைக் கொண்டு செல்லல்

**தோடி ராகம்]** **[ரூபக தாளம்**

பல்லவி

1. வாலி பல சாலியைநீர் வதைத்தீரே யவ னிராவணனை
மடக்கிய காதையை வகையாய்ச் சொல்வேன்

அநுபல்லவி

சீலனே கோசலையருளும் பாலனே ராமசந்திரனே
தேவர்முனி வோர்களது துன்பந்தீர்த்த ரகுகுல
[நாதனே (வாலி)

சரணங்கள்

1. கெடியாயந்த ராவணன்முன் கிட்கிந்தையை நாடித்
துடியாய் வாலியுடன் போர்செய்யத் தொடர்ந்தங்கே
[தேடி
முடியாதென்று தாரைசொல்லை முறித்தேபடையுங் கூடிக்
கடிதாய்ச் சென்றானையா கஞ்சக் கண்ணனே
[யண்ணலே புண்ணியரூபனே (வாலி)

2. ராட்சதனுக் கொரு புரோட்சத னிட்டிலுண் டையா
[கோதண்ட
தீட்சா குருவே யவன் தெற்குக் கடலண்டை
காட்சியங்கே வாலிதனைக் கண்டுசிக்கிக் கொண்ட
சூட்சஞ் சொல்வே னிரவிகுல சோமனே பூமனே
[ராமனே தேவரீர் (வாலி)

3. அய்யா நரிகண் மூடினு லத்தமனமா மென்றே
மெய்யா யெண்ணியதுபோல் விரைந்தரக்கன் சென்றே
கையால் வாலியைப் பிடித்துக் கட்டவேணு மென்றே
ஒய்யாரமாய்ப் பின்னுகவே ஓடினன் காடினை நாடிய
[வானர (வாலி)

4. உதயாதியில் வாலியெழுந் தோங்கிய தென் கடல் மீதே
விதிமார்க்கமா யாடிமணல் மேலே சபஞ்செய் போதே
அதிவேகமாய்ப் பின்னுகிவந் தரக்கன் கட்டவுஞ் சூதே
யிதுவென் றறிந்தே கட்கத்தி லிடுக்கித் துடுக்கை
[யடக்கினு னையா (வாலி)

5. குரங்குப்பிடி யென்பதுமெய் கொண்டே பத்துத் தலையும்
நெருங்கக் கையி லிருக்கிக் கொண்டு நெடிதாகிய மலையும்
தரங்கக்கடல் நாலுமாட்டித் தசக்கிரீவன் மெய்குலையுங்
கரங்களுடன் காலுமோயக் கசக்கி மசக்கி
[நசுக்கினு னையா (வாலி)

6. சுற்றிக் கொண்டு கிட்கிந்தையைச் சூழும் நந்தவனம் மேலே
குற்றுயிராய்ப் போட்டுந் திரும்பிக் குழூமுக கள்ளன்
[போலே
எத்திலங்கை யாதிபனே யெனச்சொல்லியு மப்பாலே
மற்றுரோ வென் றிருந்தேனடா வாரு முன்
னுரென்ன பேரென்ன வென்றுனே (வாலி)

7. துட்ட பிள்ளைக்கூரார் புத்தி சொல்லா ரென்பதுவும்
[வெட்கங்
கெட்டுப்போய் வாலியை வணங்கிக் கிட்கிந்தையின்
[பக்கம்
திட்டமா யொரு மாதமிருந்து தென்னிலங்கை சென்றுன்
[துக்கம்
பட்டதைக் குட்டு மார்க்கமாய் வீரம் பண்ணினுன்
[பெண்ணினுல் மண்ணினில் வீழ்ந்தானே. (வாலி)

## இராமன் அநுமனின் பெருமையை வியந்து கூறுதல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

வாலியந்த ராவணனை மடக்குங் காதை
வகைவகையாய்க் கும்பமுனி யுரைக்கக் கேட்டு
நூலிலங்கு மணிமார்பன் ராக வேந்த்ரன்
நுவலுவான் கோபொதியை மலையி னையா
வேலியுடுத் திருங்கடலைத் தாண்டி லங்கை
மேவியுந்தி யிட்டானென் றம்பிக் காக
மூலிகையுங் கொணர்ந்தானென் னநுமா னென்றே
மொழிந்திட்டா னனந்தம் பொழிந்திட் டானே.

ஆனந்த பைரவி] இதுவுமது [சாபு தாளம்

பல்லவி

அநுமானு லிந்த கனமுந் துரைத்தனமு
மபிஷேகங் கொண்டேன் முனியே.

அநுபல்லவி

மனுவெல்லாம் பிழைக்கவும் மாதங்கள் தழைக்கவும்
அநுகூல முற்றேனுந்த னாசீர்வாதம் பெற்றேனெந்தன்
(அநுமா)

சரணங்கள்

1. பம்பாதீர மதில்வந்து கூடினான் - பின்னுமையா
நம்பிக்கையாய்ச் சுக்கிரீவனை மிகவுங் கொண்டாடினான்
எம்பித்தெற்குக் கடல்தாண்டி யோடினான்-இலங்கையைப்
பம்பரம்போல் சுற்றிச்சீதை யெங்கேயென்று தேடினான்
கொம்பனைய சானகிதனம்புச முகமலர
சம்பிரவ மோதிர மீந்தான் - தென்புசொல்லி யுயிர்
[காத்தான் (அநுமா)

2. வீரஞ்செய் தசோகவனம் முறித்தான் - எதிர்த்துநின்ற
போரி லட்சயகுமார னுயிரையும் பறித்தான்
நேரிட்டு வந்தவர்களை மறித்தான் - இராவணனை
யாரடாவென்றே துரும்பாயெண்ணிப் பேசக் குறித்தான்
பாரறிய லங்கையென்னு மூரிலே தீயையு மிட்டான்
வாரிகடந் தென்முன் கண்டேன்
காரிகையை யென்று சொன்னான் (அநுமா)

3. தருணத்திற் கொண்டுவந்தான் சஞ்சீவி - மலைதன்னை
அருமைத் தம்பியுடனே யனைவர்க்கு மாவி
தருமிவ னந்திக்கி ராமந்தனிற் கூவி - யோடிவந்தான்
பரதனுக்குயி ரீந்தா னிவன்சிரஞ் சீவி
தரணியி லரக்கரைப் பொருது சயமுங் கொண்டேன்
திருமகுடம் புனைந்தேன் பெருமையும் பெருக்கினேன்.
(அநுமா)

## இராமபிரான், அநுமன் தன்பலம் உணராமைக்குக் காரணம் வினவல் : அகத்தியர் கூறத்தொடங்கல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

மாதரசி லோபாமுத் திரைக்கு நேயன்
வாரிதியை யாசமனங் கொண்டோ ளை
போதமிகு மகத்தியனை யாதி யான
புனிதமுள தபோதனர்கள் முன்னே ராம
னாதரவா யநுமனையே மிகக்கொண் டாடி
யையர்களே நீங்களெல்லா மறிந்த தாமே
யேதிவன் பலமறியா திருந்தான் றனே
........பிப்பான் குறுமுனியா ரம்பிப் பானே.

### அநுமன் வரலாறு

கனசிட்டு ராகம்] கண்ணிகள் [ரூபக தாளம்

1. சரயூநதி வளநாட தசரதனருள் புத்திரனே - புவிக்
கரசே குணநிதியே யெங்க ளையனே ராம பத்திரனே
2. மாமேரு மலையோரத்தில் வளஞ்சேரொரு வூரா - மந்தப்
பூமிமீதுறை கேசரியெனும் புருஷனவன் பேராம்
3. அவன் சிந்தைக் கிசைந்தபாரி யாமஞ்சனை யெனுமினவள் - [மிகு
தவஞ்செய்ததால் வாயுதேவனுல் தரித்தாள் கற்ப முன்னுள்.
4. இளஞ்சூரிய னெனவே பிள்ளை யீன்றனள் சீமாட்டி - [யப்போ
கிளம்பிப்பசி யாலேகனி கிழங்குதேடிக் காட்டில் ;
5. உத்தபோதினில் வாலசூரிய னுதிக்கக்கண்டு கூவியே - [மனத்தில்
நத்திச் செம்பழமா மென்றேயதை நாடியே - உயரத் [தாவியே ;
6. இளங்கன்று பயமறியாதென் றியம்புவர் புவிமீதே - சோதி
துளங்கவே விளங்கவே வனமார்க்கத்தில் தொடர்ந்தோட - [வப்போதே

7. தேவர்தானவர் சித்தர் கின்னரர் திகைத்தே இது
[யாரோ - வானில்
மேவுவாயு கருடனோ மகவேகமோ யென்ன பேரோ -
[அடடா ;

8. என்று சந்தோஷங்கொண்டு பார்த்து மிவனேவாயு
[குமாரன்
நன்றுநன்று குழந்தைகா ணிந்த நாளிலும் வெகு தீரன்.

9. கண்டோமே யின்னும் பருவத்தில் பலன்கையில்
[பிடிபடுமோ - என்று
கொண்டிருந்தனர் சூரிய மண்டலங் குறுகினன் - வெயில்
[சுடுமோ ;

10. குழந்தையென்று சூரிய நாராயணன் குளிர்ச்சியா
[யிருந்தானே - கொஞ்ச
மழுதகால் பால னிரவி தெற்கு மேலாகி வருவானே.

11. ராகுவென்பவன் கண்டு தன்னைப்போ லிருசுடரையு நாடி -
[யோகோ-கி
ராணமாரோ தொடுக்கின்ற னென்றுகிளம்பி யிந்திர
[னைத் தேடி ;

12. கூவென் றென்னதிகார மியார்க்குநீ கொடுத்தாய் தேவ
[ராசனே - யிங்கே
வாவென்று சொல்ல வெழுந்தானந்த வானவர் பதி
[வாசனே.

13. வெள்ளை யானைமே லேறியே வரும் வேளையானது கண்டே-
[பிள்ளை
வெள்ளையாங் கனி யென்று மியானையை விரட்டக் கோபங்
[கொண்டே.

14. ஊர்ச்சிதங் கொண்டு வச்சிரங் கையா லோங்கிக் கன்னத்தி
[லடித்தான் - பாலன்
மூர்ச்சையாய் மலைமீது வீழ்ந்து முயங்கித்துடி துடித்தான்.

15. வாயுதேவன் கண்டுடனே புவி வான் சுவர்க்கத்தி லுள்ள -
[ஆரு
மோயஇவ் வாயுத்தம்பனஞ் செய்தொடுக்கின னென்ன
[விள்ள ;

16. காக்கைக்குந் தன்குட்டி பொன்குட்டி காணுமென்ற
[சொல்லெட்டவே - உயிர்கள்
மூக்கினல் காத்துசஞ் சரிக்காமல் முட்டவே யெங்குங்
[கட்டவே ;

17. மதுவிந்து கலகமென்ற வழக்கச் சொல்லையும் போலே -
[யெங்கும்
பொதுவ தாகவே பேச்சு மூச்சு முழக்கின்றிப் போச்சே
[யென்ன மேலே.

18. மற்றுந் தேவர்கள் தானவர் சித்தர் மாதவ
[முனிவோர்கள் - கூடி
சத்திய லோகத்திற் பிரமனரிடஞ் சார்ந்து கூறினர்கள்.

19. அன்ன வாகனமீதி லேறிக்கொண் டயனுந் தேவருங்
[கூடி - வாயு
மன்னன் மைந்தனுட னிருக்கின்ற மலையோரத்தை நாடி ;

20. கட்டை போலே கிடக்கும் பிள்ளையைக் கையினல் பிரம
[னெடுத்தா - ரெங்குஞ்
சட்ட மாகவே தடவியே யன்பாய்த் தானே சீவன்
[கொடுத்தார்.

## அநுமன் உணர்ச்சி பெறுதலும், வாயுபகவான் உலகத்துயிர் வாழக் காற்றை வெளிப்படுத்தலும்

### அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

தன்னரு மைப்பு தல்வன் தான்சீவன் பெற்ற போதே
மன்னிய வுயிர்க ளெல்லாம் வாழ்ந்திட வாயுச் செய்தான்
அன்னவா கனனுந் தேவர் யாவரு மனம கிழ்ந்தே
சொன்னயம் பெருவ ரங்கள் கொடுத்திட்டார் கொடுத்திட்
[டாரே.

## அநுமன் வரலாறு—தொடர்ச்சி

சங்கராபரண ராகம்] [சாபு தாளம்

பல்லவி

காகுத்தா கருணா நிதியே - ராம
காகுத்தா கருணா நிதியே.

அநுபல்லவி

காகுத்தா யின்னுஞ்சொல்வேன் கவிப்புலி மாருதிக்கு
தேகம் வச்சிர தேகமதாய்த் தேவராசன் கொடுத்தான்
(காகுத்தா)

சரணங்கள்

1. குலிசத்தடி கன்னத்தில் கொண்டானே - யதைக்
கொண்டே யநுமானென்றும் விண்டானே - மிக்க
வலுவா யொருவர்கையிற் றண்டானே - இந்த
மைந்தனே வாயுபெற்றுக் கண்டானே - நாளும்
நலமே பெறுகவென்று நாடி யிந்திர னின்னும்
பலவும் வரங்கொடுத்தான் பார்த்திவ ரிடபனே
(காகுத்தா)

2. சகல சாஸ்திரமு மிவன்கை தானே - யெந்தன்
சரங்களால் பயமில்லை மெய் தானே - என்று
பகவன் சூரியனுரைசெய் தானே - திக்குப்
பாலரில்மேற் கென்றதிசை தானே
மகராசன் வருணனும் மழையாலுஞ் சலத்தாலும்
பகையில்லை யெந்தனுடைப் பாசமனுகாதென்றான்
(காகுத்தா)

3. காலதண்ட மிவனைக் கொல்லாது - பாசக்
கயிறும் வியாதிகளும் செல்லாது - இன்னும்
மேலாங்கணை யிவன்முன் நில்லாது - இவனை
வீரனென் றெவர்வாய்கள் சொல்லாது - என்று
ஞாலம் புகழ்ந்திடவே நல்ல தரும ராசன்
சீலனனு மானுக்கே தீர்க்க வரங்கொடுத்தான்
(காகுத்தா)

4. பிங்கலன் குபேரன்றன் படையாலே - யொரு
பிழையும்வரா தென்றனே யினிமேலே - முக்கண்
சங்கர மூர்த்தியருள் கிருபையாலே - வரந்
தந்ததை யென்னசொல்வே னுருக்காலே
அங்கோர் சாபத்தினலு மழிவில்லை யென்றுதந்தார்
புங்கவன் வாயுராசன் புதல்வனைப் பெற்றவேளை
(காகுத்தா)

5. திசைமுகப் பிரம்மாவுந் தொடுத்தான் - என்றுஞ்
சிரஞ்சீவி யநுமானென் றெடுத்தா - னப்போ
விசுவகர் மனுமங்கே யடுத்தா - னென்கை
வேலைப்படை கொல்லாதென்றே கொடுத்தான் - [எட்டுத்
திசையுஞ்சர்க் கரைப்பந்தலில் தேன்மாரி பொழிந்தாப் [போல்
இசையும் வரங்கொடுத்தா ரின்னமுஞ் சொல்வேனையா
(காகுத்தா)

6. ராவணசங் காரத்தை நாடி - இனியி
ராமன் வருவாரங்கே கூடி - மன
தாவலா யன்புசெய்வார் நீடி - யிவனை
யாஞ்சனேய னென்றுங்கொண் டாடி - வாயு
தேவைய னுப்பிக்கொண்டு தேவக ணங்களுடன்
மேவினன் றன்னிடத்தில் வேதனும் ரகுநாதா
(காகுத்தா)

7. அஞ்சனை வளர்த்திடத் துதித்தா - னிந்த
அநுமான் வாலிபத்தில் கதித்தான் - வனத்தில்
மிஞ்சி ரிஷியையவ மதித்தான் - தவ
விக்கினஞ் செய்துமையா குதித்தான் - அவர்கள்
அஞ்சாதீ வன்றன்பல னறியாம லிருக்கவுந்
துஞ்சாத கீர்த்திராமன் தூதில் தெரியவென்றுர்.
(காகுத்தா)

## அநுமன் வாலிசுக்ரீவர்களைச் சார்ந்திருத்தல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

முனிகள்சாப மதனாலே யடங்கி வாயு
முதற்பிள்ளை சொரூபமறி யாதி ருந்தான்
இனிமையாய் வாலிசுக்கி ரீவர் தந்தே
யிரட்சரசன் வானரா திபனு மாகிப்
பனியினது பகைகாந்தி யால்வி ளங்கும்
பான்மையால் மகிபாரம் பரித்துப் பின்பு
வினைவசத்தால் காலகர்ம மடைந்தா னையா
வீரரா கவனீரே தீர ராமே.

### இதுவுமது

அந்தயிரட் சரசனுடைப் பதத்தில் வாலி
யைவைத்துஞ் சுக்கிரீ வனையு மங்கே
இந்தவகை வாலிபதந் தனிலே வைத்து
இருக்குநா ளிருவர்களும் பகையில் லாமற்
செந்தழலும் வாயுவும்போற் சேர்ந்தி ருந்தார்
சயசாலி யிந்தவநு மானுங் கூடச்
சொந்தமுள்ள தன்பலனை தனக்கு மங்கே
தோன்றாதா ருன்னையன்றிக் காணா தாரே.

## அநுமன் சுக்ரீவனுடன் வசித்தல்

புன்னாகவராளி ராகம்] தரு [ரூபக தாளம்

1. வாலி சுக்கிரீவ ரிருவற்கும் பகைவந்த - பின்பு
வந்து சுக்கிரீவனிடஞ் சேர்ந்திருந்தா னிந்த
சீலனநு மானிவன் சுக்கிரீவன் பயந்தீர்த்தா - னுயர்
சிங்கமது கூட்டுக்குள்ளா யிருப்பதைப் போலேதான் ;

2. அடங்கி யிருந்தாலுமிவ னமர்க்களத்தில் வருக - வீரம்ப
ராக்கிரமம் புத்தியுச்சா யம்பிரதா பம்வருக
மடங்கலில்லா சவுசீலமும் மாதுரியம் நயமும் - இன்னும்
மகிழ்ச்சியுள்ள கம்பீரமும் மகிமை தைரியமும் ;

3. இவகையில் மூவுலகி லிந்த அநுமனங்கே - மிஞ்சி
யெவர்களுண்டு தாசரதே ராமசந்த்ரரே யவனுக்கே
அவகையன்றி கிரணங்களை யகிலமெங்கும் நிறைக்கும்- சூரி
யனுக்கெதிரே உதயகிரி யஸ்தகிரி வரைக்கும்;

4. எதிர்முகமாய்ப் பின்நடந்து வியாகரணம் படித்தார் - [இன்னும்
எழில்சகல நூல்களிலு மிவர்முன் னெவர்படித்தார்
முதிர்பெறவே யிந்தவகை யநுமன் வரலாறு - களை
முழுதுஞ்சொல்ல வாச்சுதையா அப்படியே தேறு.

5. வானவர்க ளங்கிசைவால் வானரராய் வந்தார் - ரகு
வல்லவனே யுன்பணிக்காய் வையகத் திருந்தார்
மோனமுனி வோர்கட்கெல்லாம் முதன்மையநு மானே - [என்று
மூவுலகுந் துதிக்குதையா முற்றுஞ்சொல்லு வேனே.

## வாலி சுக்ரீவர் பிறப்பு வரலாற்றைக் கூறுமாறு இராமன் கேட்க, அகத்தியர் கூறத்தொடங்கல்

### பதினைந்துசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

இப்படிக் காஞ்ச னேயனை முதலா
யெடுத்துரை கவிகளின் சரிதை
யாவையு முனிவ னுரைத்திட ராம
னிலக்கும னுடன்செவி கொடுத்தும்
அப்படிக் கரக்கர் குரக்கர்க ளுடனே
அற்புத மடைந்துமா முனியை
அரிவின வுதலில் வாலிசுக் கிரீவற்
சுயபிதா யிரட்சர சனுமாய்ச்
செப்பினீ ரவர்கட் கன்னைபே ரென்னச்
செவியறி யச்சொலு மெனவே
தேவமா முனிநா ரதர்நமக் குரைத்த
செயலிதைக் கேளென முனிவன்
மெய்ப்பொரு ளுரைப்பார் பொதிகையி லிருப்பார்
விளங்கவுங் கடத்தில்முன் னுதிப்பார்
மித்திரை லோபா முத்திரைக் கதிபன்
வியனகத் தியனெனுந் துயனே.

## வாலி சுக்ரீவர்களின் பெற்ரோர்பற்றி அகத்தியர் கூறல்

**நேரிசை வெண்பா**

*வாலிசுக்கி ரீவற்கு மாதாபி தாவென்ற*
*சோலிமிக வில்லே சுருக்கமே - மாலிகையுந்*
*தேசும் பெறுமவர்கள் சேதியெல்லா மெண்டிசையும்*
*பேசுமவர் தேவப் பிறப்பு.*

## வாலிசுக்ரீவர் வரலாறு : தொடர்ச்சி

**சௌராஷ்ட்ர ராகம்]** **[ரூபக தாளம்**

**பல்லவி**

*தேவப் பிறப்பு வாலி - சுக்கி -*
*ரீவன் பிறப்பைக் கேளு மையா.*

**அநுபல்லவி**

*சீராமா ரா சிவனு ராதிக்கு*
*மிக்கு வாகுக் குலத்தவனே* (தேவப்)

**சரணங்கள்**

1. *நாவின்மக ளென்னுளும் வீணையில்*
*நாடிப்பாடித் துதிக்குஞ்சீதா ரமணனே*
*கமலலோ சனராமா - வபிராமா*
*குணதாமா வெகு நாமா - உயர்* (தேவப்)

2. *சொர்ணகிரி யமரர் பூசிதம்*
*சூழுங் கொடுமுடி நீளும்*
*பிர்....ன்னம தாய்நூறு யோசனை யாயொரு*
*சபையுண் டதிலென் னுளும்*
*அன்னத் துவசனே வீற்றிருக் கின்றது*
*மச்சபை தன்னிலே கேளும் - அங்கு*
*முன்னொரு நாட்ச துமுகப் பிரமனும்*
*முழக்கமா யிருந்தாளும்*
*மொழிந்திட லாச்சே - கண்ணீரும்*
*விழுந்திட லாச்சே - ஆருக்கெனில்*
*வேதா கண் ணீர்த்துளி யேதானது கொண்டும்*
*ஆதார மாய்வான ராதீச னுண்டானு*

லட்சண மீதிலி ரட்சரச னும்வி
லட்சண கவியைச் சட்சுக்க ளால்கண்டு
சட்டத்தினை யிட்டப்பொழு
தெட்டுக்கண்ணி விட்டத்தொடு (தேவப்)

3. மேதியா யடைந்தோ னங்குந் தமது - ச
மீபத்திலே நித்திய வாசஞ் - செய்து
நீதிரி யென்பது கொண்டு ரட்சரச
னித்தமப் படியுல் லாசந்
தாதவிழ் சோலையிற் சஞ்சரித்துக் கொண்டும் - சாயங்
காலத்திலும் நேச மாகச்
சீத மலருங் கனிகளை யும்மிகச்
சேகரித் தும்விசு வாசஞ்
சித்தத்தி லுற்று - பிரமன்ப
தத்தினில் வைத்து - வருநாளில்
பாருமையா ராம மேருச் சிகரத்தின்
நேரே வடக்கிற்சஞ் சாரஞ்செய் போதிலே
சத்திக்கும் பட்சிகள் மெத்தவுஞ் சூழ்ந்துச
லத்தின் தெளிவுமி குத்ததோ ரோடையிற்
கொண்டானது கண்டானெனி
லுண்டாயது கண்டாயரி (தேவப்)

4. அங்கத வானர னுடைச் சலத்திலே
யாடுமுகம் நிழல் நேரே - பார்த்து
மிங்கிவ் விடத்திலே நம்மை யவமான
மிப்படிச் செய்பவ ராரோ
சங்கனிவன் சத்துரு நமக்கென் றெண்ணிச்
சபலத்தால் மடுநீரோ கலக் -
கங்கொள்ளவே எழும்பிக் குதித்தான் - மூழ்கிக்
கண்டதென் னென்றுரோ - பேரோ
காரிகை ரூபம் - நன்னூலிடைச்
சீரிசை லாப - மதுபெறச்
சிந்து மழகோ டிருந்த சயனத்தில்
வந்தனரா மையா இந்திர னுனவன்
இணங்கி வேதாவை வணங்கியா யிரங்கணன்
தடத்தில் வணங்கியைக் கண்டு
மாசிப்பதையே செப்பிடில்
மாசித்தீ ரேசுத்தனே (தேவப்)

5. சித்திர மென்னிலப் பிரமனை யிந்திரன்
சேவை செய்துவரு மார்க்கம் - தன்னுடை
மித்திரன் செந்தாமரைக் கென்பவன் வந்து
மேவினன் கூடவே தீர்க்கம்
கத்திப்பி டியிடைப் பெண்ணிரு பேருங்
காணகின் ருள்கண்டு மேற்கம் - தப்பா
னத்திரம் பாய்ந்தவர் வீரியம் விட்டா
ரறத்தையும் விட்டதே யாக்க - மன்னமே லேறி
வீரியந் தானது மீறி விழுந்தது
சாலத் தலைமயிர் வாலம தாமதின்
மேலே விழுந்ததால் வாலியுண் டாகினன்
மைக்கணி கழுத்தி லரக்க னதுவிழுந்
தக்கண மங்கனே சுக்ரீவ னுண்டானன்
சொர்க்கத்தவர் மிக்கப்பிரபு
வர்க்கத்தினு திக்கப்பெறு. (தேவப்)

### இரட்சரஸன் கிட்கிந்தை யரசனுக முடிசூடல்

**எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்**

ஆயுநூல் முனிவர்துதி கருணை யாறே
ஐந்துநான் மூன்றிரண்டொன் ருகக் கேளுந்
தாயரகு பதிசீதா பதியே யந்தச்
சுரபதியுந் தனபதியுந் தந்த மிக்க
வாயுவினு மதிவேக முள்ளோ ரான
வாலியுட னிந்தச்சுக்கி ரீவர்க் குங்காண்
தாயுமான வனிரட்ச ரசனே பின்னுந்
தந்தைதான் பட்டமுங்கிட் கிந்தை தானே.

### இரட்சரஸன் கிட்கிந்தையில் அரசாளுதல்

**நாதநாமக்கிரியை ராகம்]** **[ஆதி தாளம்**

**பல்லவி**

வாலிதந்தை கிட்கிந்தை பட்டங் கொண்டானே
மருமஞ்சொல்வே னிராம பிரம தேவர் கொடுக்க.

**அநுபல்லவி**

வாலி சுக்கிரீவருக்கு மாதாபிதா வென்பது
ஞாலமீதி லிரட்சரச னுமொருவன் ருனே (வாலி)

சரணங்கள்

1. வேதன் கண்ணீர்த்துளி யால்முன்னே யுதித்தானே -
மாதர சாகிரெண்டு பிள்ளை பெற்றனே [பின்னும்
காதலை யிந்திர னிவன்மேல் வைத்தானே - அங்கே
கதிரவன் கூட்டாளியு மாயிடத் தானே
கண்டுமந்தக் குரக்குரு கொண்டந்தப் பிள்ளைகளை
உண்டு பண்ணி வாலிக்கேயா கண்டலன் சொர்ண
காட்டின னவன்கழுத்திற் பூட்டினன் அமராபதி [மாலிகை
நாட்டினன் தானேகம்பி நீட்டினன் சூரியனும்
நிலைத்த வாயு குமாரனைச் சகல காரியங் களிலும்
நிருபனை செய்து சுக்கிரீவ நிருபனையும் ஒப்புவித்து
தலத்துளம் பரத்தைச் சேர்ந்தார்-சாயைக்கு நாதனுமே-யுத்
தண்ட கோதண்டனே யரி - புண்டரீகாட்ச ராமனே
(வாலி)

2. அந்த ராத்திரி செல்வ னிரட்சரசனே - யங்கு
மந்திரியி னுருவம் பெற்று நிசனே
மைந்தர்களை யழைத்துக் கொண்டு மசனே-காண
வந்தனனது கண்டுமனத் துசனே
வானவ தூதனை யேவி நீநமுத் திரவின்படி
தானேசென் றந்தக்குகைய தானகிட்கிந் தையிற்
[சென்று
அங்கனே விசுவகன்மன் புங்கனேஎன் ஏவலாலே
துங்கனே செய்திருக்கும் எங்கனே யென்னிலோ
கிட்கிந்தை யென்னுங் குகையிலே—வானரங்க
ளிருப்பது கெட்டி நீயவ் விடத்திலே
இந்தவி ரட்சரசனை மைந்தர்களுடனே வைத்து
வானராதி பதியாக மந்திகட் குயர்ந்த-ஆசனந்
தந்துவா பிந்தாதே யென்ன (வாலி)

3. விபுவாசனத்தில் வைத்து மன்போடுங் கூடி-நீயே
அபிஷேகஞ் செய்து வா போ தூதனே ஓடி
கபிகளெல்லா மிரட்ச ரசனைத் தேடி-வந்து
சுபமாகச் சொன்னபடி கேட்குமே நீடி
தூதனே யென்று மேவிய வேதனுரை யாலிவனை
யாதரவா யபிடேகம் போதவேசெய்து வைத்தானே

சூரனே தசரதன்கு மாரனே உததிநேர் - கம்
பீரனே நாரணவ தாரனே சானகி நாத
தரைக்குளாய்க் கிட்கிந்தாபதி யிரட்சரசனே யிருந்துந்
தனயன் வாலிக்குக் கிடைத்த தையனே - பின்
சுக்கிரீவர்க்குக் குரக்கரசு பட்டங் கட்டித்
துணைவருடன் கூட்டிக் கொண்ட கோமள யாமளவர்ண
ராம ராம ராம ராம. (வாலி)

## வாலி முதலியோர் சரிதையைக் கூறிவிட்டு, அகத்தியர் தம்மிடத்துக்கு மீளுதல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

அதியலங் கிருதனுகி வானர ரவரை
அப்படிக்கே யேவிக்கொண் டிருந்து வாழ்ந்தான்
நிதிரட்சர சன்சரிதை யெனவு மங்கே
யாவருஞ்சந் தோஷமுற்று ரிவைக ளெல்லாம்
பதிவாக ரகுபதிக்கு உரைசெய் தங்கப்
பால்விடைகொண் டார்முனிக ளுடனே கூடப்
பொதியமலைக் குறுமுனியு மவரே நல்ல
புலவர்தாம் தமிழில்மிக வலவர் தாமே.

## முனிவர்களை இராமன் தக்கபடி உபசரித்தனுப்புதல்

### இதுவுமது

அகத்தியனை முதலான மகத்து மாக்கள்
அட்டதிசை முனிவருக்கு மிரகு நாதன்
மிகுத்தவணக் கங்களுடன் பூசை செய்தே
விடைகொடுத்தா ரவர்களுரை விளக்க மெல்லாந்
தொகுத்துநெஞ்சில் மறவாம லிருந்தென் னுளுஞ்
சுகமுற்றான் மகுடமுன்பு சூட்ட வந்த
சகத்தரசர் சபைநடுவே சனக ருக்குச்
சாற்றுவான் மாமனையே போற்று வானே.

## மகுடாபிஷேக மண்டபத்தில் இராமன் ஜனகனைப் புகழ்தல்

**பாலராகடி ராகம்]** **[ஆதி தாளம்**

பல்லவி

*பாக்கிய மெல்லா மும்மதையா - பார்த்திவனே ஜனகா*
*பாக்கிய மெல்லா மும்மதையா.*

அநுபல்லவி

*நாக்குப் பத்தா னென்ற - ராவண*
*ராட்சதனை வென்றே யாட்சி பெறுஞ் - ஜய (பாக்கிய)*

சரணங்கள்

1. *தீரன் வாலிமார்பு துளைத்தது - மந்தத்*
*தெற்குக் கடல்கட்டி வளைத்ததும்*
*வீரஞ் செய்தே லங்கைக் கோட்டை வாசல் நாலும்*
*மேவியே ராட்சதப் பாவியெல் லாரையும்*
*வெட்டினதுந் - தேவர்துடை - தட்டினதும்*
*நான்விருதுகள் கட்டினதும்*
*இந்தவிசை யெங்களுக்கு முந்தன்சுயம் பிரகாசமாம்*
*(பாக்கிய)*

2. *இட்சு வாகுமுதலா யனுபந்த - மெங்கட்குமுங்*
*கட்குஞ் சம்பந்த மேன்மேம்*
*பட்சமி குந்துநீ ரநுக்கிரகஞ் செய்த*
*பக்குவ மேயிந்த சுக்கிரீவ சக்கியம்*
*பலித்த தையா - யெதிரியைக் - கெலித்ததையா - ஜயபேரி*
*யொலித்த தையா - மெய்ஞ்ஞான*
*பரம புருடனே தரணியில் நான்வரும் (பாக்கிய)*

3. *சிங்கா சனத்திலிருக்கும் யோகமும் - தேவ*
*ரிஷிகள் கருணை யமோகமும்*
*மங்கள மேன்மேலுண் டாகவும் - பெற்ற*
*வண்மை யெல்லா முந்த னுண்மை மிதிலையின்*
*மாநிதியே - நல்லகு - ணநிதியே - ஞானகிரு*
*பாநிதியே - யெந்தன்*
*மாமனே யெந்தன் சோமனே நான்செய்யும். (பாக்கிய)*

## இராமபிரான் அரசர்கட்கு விடை கொடுத்தனுப்புதல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

*பரிந்திந்தப் படிவணங்கிச் சனகர் கூடப்*
*பரதனையுங் கூட்டிமிதி லைக்க னுப்பி*
*விரிந்தபுகழ்க் கேகயநா டதனை யாளும்*
*வேந்தனுக்கே யிலக்குமணன் தன்னைக் கூட்டி*
*வரிந்திடவொண் ணாதபுகழ் பெற்ற காசி*
*மன்னனுக்கும் விடைகொடுத்து மணியும் பொன்னுஞ்*
*சொரிந்துமிக வுபசார மிராம சந்த்ரன்*
*சொல்கின்றா ரவரவருஞ் சொல்கின் றாரே.*

## சுக்ரீவனுக்கு விடைகொடுத்தல்; அநுமனைத் தன்னிடம் வைத்துக்கொள்ளல்; விபீடணனுக்குத் தன் பூசைத்தெய்வத்தை யளித்தல்.

இதுவுமது

*வானரச்சே னைகளுக்குஞ் சுக்ரீ வர்க்கும்*
*வரிசைசெய்து கிட்கிந்தைக் கனுப்பிப் பின்னுந்*
*தானநுமான் தனைத்தன்பா லிருக்க வென்று*
*சந்திரா ரஞ்சூட்டித் தன்கு லத்தின்*
*மாநிதியாம் பூசையைவீ டணர்க்கு நல்கி*
*வாருதிமத் திமத்தினிலங்கைக் கேகச் செய்து*
*தேனலருங் குழற்சீதை மணாளன் ராமன்*
*செழிக்கின்றான் மநுநீதி கொழிக்கின் றானே.*

## இராமன் ஆட்சிச்சிறப்பு

நாதநாமக்கிரியை ராகம்] [ஆதி தாளம்

பல்லவி

*மகிபரி பாலனஞ் செய்தாரே - ராமன் - அயோத்தியிலிருந்து*
*மகிபரி பாலனஞ் செய்தாரே ராமன்.*

அநுபல்லவி

*மகிபரி பாலன நீதிகள் காட்டி*
*வதிட்ட ருரைத்திடு மொழிகள் பாராட்டிச்*
*சகலவி ராசரும் வணங்கவே கூட்டித்*
*தருமம் வளர்ந்திடத் தொயத்தம்பம் நாட்டி (மகிபரி)*

சரணங்கள்

1. மாநமும் மாரிபெய மேகம் - வருடமுஞ் சென்னல்முப்
[போகம்
வளருமந் தணர்கள் யாகம் - மாதவ ரட்டாங்க யோகம்
சாதனை செய்வ தநேகம் - மல்லிகை முல்லை
பாதிரி மகிழம் புன்னை - மந்தாரை பாரி
சாதஞ் செண்பக மசோகம் - பங்கய மின்னுங்
கேதரி மதுப்பிர வாகஞ் - சொரிவருக்கை
யாந்தருக் கதலி நாரீகேர மணிபூகந் - தேமா
மரங்களானது தினமு மலர்கள் கனிகள் - பரிபாக
மிகுந்த முத்துஞ் சாதி நவமணிகள் பலவு
நிறைவது மமோகங் - கோசல தேசமுஞ்
சரயூநதி வளமை யென்ன - சொல்வே னனு
ராகமதில் நீராடு மாத - ரளகமணம்
வாரிதி பரவு மோகம் - புலிபசுக்கள்
வயிரமில் லாமலொரு துறையில் பருகித் தீரும்
கற்புப்பெண் டுகளெல்லாங் காதலரைப் பணிவர்
கறந்த பாலைக் கொத்தாது காகம் - வெருவயது
கண்டு மிகுக்குமேபூ மண்டலத் தவருடை தேகந் - தேசந்
[தனிலே
வாதை கண்டதில்லை யுரோகம் - வந்த தில்லையே விவேகம்
நீதியுடனே சொர்ணத் தியாகம் - நேரிட்டுக் கொடுப்பது
[லோகம் (மங்கபாரி)

2. மகத மாரிய துளுவம் வங்க-மராடங் கொங்கண சீனகலிங்க
மத்திர மாளவ கேகய மங்க - மச்சம் பப்பர தேச மடங்க
மகுட பதிகள் வணங்க - கப்பங்கள் கொண்டு
சகல நிதியும் விளங்க - வயல்க ளெல்லா
மிகவே சாலிகள் நெருங்க - வயணங்கள்
சுகங்கள் படிக்கும் பிரசங்க - வரிசை மிஞ்சத்
தொகுப்புக் கவிஞர்கவி மிகுத்துச் சொல்லுவது
துலங்கக் கட்டியக்காரர் துதித்துப் புகழைமிக
விரித்து ஜயஜய வென்க - மந்திரா லோசனை
வகுத்து மந்திரிகளு முரைக்க

வினிய குணபுங்க மெய்ஞ்ஞான நிதிவதிட்டர்
மகிழ்ந்து சொலுநயத்தை யறிந்து மந்தரங்க பத்தி
சகத்தி லவரவர்கள் குலத்தி னெறியவைகள் [களுடன்
பொங்க வுயிர்கள் பாரில்
சகத்திர மிகவய திருக்கு மறைகளில்
மிருதங்க தாள வரிசை
திருத்தரி செணுத்தொகு தித்திமி யெனமுழக்கச் -
சங்கீத நாட்டியஞ்
சிறந்தற்புத சுபமு நிறைந்திப்படி வளமைதங்க
யிதுவேதி ரேதாயுகந் திருப்பாற் கடலில்தங்க
வயோத்திமா நகரே பிரபலங்க
ளுயர்ந்த சூரிய குலமு மிலங்க
வுதித்த சந்திர னெனவே விளங்க (மகிபரி)

3. அதிக பராக்கிரமம் நாரண னெனவே
அழகினி லசுவினி தேவர்க ளெனவே
அன்பொடு புத்தி வியாழ னெனவே
யயனுக் கேயிணை யாமிவ ரெனவே
துதிபெரு மையில் பூமி யெனவே - காந்தியு ளியன்
கதிரவர்க் கிணையா மெனவே - கம்பீரந் தன்னி
லுததி வாயுவேக னெனவே - குரோதமதில்
முதிர்செய் காலாக்கினி யெனவே - சொல்லலா மின்னும்
நிதியினிலுங் கொடையினிலு முயர்குபேர னெனவே
[- சத்தியமதனில்
நிகர்சொல வருமது தருமதே வதையவ னெனவே -
[சந்திர விம்பம்போல்
இதமுள்ள தரிசன முகமது வுள்ளவ னெனவே -
[தயிரிய முள்ளான்
யிணைசொலு வதுரகு குலதிலக னிவனெனவே -
[பெரியோர்கூடும்
சதிருள குணநிதி மதுர வசனனிவ னெனவே -
[தந்தையாகிய
தசரதர் தவமிது கோசலை தவமிது வெனவே -
[சானகி முன்புச்

சிதம்பெற்றிடு புண்ணிய பலன்பெற்ற நெறியிது
யெனவே மனிதரெல்லாந்
தெளிந்திப்படிக் கருணை பொருந்தச் செய்தது
தவமெனவே பூலோக வாழ்க்கை
சதங்களா மிப்புவி யுயிரெனவே
தமக்கு மன்பா மமுதம தெனவே
தழைத்த வேதச் சொருபமி தெனவே
தவக்கொழுந் தாய்வள ரரசெனவே. (மகிபரி)

**அரசர்கள் கப்பஞ்செலுத்தவும், புலவர்கள் போற்றவும், இராமபிரான் சீதாப்பிராட்டியுடனும் தம்பியருடனும் அயோத்தி யரண்மனையில் இருந்து ஆட்சிபுரிதல்; குபேரனைக் கண்டு வந்த விமானம் இராமனிடம் கூறல்**

**எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்**

கடல்சூழும் புவியில்மறு மண்ட லீகர்
கப்பமிடக் கெடிசெலுத்தி நாள்க டோறுந்
திடமிகுதுங் கீர்த்திசொல்லிக் கவிஞர் பாடத்
திருமகளு முகமலர்ந்து சயமென் ருடத்
தடமதில்சூ ழரமனையி லிரகு நாதன்
தம்பியர்க ளுடனிருக்கும் பகலி னுச்சி
வடதிசைக் குபேர னையே கண்டு
வானந்தனிற் சேரலும்வி மானந் தானே.

**இதுவுமது**

**அசாவேரி ராகம்]** **[சாபு தாளம்**

**பல்லவி**

கண்டேன் குபேரன் சேதி கேளுங் — கோசலை
கண்மணியே யென்னை யாளும்.

**அநுபல்லவி**

எண்டிசை சொல்லளகை
யென்னும்பதிக் கிவ்வகை
யேவினீர் முன்னைத் தானே
தேவவி மான நானே. (கண்டேன்)

சரணங்கள்

1. கம்பத்தனை யுயிரை வாட்டி - யிலங்கை
வீடணற்கு முடிசூட்டி
அம்புவி தனிற்புகழ் நாட்டி - [அயோத்தி]
[அரசினைப்] பூண்ட மேட்டி
தம்பமா யென்னை முற்பாற்...............
தனதென்று மெய்ப்பாய்
நம்பிப் பழமைவாய்ப் பாராட்டிவிட் டதுக்கிப்பால்
(கண்டேன்)

2. பரமபுருஷ னுந்த னாலே - யிலங்கை
பார்த்திபன் மடிப்பட்ட தாலே
சிரமாயுந் தனைத்தானென் மேலே - நாளுஞ்
செழிப்பாயவ கிக்கவுநின் பாலே
பரசொத்தை நெஞ்சி லுன்னப்
படாதென்ற புகழ் மின்ன
வரவிட்டா னினியென்ன வகையலா மன்னர்மன்ன
(கண்டேன்)

3. நீதிபர னென்றும்மை நினைவா - னந்த
நீலகண்டற்கு மேற்றச் சறுவான்
கோதண்ட வீரநீரே கனவா - னுந்தன்
குணத்துக் கிசைந்தானையா தனவான்
பேதஞ் செய்யா தாகின்றான்
பலத்த ரக்கரை வென்றான்
ஆதியந்த மாய்நின்றான் ஆதகிரா மனதென்றான்
(கண்டேன்)

**இராமன் புட்பகவிமானத்துக்கு விடைகொடுத்தனுப்புதல்**
**பரதன், நாட்டில் கண்ட அதிசயங்களைக் கூறத்தொடங்கல்**

**எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்**

புட்பக விமானஞ்சொற் சீரு மந்தப்
புண்ணியவான் குபேரனுடை நெறியுங் கண்டே
புட்பசந்த னங்களினா லதற்குத் தானே
பூசைசெய்து முனக்கிசைந்த விடத்திற் சென்று
நட்புடனு நினைந்தவுடன் வருவா யென்று
ராமனுரை கண்டுதம்பி பரத னங்கே
விட்புலத்தி லெழுந்தவதி சயங்கள் சொல்லி
விதிக்கின்றான் கைகூப்பித் துதிக்கின் றானே,

பரதன்கூற்று : தொடர்ச்சி

சுருட்டி ராகம்] [ஜம்பை தாளம்

பல்லவி

இந்த வதிசய மின்னு மெந்த னுடதிலுண்டு
இராகவனே சொல்லு மையா.

அநுபல்லவி

சுந்தரஞ் சேர் மாமுடி சூடி யண்ணலே யிப்படி
சிந்தை களிகூர்ந்து செங்கோல் செலுத்துவதனுல்
(இந்த)

சரணங்கள்

1. மானிடரெல் லாமெல்லாம் வார்த்தை சொல்வதே சொல்வாம்
ஞானசாலப் பிரசங்கமே ராச சிங்கமே (இந்த)
2. காலங்கண்ட விருத்தரையும் காலனெடா னுருத்தரையும்
ஞாலமதிலு மயோத்தி நாட்டின் கீர்த்தி (இந்த)
3. பண்ணிய புண்ணிய மையா பயிரில் தெரியுந் துய்யா
நண்ணு முந்தன் செங்கோலே நல்லதாலே (இந்த)
4. சார்ந்தார்க்குச் சந்தானந் தானென்றுங் காத்துந்தினம்
வாய்ந்துவருமே சொன்ன மாரி மன்ன (இந்த)
5. மின்னுர்க ளெல்லாஞ்சொன்ன விக்கிரகம் போலேமன்ன
மன்னிய மைந்தர்பெறின் மகிழ்ச்சி நிறைவும் (இந்த)
6. மிகக்குன்று மேலிட்ட விளக்கது போலேயட்ட
திக்கினிலுநின் னுமதேய மிராமா (இந்த)
7. நித்திய கலியாணமே நிறைசுப மங்கலியமே
உத்தமமாஞ் செல்வியே யேற்குங் கல்வியே. (இந்த)

## இராமபிரான் சீதாப்பிராட்டியுடன் சோலையில் மேவுதல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

நம்பரத,னிந்தவா றடிப ணிந்து
நாட்டிலுள்ள புதுமையெலாஞ் சொலவுஞ் சந்திர
விம்பமுக மண்டலக்கோ தண்ட ராமன்
மிகமகிழ்ந்தே மேதினியை யாளு நாளில்

கும்பமதா மார்கழிதை யாகு மந்த
ருதுவரவே யந்தப்பு ரத்திற் பாங்காய்
வம்பவிழு மசோகவ னத்தில் சென்று
மேயினன் சீதையுடன் மேவி னனே.

## இராமபிரான் சீதாப்பிராட்டியுடன் சிங்காரத் தோட்டத்தில் இன்பமுடன் இருத்தல்

**கல்யாணி ராகம்]** **[ஆதி தாளம்**

**பல்லவி**

சிங்காரத் தோட்டந்தனை நாடி - யாயிர நாமன்
சீதாதேவி யுடன்விளை யாடினார் கோதண்ட ராமன்.

**அநுபல்லவி**

கங்காநதி யோடக் காரணைத் தம்பியென்
றங்கா தரவுசெய் தாண்டவ னென்னாளும்
மங்காத கீர்த்தி வளரும யோத்தியில்
சிங்காச னதிபதி யாயிருந் தந்த (சிங்கார)

**சரணங்கள்**

1. சந்தனமகில் கதம்பமும் பாடலநாகந் - தேவ
தாருவெண் ணுவல்பலா மாமரம் வாழை பூகங்
கந்தமிகுஞ் சண்பகம் பாரிசாத மசோகங் - கரணி
காரங் குரவகங் காலேயகமுந் தூகமு
மிந்தவ கைகள நேகமு மொவ்வொன்றிற்
செந்தளிர்ப் பூப்பிஞ்சு காய்பழ நிறைந்து
சந்தத மும்புட்ப மாரிசொ ரிந்தங்கே
செந்தே னதிவளர் விந்தைய தாகிய (சிங்கார)

2. கோகிலப் பஞ்சவர்ணக் கிளிபட்சிகள் கூட்டம் - மாவின்
கொழுந்தைப் பட்சிக்கு மின்னுஞ்சில பட்சி நாட்டம்
மேகநிறங் கொண்ட வண்டுகள் தேன்குடித் தாட்டமாடி
மெல்லிய ராகங்கள் பாடுவது மோர்கொண் டாட்டம்
வாகு பெறும்படி கங்களி னற்சுவர்
நாகம ணிப்படிக் கட்டு நட வாவி
யாகச் செழுந்தா மரைகளின்மேல் சக்கர
வாமக் குருகுகள் சோபிதமுங் கொண்ட (சிங்கார)

3. மஞ்சு நாற்காலி மெத்தை திவாசுகள் திண்டு - மிக
வரிசையுள்ள விடுதிக ளங்கங்கே கண்டு
மஞ்சனக் கூந்தலாள் சீதையைக் கைகோத்துக் கொண்டு -
[மானே
வாவென் றிருத்தி மதுமாமிசங் கொடுத்துண்டு
ரஞ்சித வஞ்சியர் சங்கீத பாரத
மிஞ்சிய நாதப்பிர மானந்த நாடக
முஞ்சுக மாய்க்கண்டு மன்மத கேளியி
லுஞ்சசி யிந்திர னெனவே யனுதினம். (சிங்கார)

## சீதாப்பிராட்டி கருவுறல்: கங்கைக்கரையிலுள்ள தபோவனஞ் செல்ல சானகி விரும்புதல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

பருதிகுல ராமன்மன மகிழ்ச்சி கொண்டே
பார்புரந்து நாடோறுஞ் சீதை யின்பாற் (றனே)
மருவுமன்னுள் கலியாண வடிவாஞ் சீதை
வயிற்றினில் கருப்பங்கண் டகம கிழ்ந்தே
ஒருமையாய் மனதிச்சை சொல்வா யென்ன
வுயர்ந்தயுண் ணியந்தருமா கங்கை யோரம்
பரவுதபோ வனம்பார்க்க விச்சை யென்றே
பணிந்திட்டாள் கற்புடைமை யணிந்திட் டாளே.

## சீதாப்பிராட்டி இராமபிரானைப் போற்றுதல்

சௌராஷ்ட்ர ராகம்] [ஆதி தாளம்

### கண்ணிகள்

1. ஜயஜய வெந்தன் பிராணேசனே
ஜயஜய ரகுநந் தனனே - சுவாமின்
ஜயஜய கலியாண சுந்தரனே
ஜயஜய ரகு நந்தனனே.

2. கும்பிடப் போனதெய்வ முன்னே வந்த
கொள்கை ரகுநந் தனனே - சாமி
நம்பின யென்மன தறிந்து சொன்ன
மன்னு ரகுநந் தனனே.

3. பாற்கடல் சேர்ந்தார்க்குப் பால்பஞ்ச
மில்லையென் பர்ரகு நந்தனனே - இந்தப்
பார்க்குள்வந் தென்னை ரட்சிக்குந் தெய்வ
பிம்பா ரகுநந் தனனே.

4. மாமேரு போலவே தேவரீ ரிருந்தும்
மாலே ரகுநந் தனனே - வுந்தன்
காமஞ்சொல் லென்றது பாக்கியந் தாமரைக்
கண்ரகு நந்தன னே.

5. சுத்தம தாகிய கங்காதீ ரம்பொ
ருந்தும் ரகு நந்தனனே - அந்த
உத்தம புண்ணிய தபோவ னங்கண்
டிடவு மிரகு நந்தனனே.

6. வாய்ந்த ரிஷிகளின் யாக
சாலையி லுண்மைரகு நந்தனனே - மிகக்
காய்ந்த சருகுகள் பட்சிக்கின்றவர்
கனிரகு நந்தன னே.

7. கந்த மூலங்களைப் புசிக்கின்ற - யோ
கிகளை ரகுநந் தனனே - கண்டு
வந்தனஞ் செய்ய மனதுண்டு யென்மண
வாள ரகு நந்தனனே.

8. நித்தப் பரப்பிரம்ம நிட்டை முனிவோர்
நிலை ரகுநந்தனனே - கண்டு
முத்தொரு ராத்திரி சேவிக்க விச்சை
யுண்டு ரகுநந் தனனே.

### இராமபிரான் சீதாப்பிராட்டியைத் தபோவனமனுப்ப ஏற்பாடு செய்தல்: பூமியிலுள்ளவர்கள் கூறுபவற்றை இராமபிரான் கேட்க, பத்திரன் என்பன் கூறுதல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

மெல்லடியாள் சீதைசொன்ன படியே நாளை
வெங்கதிரோ னுதிக்குமுன்னே தபோவ னத்தைச்
செல்லவனுப் புவனென்றே சொலியி ராமன்
திரும்பவனத் தில்வந்தே விகட மார்க்கம்

வல்லவர்கள் கதைகேட்டு மகிழ்ந்தா னிந்த
மண்டலத்தி லுளாரெனையே சொல்வ தெல்லாம்
சொல்லடா வெனவங்கே பத்தி ரன்றான்
தொடங்கினன் பரியாசக் கிடங்கி னனே.

மாஞ்சி ராகம்] [சாபு தாளம்

பல்லவி

கூடிக் கூடியுங் கொண்டாடுகிறார் - ராமா
குணவர்ணனை கொண்டுன்மேல் பாடுகிறார்.

அநுபல்லவி

நீடிய கீர்த்திய யோத்திமா நகரில்
நித்திய வாசஞ்செய்பு முத்தமர்க ளெல்லாம் (கூடிக்)

சரணங்கள்

1. நாடு தேசப்பட்ட டணமூர்கள் தடங் - குளம்
நந்த வனங்கள் சித்திரசாலை மடங்
கூடுநாற் சந்தி கடையினிடம் - வீடு
கோயி லெங்கு மையா மாமகுடம்
சூடும் ராசசபை தனி லெங்குமுன் விசயஞ்
சொல்லிச் சொல்லிமிக நல்லவனென் றெல்லோரும்
(கூடிக்)

2. காட்டுக் குரங்கு மெல்ல கேட்டதுவும் - நீச்சுக்
கடலிலே கல்மிதக்கப் போட்டதுவும்
மாட்டிவில் லம்பு பூட்டும் பூட்டதுவும் - ராவண
வதங்கண் டம்மனை மீட்டதுவும்
நாட்டில் புதுமையாக புருஷர் பெண்டுக ளெல்லாம்
நாவி லுரைக்கிறாரே - தேவரீர் பிரதாபத்தை (கூடிக்)

3. அடுத்து வேடமாறி வந்துகண்டு - தன்னை
டங்கமீது தானே தூக்கிப் பண்டு
எடுத்து மரக்கனூரில் வைத்த துண்டு - பின்னு
மிந்தச் சீதைதன்னை மீட்டுக் கொண்டு
நடுத்தெரு வரண்மனைக்குள் ளேஉத்த - சண்டத்தைக்
கண்டோமே நாமு நடக்கிறே மென்று-மெத்த (கூடிக்)

4. பட்டணம் படல்கொண்டு சாத்தப்போமோ - இந்தப்
பாரில் மனிதர்வாயை மூட லாமோ
அட்டதிக்குப் பாலரு நிகராமோ - உமக்
கையா மகிமை காண்ப தெவர்தாமோ
தொட்டுக் கருடன்காலில் கெச்சைக் கட்டினுப் போலே
தொடுத்துச் செவிக்கமுதம் கொடுக்குங்கவி வாணர்கள்.
(கூடிக்

**பத்திரன் உரையைக் கேட்ட இராமபிரான், முகம்வாடித் தம்பியரிடம் கூறல்**

**எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்**

அண்ணலிரா கவன்முன்பத் திரனுஞ் சொல்ல
வப்படிக்கே சபையிலுள்ளோர் சரிதா னென்ன
வெண்ணியைய னனைவருக்கும் விடைகொ டுத்து
மிலக்குவன் பரதன்சத் துருக்கன் மூவர்
நண்ணவர வழைத்தனுப்பி யிருக்கை யீந்து
நளினமுக மதுவாடிப் பெருமூச் சிட்டுக்
கண்ணீரா றுயோடக் கண்டார் சித்தங்
கரைக்கின்றான் தம்பியரோ டுரைக்கின் றுனே.

**இராமபிரான் சீதையைப் பற்றிக் கேள்விப்பட்ட அபவாதத்தைத் தம்பியரிடம் கூறி வருந்துதல்**

**மணிரங்கு ராகம்]** **[சாபு தாளம்**

**பல்லவி**

இந்தஅப வாதத்தை யெப்படி சகிக்கலா
மென்செய் வோந் தம்பிமாரே.

**அநுபல்லவி**

நந்தச ரதராசன் முந்தித்த வங்கள்செய்ய
நாமும் பிள்ளை பிறந்தோம் பூமிபா ரங்களாக (இந்த)

**சரணங்கள்**

1. எந்தன்பொருளு நீவீ ரெந்தன் சீவனு நீவீ
ரெந்த னரசு நீவீரே - இன்று
எந்தன்சிந்தையு நீவீ ரெந்தன்சொல் தவறாத
யென்னுடன் பிறந்தோரே

அந்த லங்கேசனை வென்று விசயம்பெற
வாதிக்கஞ் செய்தீரே
இந்த சபையைக் கேளுஞ் சந்தையில் பிடித்ததற்
கென்ன சாட்சிதான் வேணு மன்னவ குமாரரே
(இந்த)

2. சொல்லம்பு தான்பட்டென் னங்கந் துளைக்கு தகோ
சோதர பாக்கியமே - நாட்டில்
நல்ல குலமாமிட்சு வாகுசந் ததியினில்
நான்வந்தேன் யோக்கியமே
வல்லி சீதைபிறந்தாள் மிதிலா புரிச்சனகன்
வங்கிசஞ் சிலாக்கியமே
பல்லி சகுனமெல்லாஞ் சொல்லித் தானுங்கழுநீர்ப்
பானையில் விழுந்தாப்போ லானே னடடா ஓகோ
(இந்த)

3. தண்டகா வனத்தில்முன் னரக்கன் - சந்யாசி வேடந்
தரித்துச் சீதையை யெடுத்தான் - என் - கோ
தண்டத்துக் கிரையாகக் கிளையுட னேயவன்
தன் னுயிரையுங் கொடுத்தா
னண்ட ரெல்லாங் காண சீதைதீயில் குளிக்க
வக்கினியென் முன்னே விடுத்தான்
மண்டலத் திருடிகள் கண்டென்னைச் சனகன்பெண்
மறுவில்லா மாணிக்கமென் றுறுதிசொல்ல
[நம்பினேன் (இந்த)

4. இலங்கைத் தீவினில் முன்னே தேவ சபைநடுவே
இந்திர னிவளைத் தந்தது - மனங்
கலங்காதே சீதைக்குப் பழுதில்லை யென்றேயா
காசவாணி யெழுந்ததும்
நலங்கொண்ட சூரியசந் திரர்முதற் கற்பக
நாட்டிலுள்ளோ ருகந்ததும்
பலங்கொண்ட தம்பிலட்சு மணனேநீ யறிவாயே
பேதமில்லை தன்னெஞ்சறி யாதபொய்யு மில்லையினி
(இந்த)

5. உள்ளக்க ருத்தை வள்ளலறிவா ரென்மனதில்
உத்தமி யென்று தெரியும்
தள்ளலாமோ நம்மாலே யுலகப வாதம்பொல்லா
தாக்கும் நெஞ்சினில் தரியும்
மெள்ள வென்னவுலகம் பழித்தால் நரகமென்று
வேத முழங்கிச் சொரியும்
தெள்ளித் தெளிந்தபுத்தி யுள்ளவர்களு நீங்கள்
திடமொன்றுஞ் சொல்லவேண்டாந் தடையுண்டெந்
[தன்மீதிலே (இந்த)

6. செங்கதி ரோனுதிக்கு நாளைக் காலையே
நல்ல தேர்தனிலே கூட்டிக் - கொண்டு
கங்காதீ ரத்தில்தபோ வனங்காண வேணுமென்ற
கருத்தை நயமாய்க் காட்டிக்
கங்கா நதிக்குத்தென் பாரிசமா ரண்ணியம்வால்
மீகிமுனி யிடத்தைச் சூட்டி
யங்கே தமசாநதி மனிதரண் டாத - காட்டி
லட்டியின்றிச் சீதையை விட்டுவிடு லட்சுமணா (இந்த)

7. அருமந்த சென்மமெடுத் தபகீர்த்தி கட்டிக்கொள்ள
லாமோ துயர மென்னடா
வரும்விதி வந்ததெல்லாம் அநுபவிக்கவும் வேணு
மாட்டோ மென்றால் விடாதேடா
குருமொழி மறவாத சௌமித்திரியே தேரைக்
கொண்டு சீக்கிரம் நடடா
பருதி குலத்தில் வந்தோம் தருமநிலையி னிருத்திப்
புாங்காய்க் குலம்பெருகி யோங்கி யிருக்க வேணும்.
(இந்த)

## இராமபிரான் சீதாப்பிராட்டியை வனத்தில் விடுமாறு கூறக் கேட்ட தம்பியர் வருந்துதல் ; இலக்குவன் துணையுடன் சீதாபிராட்டி தேரேறிச் செல்லல் ; துர்ச்சகுனங் காணல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

*இலக்குமனை முதலானோர் முன்னே ராம*
*னிவ்வகையாய்ச் சொலவுமங்கே தம்பி மார்கள்*
*கலக்கண்ணீர் சொரியநின்றார் மற்றை நாளிற்*
*காலையே சுமந்திரன்தே ருடனே தம்பி*
*சொலக்கண்டான் முனிமார்கள் தேவி கட்குந்*
*துய்யவத்தி ராபரணங் கொண்டே தேர்மேல்*
*குலக்கொடியாஞ் சீதையம்மன் சென்றாள் துற்ச*
*குனங்கண்டாள் மனதிலும்வி தனங்கண் டாளே.*

## துர்நிமித்தங்கள் கண்டு சீதாப்பிராட்டி வருந்துதல்

எதுகுலகாம்போதி ராகம்] [ஆதி தாளம்

பல்லவி

*ஏது துர்நிமித்த மாகுதே - இளைய கோவே*
*எந்தன் மனது மிகவும் நோகுதே.*

அநுபல்லவி

*மாதபோதனர் பாத தரிசனம் - வேண்டி னனிப்*
*போது பயணம் வந்த சுபதினம் (ஏது)*

சரணங்கள்

1. *வலக்கண் துடித்து முடலை நடுக்குதே - நெஞ்சம தொரு*
*வகையாய் வருதே கலக்கங் கொடுக்குதே*
*விலக்கப் பட்சிகள் கட்டத் தொடுக்குதே - யுலகமெல்லாம்*
*வெட்டவெளி யாய்ச்சகுனந் தடுக்குதே (ஏது)*

2. *உங்கள் தமைய னரசு செழிக்கவே - தம்பிமார்க*
*ளுடனே வாழ்கநாடு தழைக்கவே*
*எங்குமுள்ள உயிர்கள் பிழைக்கவே - வேணுமென்று*
*மெண்ணுறே னென்மது களைக்கவே (ஏது)*

3. சத்துருக்களா யிருந்தாலு மவர்கள் மேலே
        சலிப்பை யெண்ணேனு னெருக்காலு
மைத்து னுவென் கழுத்து நன்னாலு - நெஞ்சில்
        வணங்குகிறேன் தேவரையும் மென்மேலும். (ஏது)

## சீதாப்பிராட்டியை இலக்குவன் தேற்றல் ; உச்சிப்பொழுதுக்குள் சீதாப்பிராட்டி கங்கைக் கரையையடைதல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

மகத்தான தெய்வத்தை வணங்கி யம்மன்
        மைத்துனனே டிதுசொல்ல வவருந் தேற்ற
மிகுத்தவே கத்துடனே சாயங் கால
        வேளையிற்கோ மதிதீரஞ் சென்றி ருந்து
சுகத்துடன்மற் றுநாளி லெழுந்து தேக
        சுத்திசெய்து தேரேறிச் சுகம தாகப்
பகற்பாதி நாழிகைக்குள் சீதை யிந்தப்
        பதிகண்டா ளுயர்ந்தகங்கா நதிகண் டாளே.

## கங்கைநதியின் சிறப்பு

பந்துவராளி ராகம்] [ஆதி தாளம்

பல்லவி

கங்கைக்கரை கண்டாள்சீதை யகங்கை விட்டோமென்று
செங்கை குவித்தந்தச் சலங்கை கொண்டு கொண்டாடி
(கங்கை)

அநுபல்லவி

சங்கைநிகர் சுந்தர மங்கைபாகர் சடையில்
        அங்கை யுற்றிடுவள்வ ரங்கை தருவ ளென்று

சரணங்கள்

1. சங்க முத்து முலாவிய காரணி - எங்கும்
        நிரப்பிய வாசனை யேரணி
பங்கய புஷ்ப மதுகர பூரணி
        பொங்கு மலைக்குரல் வாரியை நேரணி
தங்கமும் விளைநில முங்கதிர் மணிபல
        செங்கைய லைமுதல் தங்கிசை வதுநல (கங்கை)

2. சுத்திவரும் பிரமகத்தி தவிர்த்து - தெய்வ
பத்தி மிகுந்து மந்திர சித்திப்பிர சித்தியும்
புத்தி விளங்குந்தார கத்தி நிட்டையின் யோக
சித்தி மிகுந்துபிதுர் முத்தியுண் டாகு மென்று
சுரநதி பகீரதி சானுவி தூய
வரநதி யாறுறு சுரமி ஜய
தூல்லியே தல்லியே சல்லெனும் வல்லியே
செல்லியு னெல்லையில் வல்லமை சொல்லியே
தொல்லுல கில்லுள முல்லைசெவ் வல்லிகள்
மல்லிகை நல்லதோர் மெல்லடி யில்லிட
சுமுக கருணை புரிய முதமய மேயுய
ரிமயன்மக ளேயென வமரர் பணியவரு (கங்கை)

3. காசை நினைத்துடம்பி ஞசை விலக்கியரை
யோசை குலுக்கிவரும் வேசையெ னும்பிசாசை
யாசையது கொண்டிங்கே வாசையோ கத்தில்மதப்
பூசை செலுத்தவென்றே மாசைய டைந்தநெஞ்சர்
கண்டிடவு மெளிதோ - பகீரதர்
கொண்டுவருந் துணையே - நன்னுரதர்
கற்பனை யிற்புகழ் பற்பல வற்புத
பப்பறை செப்பசு ரப்படை முற்பட
மற்போ ரயிற்படை சுப்பிர மணி
யப்பெயரைப் பெறுநற் புதல்வர்ப்பெறு - சிற்பரை
கரியவ னடியதில் மருவு திருபதாகை
பெருமை பெருகிவள ருமையுள்ள வளெனும் (கங்கை)

4. கன்மானு சாரங்கொண்டு மிம்மானி லத்தில்வந்துஞ்
சும்மாயி ருந்திடாமல் நன்மார்க்க மாக
சென்மாந்திர வினைகளும் மாறிட வேயுன்னை
யிம்மாத்திரங் கண்டேனே யம்மாமந் தாகினியே
காவிரி நருமதை கோமதிகோ
தாவிரி யையுமுத லாகியகோ
க(ர்)ன்னிகை தன்னிலு முன்னித நன்னதி
பொன்னவ னின்னிசை மின்னவள் பன்னிய
சொன்னய வன்னைபிர சன்னையே நின்னரு
ளென்னிடை மன்னிய தென்னென வுன்னத
காசியெனு முலக பூசித பதிவிசு
வேசர் மனதில்விசு வாசி துணையெனவே. (கங்கை)

## சீதாப்பிராட்டியைத் தபோவனத்தில் தனியே விட்டுவர இலக்குவன் வருந்தல்

### அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

தெள்ளிய கங்கை கண்டான் சிந்தையே நொந்து தம்பி
கள்ளனை யுள்ளே வைத்துக் கதவுசாத் தினது போலே
யுள்ளமே லடங்கா தாகி யோவென்று மலறக் கண்டே
விள்ளுவா ளவர்பா லேதன் வேதைதான் சீதை தானே.

## சீதாப்பிராட்டி இலக்குவன் வருந்துதற்குக் காரணம் வினவல்

யமுனு கல்யாணி ராகம்] [திரிபுடை தாளம்

### பல்லவி

நியாயமோ - என்னை யிளையகோ
நடுங்கக் காண்பது பாயமோ.

### அநுபல்லவி

தூய முனிவர்கள் பாத தெரிசனந்
தொடங்கி நான் வந்த வேளையில்
சுபசந் தோஷம்பா ராட்டாம லென்ன
தொடுக்கிறீர் - துய - ரெடுக்கிறீர் (நியாயமோ)

### சரணங்கள்

1. உங்க ளண்ணரைப் பிரிந்த மயக்கமோ
ஹூரை விட்டு வந்த தியக்கமோ
சங்கை தெரியவு மில்லையே முன்பு
சகுனங் கண்டதுந் தொல்லையோ (நியாயமோ)

2. இரண்டி ராத்திரி பிரிந்ததே - இதி
லென்ன சமாசார மறிந்ததே
மருண்ட தென்ன ராமர் சுகமோ வென்னவென்று
மலைக்குதே - நெஞ்சைக் கலைக்குதே (நியாயமோ)

3. மங்கையர் சித்தஞ் சபலமே - யென்று
மண்டலஞ் சொல்லும் பிரபலமே
அங்கதை யறிந்து விதனந் தனையுமுண்
டாக்குறீர் - மனம் - பார்க்குறீர் (நியாயமோ)

இனியித் துயரத்தை யாற்றலாம் - இந்த
ரிஷிகள் பாதாம்புயம் போற்றலா
முனிபத்தினி மாதரை யாபர ணங்களால்
மூடுவோங் - கங்கை - யாடுவோம் (நியாயமோ)

5. அருந்த திக்குமொக்கு முனிபத்தினி கட்கே
யாடையு நல்ல வாடையுந்
திருந்தச் சாத்தியே யவர்கள் சீரடி
சேவிப்போம் - மனம் - பாவிப்போம் (நியாயமோ)

6. ஏக ராத்திரி யிங்கே வசிக்கலா
மிருஷிகளைக் கண்டுதரி சிக்கலாம்
வேக மாகவே வூரில் செல்வதும்
வேளையே - காணும் - நாளையே (நியாயமோ)

7. கமல நயனனைச் சிங்க வுரத்தனைக்
கதிர்செய்கோ தண்டக்க ரத்தனை
யமல ராமனைக் கண்டு வெகுநாள்போ
லாகுதே - யங்க - நோகுதே. (நியாயமோ)

**இலக்குவன், சீதாப்பிராட்டியை ஓடத்திலேற்றிக் கங்கையின் தென்கரையில் சேர்ப்பித்தல்; இராகவனின் கட்டளையைக் கூற மனம் பதைத்துக் கலங்கல்**

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

இந்தவகை சீதைசொல்ல சுமந்த்ர னோடு
இரதத்தை யுத்தரபா ரிசத்தில் வைத்து
மந்தமிமி டத்தினிலே யோடந் தன்னை
யழைப்பித்தே கங்கையின்தென் பாரி லேற்றி
முந்திஜய னுக்கினையை யெண்ணி யந்தோ
முறையோவென் றேகண்ணீர் பெருகி யோட
பைந்தொடியைப் பார்த்திதனைச் சொல்ல வுள்ளம்
பதறுவா னிலக்குமனுங் கதறு வானே.

**சீதாப்பிராட்டியிடம் இலக்குவன், தன் மனநிலை பற்றிக் கூறல்**

**..........ராகம்] [ஆதி தாளம்**

பல்லவி

என்னென்று சொல்வேன் - சீதையம்மா நான்
என்னென்று சொல்வேன்.

அநுபல்லவி

மன்ன னின்ன வகையா யென்முன்னே
சொன்ன துன்முன் சொல்லத் துணிவேனோ வன்னே
(என்)

சரணங்கள்

1. கருதியிதைச் சொல்லு முள்ளமேயு முருகுமே
கன்னெஞ்சர் கேட்கிலுங் கலக்கண்ணீர் வருகுமே
தருமிருக முமனத் துயரது பெருகுமே
தாமெவர் வயிற்றிலு மனல் சொருகுமே (என்)

2. இருவினை யாட்டிய கூத்தினு லசைந்தே
னெவருஞ் சொல்லவோ வுடம்பெடுத் திசைந்தேன்
திருமகளே நானம்மா யேதுக்கென் றிசைந்தேன்
சீவன் வலிமையாகி யெமனுக்கு மசந்தேன் (என்)

3. அதிவீர ராமனென் னுடனேசொன் னதையே
அடக்க வாகுமோ வதுவொரு வதையே
எதுநிமித்திய மோவிந்த வுலகஞ்சொல் கதையே
என்மேல்கோபஞ் செய்யாதே பதிவிர தையே. (என்)

## இராமபிரான் கட்டளையைக் கூறுமாறு சீதாப்பிராட்டி இலக்குவனிடம் ஆணையிட்டுக் கேட்டல்

அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

மாடிருக்கும் வீட்டினில்மோ ருக்குவந்த கலயம்பின்
மறைந்தாப் போலே
மூடியுங்கீழ் வீழ்ந்தழுத மைத்துனரே யுள்ளபடி
மொழிவீ ரென்று
நாடியுந்தன் மேற்சபதம் செய்துகொண்டா னிலக்குமனும்
நடுங்கி யங்கம்
வாடிமனந் தளர்ந்துகண்கள் சிவக்கநீரைச் சீதைமுன்னே
வடிக்கின்றான் படிக்கின்றானே.

கானடா ராகம்] [திரிபுடை தாளம்

பல்லவி

என்னம்மா சொல்லுவேனே -சனகமகா ராசன்பெண்ணே
இதுக்கோ நான் பிள்ளைபிறந் தேனே.

அநுபல்லவி

என்னதான் விதியோ - தெய்வ சம்மதியோ
எடுத்த புண்ணியம் பொய்யோ - நடுக்குதெப்படி
[யையோ (என்னம்மா)

சரணங்கள்

1. ஏதோ வேடிக்கையா யெவரோபடு நிந்தையா
யிந்தவுன் பேச்செடுத்தே
மாதா வுன்னைநாடி யிலங்கையி லிராவண
வன்சிறையில் தொடுத்தே
சூது செய்யக்கபட தாகத்
துணிந்தே யழைத்துவந்த
சுகமென்ன வென்றுசும்மா பகடிக்குள் ளாச்சுதம்மா
(என்னம்மா)

2. ஏதோபவாதஞ் ஜனங்கள் சொன்னதனாலே
யென்னய்யனு நடுங்கி
சிந்தை நொந்தா ரையோ யெனவே - மற்றச்
சேதி சொல்லவுந் தொடங்கி
சுந்தரமே யுன்னை யிருண்டவனத் தினில்விடச்
சொல்லினர் வந்........தைவல்லி யறிந்திடு மாதை
(என்னம்மா)

3. கன்னவா சல்கரிப் பானையது போலேயுங்
கண்டேனே யெ...........ன
இந்நிலந் தன்னிலே - யிந்தக் கழுவுக் கேற்ற
திவனென்றுப் போலே
சொன்னமே............... என்...........றுன்
எடுத்தேன் சுகமுங் கண்டே
னிரங்காதோ தெய்வந்தானே வரந்தரு மினிபிரமனே
(என்னம்மா)

4. ........... தலயாசன தசரதற்கே யன்பு
மிகுந்தவசி யோதும்
வான்மீக மாமுனி பாத நிழலினுப
வாச மிகுந்து
.................ல்லாத ....................
ராம ஜபமே ம............... மறவாதிரு
திருவளரு மென்தாயே பெருமை பெறுவாயே
(என்னம்மா)

## இளையபெருமாள் கூறியவற்றைக் கேட்ட சீதாப்பிராட்டி புவியில் வீழ்ந்து புலம்பி மூர்ச்சித்தல்; பின்பு தெளிந்து, மனம்நொந்து இலக்குவனிடம் சில சொல்லத் தொடங்கல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

மறைவுசெய்யா திந்தவண்ண மிளையோன் சொன்ன
வார்த்தைதகண்டு சீதையம்மன் புவியில் வீழ்ந்து
முறையோவென் றேபுலம்பி யொருமூ கூர்த்த
மூர்ச்சைபோய் நினைவுவந்து மண்மேற் கண்ணீர்
நிறையவே சொரிந்துகொண்டே யடடா விந்த
நினைவுதான் கனவினிலு மறியே னென்ன
குறைசெய்தேன் தெய்வமே யெனவும் நொந்து
கொள்ளுவா ளிலக்குமன்பால் விள்ளு வாளே.

## இலக்குவனிடம் சீதாபிராட்டி பலவாறு கூறிப் புலம்பல்

நீலாம்புரி ராகம்] தரு [........தாளம்

1. என்பிரா ணேசனுயிர் துணையே
இளையோ னென்னும் லட்சுமணனே
துன்பச் சரீரமா யென்னைத்
தோற்றுவித்தான் வேதா லட்சுமணரே.

2. பிரித்தே னிந்த யாத்திரையின்
பேச்சை நானே லட்சுமணரே
குறித்தேன் பிள்ளையார் பண்ணக்
குரங்காச்சு லட்சு மணரே.

3. உண்டோ முன்செய் தீவினைகள்
உரைப்பீ ரைய லட்சுமணரே
பெண்டீர் புருஷ ரானவரைப்
பிரித்தே னெனமோ லட்சுமணரே.

4. கோதண் டக்கை மன்னனுக்குக்
குறையென் செய்தேன் லட்சுமணரே
மேதினியி லேயெனை யகற்றி
விடவுங் கண்டேன் லட்சுமணரே.

5. சாமி பாத தாமரையென்
றலைமேற் கொண்டேன் லட்சுமண்ரே
பூமி தனிலென் பிழைபொறுப்
பாரி லையா லட்சுமணரே.

6. முன்னாள் வனத்தி லிராமசந்த்ர
மூர்த்தி யுடனே லட்சுமணரே
சொன்ன படியே பணிந்திருந்தேன்
துயரை யறியேன் லட்சுமணரே.

7. ஆதி ராம னிருந்தவிட
மயோத்தி யென்பார் லட்சுமணரே
ஆதலாலே முன்வனமென்
றறிந்தே னிலையே லட்சுமணரே.

8. இருந்த காட்டி லநாதையாய்
என்னென் றிருப்பேன் லட்சுமணரே
மருண்டா லார்தான் துணையுண்டு
மன்னன் மகனே லட்சுமணரே.

9. கண்டார் நகைக்க விடமாச்சே
கலைத்தா ரெவரே லட்சுமணரே
அண்டாத் துயரக் கடலதனில்
அழுந்த லாச்சே லட்சுமணரே.

10. ஏதோ வுன்னை யகற்றிவிட்டார்
என்றே வனத்தில் லட்சுமணரே
மாத வசிகள் கேட்பார்க்கு
மறுசொல் லேது லட்சுமணரே.

11. இங்கே துணிந்து மிருப்பேனோ
என்சீ வனையே லட்சுமணரே
கங்கா சலத்தில் விடவென்றே
கருதி மடித்தார் லெட்சுமணரே.

12. என்னுண் டவனைப் பரியாச
மெடுப்பா ருலகோர் லட்சுமணரே
மன்னர் குலத்தில் பிறந்தார்க்கு
வசையுண் டாமே லட்சுமணரே.

13. ஒருத்தர் மேலுங் குற்றமில்லை
ஊழி வினைதா னிலக்குமணரே
திருத்தி யையன் சொன்னபடி
செய்வீ ரையா லட்சுமணரே.

## இலக்குவனிடம் சீதாப்பிராட்டி இராமபிரானுக்குச் சில செய்திகள் கூறி விடுத்தல்

### கலித்துறை

கந்தங் கமழு மடவியுள் ளேகண்ணைக் கட்டிவிடு
மந்த வகையிது வென்றே மிதிலை யரசர்பெண்ணு
ளிந்தப் படிசிந்தை நொந்தே புலம்பி யிலக்குவனே
சுந்தரக் கோதண்ட பாணிக்குச் சொல்லெனச் சொல்லு
[வளே.

ஆனந்தபைரவி ராகம்] [ஆதி தாளம்

### பல்லவி

சொல்லுந் துரை ராகவன் - சுமுகன் பதத்திலே யிதைச்
சொன்னாள் சீதை யெனவே - லட்சுமணரே பட்சமதாய்ச்

### அநுபல்லவி

நல்லவென் மாமிமா ரனைவர்க ளுக்கு நானே
தண்டனிட் டேனென்று சொல்லு - முன்பு
கல்லைப்பெண் ணுகச் செய்தவி ராமசந்திர
காந்தன் சுகமோவென் றுற்றுரைத் தேனென
(சொல்லும்)

### சரணங்கள்

1. கண்ணரவர் திருவடிக்கே கைகுவித்தே னடியாளென்று
மெண்ணி யெந்தனைப்பரி சுத்தையா யேற்கு............ச
ரண்ணல் பணிவிடைக்கே யாளானவ ளென்றறிந்து
மண்ணுல கினிலேசில மனிதர்சொன்ன அபவாதத்
[தாற்
கண்ணில் நெஞ்சராய்க் கடுங்கானக மதிலே நான்வரப்
பண்ணினார் சாமிக்கு மிந்தப் பழுதாமோ வென்னை
[முழுதுஞ் சோதிக்கச் (சொல்லும்)

2. பட்டணத்திற் சனங்கள்தாம் பழித்தானே நிவர்த்திசெய்ய
இட்டமெனக்கு மெனவுஞ் சொல்லு மெல்லார்க்கு
[நல்லவாஞ்
சிட்டரவர் சமுகத்திலே தேறுமென்று மின்னுமின்னுந்
துட்டநிக்கிரக சாலிக்குத் துணைவர்போலே உயிர்
[யாவையும்
சட்டமாய்ப் பாலிக்குஞ் சருவ சீவகிரு பாநிதிக்குப்
பட்டாபி ராம பத்திரனே பதியென் றவரே கதியென்
[றுஞ் சொன்னேனே (சொல்லும்)

3. மாதருக்குத் தெய்வமென்ன மணவாளரை யலதுவே
[றுண்டோ
நாதனே பந்துசனமு மின்னநாடும் பிராணனு மென்னக்
காதலவ ரவரிடத்தே கண்டுசொல்லு மைத்துனரே
ஈதோ இந்த அடவிதனி லெளிய மானிடர் போலவே
மாதுயர்க்கடல் நடுவிலே அழுந்தியிருக்கு நீதியும் ராம சந்திர
நிசமென்று மெனது வசமென்று சொன்னேனென.
(சொல்லும்)

## சீதாப்பிராட்டி கூறியவற்றைக் கேட்ட இலக்குவன் வருந்திச் சில கூறல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

மஞ்சனைய கூந்தலாள் சீதை யம்மன்
மற்றுமின்னும் ருதுகாலம் நீங்கு கின்றேன்
இஞ்சலுட னென்னுடம்பைப் பார்த்து நீர்தா
மிளையவரே யூருக்குச் செல்வீ ரென்னப்
பஞ்சமா பாதகனோ நான்தா னென்றே
பாவித்து மொருமுகூர்த்தந் தியானஞ் செய்தே
அஞ்சலிகொண் டேபணிந்து கேவிக் கேவி
அழுகின்று னிதுசொல்லித் தொழுகின் றானே.

சங்கராபரண ராகம்] [சாபு தாளம்

பல்லவி

பூமகளே யுந்தன் தேகத்தை யெப்படி நான்
பொருந்தப் பார்ப்பே னெந்த னன்னையே.

அநுபல்லவி

தாமரை மலர் நிகரும் திருவடி
தன்னையே யறிவேநான் பின்னையொன்றை
[யுங் காணேன் (பூமகளே)

சரணங்கள்

1. தரணியில் மனிதர்களுக் கடுக்குமோ பார்த்தால்
சகிக்குமோ பின்னுங்கண்ணைக் கொடுக்குமோ நாவுங்
குருபத்தினி யென்பேரைத் தொகுக்குமோ நீயென்
குலதெய்வ மென்றுசொன்னால் தடுக்குமோ - ராமா
அரிகரி யிதற்கோநா னானது சும்மா
அருந்ததி யேயுந்த னநுக்கிரகஞ் செய்யுமம்மா
(பூமகளே)

2. பண்டு தண்டகை யென்னும் வனத்திலே - ராம
பத்திரன் கூடவிருந்த கனத்திலே - அப்போ
கண்டே னுன்பாத மம்மா மனத்திலே - இப்போ
காட்டி லவரில்லாத் தருணத்திலே - கண்ணைக்
கொண்டு மெப்படி யுந்தன் சரீரத்தைப் பார்ப்பது
கொடுமையாகிய சொல்லைச் சொல்லலாமோ யேற்பது
(பூமகளே)

3. பதிவிரதை களுக்குக் குருபீடம் - ராம
கதிவிட்........மல்லா முகபாடந் - தயா
நீதிநீ பாவக் கடலுக்கோ ரோடம் - இந்த
நிலத்தி வழக்குக்கெல்லா மொரு கூட - மென்று
துதிசெய்யு தேயுலக மாதி யிட்சுமி நீயே
யெதுபிழை யான்செய்தாலு மிரங்கிநீ பொறுப்பாயே.
(பூமகளே)

## இலக்குவன் சீதாப்பிராட்டியை வனத்தில் விட்டு ஏகல்; தனியே இருந்த சானகி அலறல்; முனிகுமாரர்கள் வான்மிகரிடம் சென்று கூறல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

அருந்ததிக்கும் தாயான சீதை யாரை
யடிபணிந்து மிவைசொல்லி யிளையோன் சிந்தை
வருந்தலுடன் கங்கைநதி யோட மேறி
வடபாரி சத்திலிரத மேல்ந டக்க
மருந்தனைய மொழியாளு மலறக் கண்டு
வனத்தில்முனி புத்திரர்கள் வந்து பார்த்தே
அருந்தவராம் வான்மீகிக் குரைப்போ மென்றங்
ககலுவா ரவரிடத்திற் புகலு வாரே.

### வான்மீகரிடம் முனிகுமாரர்கள் கூறல்

கேதாரகௌள ராகம்] [ரூபக தாளம்

பல்லவி

முனிநாதனே முனிநாதனே
முனிநாதனே சரணம்.

அநுபல்லவி

சனகாதிய ரனைவோர் - துதி
கனவால் மீகி ரிஷியே (முனிநாதனே)

சரணங்கள்

1. ஆரோ யெந்த வூரோ - வென்ன
பேரோ ஒரு பெண்ணாள் (முனிநாதனே)

2. மண்ட லத்தில் பண்டு - நாங்கள்
கண்ட தில்லை ஐயா (முனிநாதனே)

3. ஒருத்தர் மகா புருஷர் - பெண்டு
திருவே யவ ளையா (முனிநாதனே)

4. கங்கா நதியின் கரையி
லிங்கே முறையி டுகின்றாள் (முனிநாதனே)

5. சிலம்பு தண்டை யலம்பு - ததோ
 புலம்புகின் றாளே குருவே (முனிநாதனே)

6. அஞ்சி அஞ்சி வஞ்சி - வஞ்சி
 தஞ்சந் தஞ்ச மென்கிறாள் (முனிநாதனே)

7. நாதனில் லாதபேதை - போலொரு
 மாது கூவுறாள் சாமி (முனிநாதனே)

8. மெத்தவுங் கிட்டச் சத்த - மாகுதே
 யுற்றுக் கேளுமே தேவரீர். (முனிநாதனே)

நேரிசை வெண்பா

ஓது மிருடிசுத ருற்றவுரை கேட்டுமங்கு
மாது சிரோமணியாய் வந்தவளாஞ் - சீதையுடைச்
சந்தாபந் தன்னைச் சமாதியினுற் கண்டறிந்து
வந்தார்வான் மீகமுனி வர்.

**முனிகுமாரர்கள் கூறுவதைக் கேட்ட வான்மீகி முனிவர் சமாதியினுல் சீதாப்பிராட்டியின் துன்பத்தை அறிந்து அங்கு வருதல்**

**சௌராஷ்ட்ர ராகம்] [சாபு தாளம்**

பல்லவி

வனவாசி வால்மீகி முனிவர் வந்தா ரையா
வனவாசி வால்மீகி முனிவர் வந்தார்.

அநுபல்லவி

நினைவு கலங்கச் சீதை நின்றவிட முன்னுகிக்
 கனமான ராமமந்த்ரங் கைக்கொண்ட பிரமயோகி
 (வானவாசி)

சரணங்கள்

1. புலித்தோ லுடைகட்டிப் புரிநூல ணிந்த தட்டிக்
 கெலித்தேகோ பத்தை வெட்டிக் கெக்கலி கொட்டி
 வலிவாய் மாயையை யெட்டி வாசிக் குதிரைக் குட்டி
 விலகாமல் துசங்கட்டி வேதாந்தக் கட்டி (வனவாசி)

2. மதுமாரி யாய்த்தூவி வருமாங் குயில் போல்கூவித்
துதிராமா மிர்தநாவில் சொல்லியே சேவி
மதிமான் சிவந்த காவி வத்திர முடனேதாவி
நதிதீர மதைமேவி ஞானசஞ் சீவி (வனவாசி)

3. கமண்டலங் கையிற்கொண்டு கனமிக்க யோக தண்டு
சமரச மாயிரண்டு தானங்கே கொண்டு
அமிர்த ரசத்தையுண்டு மானந்தச் சோதி கண்டு
விமலீ தென் றுவிண்டு வித்தைக்கல் கண்டு. (வனவாசி)

## சீதாப்பிராட்டியாரை வான்மீகி முனிவர் வரவேற்றல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

தந்தையைப்போல் வான்மீகர் சீதை முன்னே
தானடந்து கண்டுவந்து சமாதி யாலே
வந்தவர லாறையெல்லா மறிந்தே னம்மா
மகராசி நல்வரத்தாய் வந்தை யாவென்
றிந்தவகை யவர்வேத வாக்கி னலே
யெள்ளளவுங் குற்றமில்லா தவளே யென்று
சந்ததமு மாட்டாங்க யோக மார்க்கஞ்
சாதிப்பார் மனந்தெளியப் போதிப் பாரே.

## சீதாப்பிராட்டியை வான்மீகி புகழ்தல் ; தனது ஆச்சிரமத்தில் தங்கியிருக்குமாறு கூறுதல்

**அடாணு ராகம்]** **[ஆதி தாளம்**

### பல்லவி

வாராய் சனகன் பெண்ணே - பதிவிரதையே
வாரா யருந்ததிக் கண்ணே.

### அநுபல்லவி

தீரதச ரதகுமார யிரகு குல
வீர மானிடா கார தசமுக ஸங்
கார வெதிரடரு நேரல்லா ரைவெல்லும்
வீரரா மன்மகிழ் பாரிநீ கிருபைசெய்ய (வாராய்)

சரணங்கள்

1. வாவா பூமாதே மானே
 வாவா மெய்ஞ்ஞானத் தேனே
வாவா தயாம்பு ராசி வாமக ராசி
 மூவருட னேயே தேவர் முனிவர்கள்
யாவரு மகிழவே பாவ உருவயி
 ராவண னுடன்மிகு சேவக ருமேமனை
 மேவவிடு ராகவர் சீவநாயகி யிங்கே (வாராய்)

2. கண்டேன் ஞானக்கண் ணாலே
 கண்டே னுள்ளங்கை போலே
கண்டேநீ யிந்தவாறு கடுந்துயர மாறு
 தொண்டை நிகரும்வாய் கண்டை நிகருமுரை
கெண்டையிணைக் கண்ணிணை வண்டு வுவமையே
 கொண்ட வளகமே தண்டையொலி பாதமி
 ரண்டு மழகுபெற மண்டல மீதில்வந்தாய் (வாராய்)

3. எந்தன் குமாரி நீயே
 எந்தன் கண்ணேயென் தாயே
எந்தன் சாலையின்முன்னே யிருக்கலாம் பொன்னே
 இந்த விதனமெனுந் தண்டத்துக் கொரு
நிந்தைக ளுமில்லை வந்து இருவம்மா
 சொந்தக் கிருகமெனவே தந்தையா யென்னையெண் ணு
 சந்தேக மினியென்ன சிந்தை கலக்கந் தீர்ந்து.
(வாராய்)

**வால்மீகி முனி ஆச்சிரமத்தை நாடிச் சீதை செல்லுவதைக் கண்ட இலக்குவன் மனம்நொந்து சுமந்திரனிடம் கூறல்**

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

பாரதியே மூர்த்திகர முனிவான் மீகர்
 பரிந்திதனைச் சொல்லவங்கே சீதை யாருஞ்
சீரறிந்து வந்தனஞ்செய் தங்கை கூப்பிச்
 சயமுனிவர் பின்னடந்தாச் சிரமஞ் சேர்ந்தாள்
வீரவிலக் குமன்மார்க்க மதிலே நின்று
 மெல்லியல்செல் வதுபார்த்துச் சுமந்தி ரராஞ்
சாரதியே துயரமிது சகிக்க வாராத்
 தரமென்பான் தெய்வவிசித் திரமென் பானே.

## இலக்குவன் கூற்று - தொடர்ச்சி

கல்யாணி ராகம்] [அட தாளம்

பல்லவி

இன்னு மென்ன வேணும் சுமந்திர ரேயிது
என்ன காரணங் காணும்.

அநுபல்லவி

பொன்னவ ளனுஞ் சீதையைப்
பூபதி ராமன் பிரிந்து (இன்னும்)

சரணங்கள்

1. அருந்ததி சீதை தனை - ராம
ரணிய மதில்விட வாச்சே
திருந்த வெண்ணி வார்த்தைகள்
சிலது பேர்களுக்கோ ரேச்சே
துரந்தர னேரகு நாயக ருக்கிந்த
துயரந் தானேவந்து போச்சே
வருந்தியென் னுகமும் நோகுதே - மனம்
வாடுதே வருதே பெருமூச்சே (இன்னும்)

2. தந்தையே வலாலந்த வேளையிற்
தண்டகா ரணியமது சென்றே
நொந்தமே பதினலு வருஷமு
நாறு திரத்துக்கது நன்றே
கந்தரன்னீர் சுழுவுக் கதுதொழு
கைலாச மென்பது மொன்றே
இந்த மானிடர்கள் நோவுக்கே - பந்த
மேதுகாண் சொல்வீர் நின்றே (இன்னும்)

3. சுராசு ரர்களு நடுங்கத்
துரத்திய ரகுபதி யாரும்
தரணிமீது தெய்வ வுபாசனை
தானே செய்கிறார் பாரும்
வரும்விதி தானறியா திந்த மதிமயக்கம்
வந்ததென்ன சொல்லு நீரும்
பு....ங்கள் சொன்ன வார்த்தைதா னென்னப்
பொங்குதே புண்ணகுதே வாரும். (இன்னும்)

### சுமந்திரன் பழைய வரலாறு ஒன்று கூறத்தொடங்கல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

இனங்கொண்டே யிளையவனு மிப்ப டிக்கே
யேங்குதல்கொண் டுஞ்சொல்வான் சுமந்த்ர னங்கே
முனமுங்கள் வாலிபத்தில் தசர தேந்திரன்
முன்னுக முனிதுருவா சன்றுன் சொல்வ
சனமதுவே நடுக்குதலு மாய்ச்ச கிக்க
லாமோநீ ரக்கதைநா னறிவே னென்றுன்
மனந்தெளிய வதைச்சொல்வீ ரெனவு மன்பை
வைக்கின்றுன் கதையாரம் பிக்கின் றுனே.

### தயரதன், வசிட்டராச்சிரமத்தில் துருவாசலரக்கண்டு வணங்கிக் கேட்க, அவர் இராமபிரான் முதலானவர்கள் பற்றிக் கூறுதல்

காம்போதி ராகம்] [சாபு தாளம்

பல்லவி

பட்சமுள்ள லட்சு மணரே - பழையகதை யுமக்கு நான்
பரிந்து சொல்கிறேன் கேளு மையா.

அநுபல்லவி

அட்சி யாயிர நிகரான தசரத ராசன் - முன்னு
ளாதிகுரு வதிட்ட ராசிர மத்தில் சென்று - றொருநா
ளவரையுந் துரு வாசரையுங் கண்
டடிவணங்கினுர் முடிய வின்னுஞ் சொல்வேன் (பட்ச)

சரணங்கள்

1. அத்திரி புத்திர ரான அந்தத் துருவாச முனி - முன்னம்
ராசனம்மை மகனி ராம பத்திரன் வருட
மெத்தனை தானிந்த வவனி யாள்வா னென்றுசொல்லி - [யின்னும்
மற்றுமுள்ள புத்திருக் கெத்தனைதா னுயுளென்று - [தன்னாந்
தனிவகை வகையாயவ ரவர்கள்சக தலத்தின்மைந்
தரைப்பெறு மார்க்கஞ் சொல்வீ ரென்னவே பிரசன்ன

முற்றுரை செய்தார் முன்னு ளுயர்ந்த தேவர், தானவரு
மூடாடிப் பூச விடும்போதே யோடியந்த வசுரர்க
ளுரிமையு டனவர் குருவர்க்கமு மான பிருகு
[பத்தினியைச் சரணுகதி யென்ருர் (பட்ச)

2. தன்னைவந் தடைந்த பேரைத் தானே
ரட்சிக்கிறே மென்று மூட ரான
தானவரை யுள்ளடக்க வானவருடனே யந்த
சக்கர பாணியும் வந்து தேட
வென்னிடத்தி லில்லை யென்று
மின்னவள் பொய்யான சொல்லைப் போடக் - கண்ணை
யிறுத்துப் பார்த்தான் சக்கரத்தா
லறுத்திட்டா ரவள் கழுத்தை
யேமனிட மவளுயிர் கூட - பின்னும் வந்து
கண்டவுடன் பிருகுமுனியும் நாரணனைப்
பெண்டுபிரியக் கொடுத்தே மண்டலத்தில் நரனுகப் -
பிறந்தலைய வென்று நிறைந்த சாபமிடப்
பலித்தது சக தலத்தி ராமனுக்கு (பட்ச)

3. காக்கை யேறப் பனம்பழம் - விழுங்
காரணத்தைச் சொல்வதைப் போலே - எங்கள்
கவலை தீர்க்கு நாரணனு மவதரித் திராம னுனர்
காணுந் தசரதனே யுன்பாலே
பாக்கிய மிகுந்திரா மாக்கினை செலுத்தி
நன்மை யாலே - யொரு
பதினே ராயிரம் வருடமதி பதியாய் - அசுவ
மேதங்கள் பண்ணுவா ரயோத்தி நகர்மேலே
தூக்கிக் கொண்ட சாபமே தொடர்ந்து - பெண்டீரைப்
பிரிந்துந் துணைவரையும் பிரிந்து - கூடி
யிணைய தாகவே யிரண்டு - சுந்தரர்க ளான
நந்தனரை யடைந்தந்த
வரசை யுகந்தே யுதவுவார் (பட்ச)

4. இப்படிக் கெல்லாமு மங்கிருந்து துரு
வாசமுனி கூறி - ராச
னேற்றுக் கொள்ளும் போது நானே பார்த்துக் கொண்
டிங்கி தறிந்து நீரு மனந் தேறி
மைப்புயலின் மேனி ராம
னற்புத சீதை யிவரால் மீறி - மனம்
வாடவேண்டாஞ் சாமி சேர்வை நாடி நாமே
சேர்வ மையா வாரு மிந்தத்துன்ப மெல்லா மாறி
அப்படிக் கிரண்டுபிள்ளை சுப்ரதீப மாய்ப்பெறுவ
ளங்கிச மிருந்துமுங்கள் வங்கிசம் பெருகுஞ் சொன்னே
னநுதினமும் நல்ல மநுநெறியால் பூமி
யாண்டுவரு மெங்க ளாண்டவற்கு நல்ல. (பட்ச)

## சுமந்திரனும் இலக்குவனும் அயோத்திமாநகர் செல்லல் : இராமபிரானிடம் சீதாப்பிராட்டிபற்றிய செய்தியைக் கூறுதல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

நன்மையுள்ள சுமந்திரன்சொல் லதனைற் றேறி
நாடியிரு வருமயோத் திதனில் வந்து
தன்மனெறி ராமனடி வணங்கிச் சீதை
தன்னையுத்த ரவுப்படியே யிளையோன் ருனும்
வன்மீக முனிகாட்டில் கொண்டே விட்டு
வந்தேனென் றையனுடைக் கண்ணீர் கண்டான்
சின்மயா னந்தவெள்ளந் தனைப்பெ ருக்கித்
தேக்குவான் விதனமெல்லாம் நீக்கு வானே.

### இலக்குவன் கூற்று ; தொடர்ச்சி

ஆனந்தபைரவி ராகம்] [ஆதி தாளம்

பல்லவி

சாமி நீர் விதனஞ் செய்ய லாமோ
சகிக்க வேணுமென் னையா.

அநுபல்லவி

பூமி புகழுமி ரகு பதிநீர் மகா
புருடரே கிருபா வருடரே - என் (சாமி)

சரணங்கள்

1. காணப்பட்டன வெல்லா மழியவும் படுமே வுலகினி லுயர்வுங்
   கண்டதெல்லாம் பின்பு தாழ்வதைத் தொடுமே
   கூடியி ருந்தவரைக் கோளரிக்கொண்டு நாட்டில்
   [பிரியவும் விடுமே
   சனனமு மரணமுங் கூறுநா னிந்தப்
   [பிரபஞ்சத்துக் கடுக்குமே
   தோன்றுவ தெல்லாமகா மாயையே ஞான
   சூரியரே - ராமா - ஆரியரே யென் (சாமி)

2. சுற்றிய பெண்டுபிள்ளை பண்டபதார்த்த மித்திர ரிவர்மீதில்
   தொடர்ந்த பிரீதி வைத்தால் வருவதன்றந்
   [திரு நீத்துக் கழக்கொடி
   யொத்திருக்க வேணும் - பிரிதல் வருமே
   சித்தம் பேதை மனிதர் போலே - உம்மைப் போலே
   மிக்கோன் கலங்க லாமோ - சித்தங்
   கர்த்த யான்மவி சாரணை பண்ணினீர்
   கண்டிடுந் துயர் விண்டிடுமே - யென் (சாமி)

3. எந்த நிமித்திமாய்த் துயரத்தைக் குறித்தி ரபவாத நீர்
   [பயத்தை
   எண்ணி யல்லவோ காட்டில் சீதையைப் பிரித்தீர் -
   [திரும்பவு மபகீர்த்தி
   வந்திடா தோசாமி மனதையு முறித்தீர் தைரியம்
   [விடாமலென்
   வார்த்தை கேளு மிராவ ணனுயிர் பறித்தீர்
   சுந்தரனே சச்சி தானந்த ரூப
   சவுந்தர ராமா துரந்தர ராமா (சாமி)

4. சகல வுயிர்களுக்குஞ் சுகதுக்கமே ரெண்டு - அவரவர்கள்
   செய்த
   தரும பாவங்களை யநுசரிப்பது கொண்டு - ஒருநிலை நில்
   [லாமல்
   சகடைக்கா லைப்போலே சுழன்று வருவ துண்டு - இதுக்
   [கெல்லாஞ் சூத்திர
   தாரியா ரென்றுநீர் பாரு ஞானங் கொண்டு
   அகிலஞ் சொலக் கோதண்ட தீட்சா குருவென்னு
   மய்யனே - ராமா - மெய்யனே - யென். (சாமி)

## இலக்குவன் சொற்களால் மனந்தேறிய இராமபிரான் அவனிடம் சிலவற்றைக் கூறத் தொடங்கல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

தம்பிவச னங்கண்டே ராம சந்திர
சாமிமனந் தேறியிலக் குமனே யுன்னை
நம்பியுநான் சொன்னபடி செய்தா யிந்த
நாட்டிலுள்ளோர் சொன்னவப வாதந் தீர்த்தாய்
அம்புவியி லுன்னைப்போல் பிறவி யுண்டோ
வாறுதலைச் சொன்ன துவு மருமை யென்றே
யும்பரெலாந் துதிமுகத்தின் களைக ளோங்கி
யுதிக்கின்றான் சொல்லிதனைப் பதிக்கின் றானே.

### இராமன் கூற்று; தொடர்ச்சி

சாரு ராகம்] [திரிபுடை தாளம்

பல்லவி

அபவாதத்தால் மனம் வெம்பி—இருந்தேனிதை
அறிந்துதவி செய்தாய் தம்பி.

அநுபல்லவி

சயமிக வுண்டாகுஞ் சுகிர்த சாவியு நீயே
உபவாச மிருந்து பண்டு செயந் தந்தா
யுபகாரஞ் செய்தாய் சபைதனில் வந்த (அபவாதத்)

சரணங்கள்

1. சொன்னபடி செய்த போதே - யுன்னைப் போலே
சோதரங் கிடையாதே
என்னைவிட் டகலாதே - இருப்பதை மறவாதே
என்ன சொல்லுவே லுன்னரு மைகளை
இன்னமுந் தெய்வப்பிர சன்ன ஞகை விரு (அபவாதத்)

2. எந்தனிட்ட பந்து நீயே - இந்த வேளை
என்னையுந் தேற வைத்தாயே
சிந்தைகலக் கம்போயே - தெளிந்தேன் மகிழ்ச்சி யாயே
யுந்தன் மதுரவாக் கிந்தப்படி செய்து
எந்த னுடனேபி றந்தலட்சு மணனே (அபவாதத்)

கொண்டவிசு வாசத்தைக் கண்டு - மூலகந்தனிற்
கூடி அழுவார்க ளுண்டு
கண்டதிப் படிக்கொண்டு கலக்கந் தீரவே விண்டு
அண்டி வந்து சொன்ன கண்ட வாதி யுன்னை
மண்டலத்தி லெங்குங் கொண்டாடு வாரையா.
(அபவாதத்)

## இராமபிரான் இனிச் செய்யவேண்டியபற்றி இலக்குவனிடம் கூறல்

### நேரிசை வெண்பா

நாடியிவை சொன்னேனே நான்குநா ளாய்ச்சதிரிற்
கூடி மநுநெறிச்செங் கோல்செலுத்திப்—பாடிபர
தேசிமுதல் யாவருடைச் சேதிகளு நானறியேன்
மாசிலா னேயிலக்கு மா.

## இராமபிரான் கூற்று : தொடர்ச்சி

ஆரபி ராகம்] [ஆதி தாளம்

### பல்லவி

செல்வனே லட்சுமணனே-நான் சொன்னபடி
செய்யடா வென்துணைவா.

### அநுபல்லவி

வல்வருத்த மடடா ராசரீகத்தின் குண
மந்திரி புரோகிதரை யழைநீ யிந்தக்கணம் (செல்வனே)

### சரணங்கள்

1. நாலு தினமா யிந்த ராச்சிய-தந்திரங்களை
நானென்று மறியேனே நாடுக ளென்ன மாச்சே
சாலவு மதுவெந்தன் சரீரத்தை நடுக்குதே
சனங்களுக் கென்ன யேச்சே
வேலை ராயச மென்ன வகையோ அடடா
எள்ளுக் குழுது பிண்ணாக்குத் தின்பதது
வென்ன சும்மா போச்சே
சீலனே யவரவர் குறித்துவந்த காரியந்
தீர்த்துக் கொடுக்க வேணுஞ்
செங்கோ லென்ன மேல்பூச்சோ (செல்வனே)

2. அரசன் சீமைக் காரிய மறிந்தே - யன்றன்று(க)ட
மதுக்குத் தக்க படியே நடப்பி வைக்காத போது
நரகக் குழிக்கு நாற்றங் காலாகப் போவ ரல்லால்
நல்ல கரை யேற்ற மேது
வரிசைத் தம்பிரா னொருகதை சொல்வேன்
முன்னுளி லோர்மன்ன நிருகன் புட்கர
மென்றொரு தலமீது
ஒருபுண்ணிய காரியத்திற் கோடிபசு வந்தணற்
குதக பூருவ மாக வுதவினது தப்பாது (செல்வனே)

3. அந்தத் தானத்துக் காக நாடுக ளிருந்ததேனு
வாயிர மாயிரம் ஒரு கூட்டமாய்
விந்தை யாக வரவே அந்தக் கிடையி லொரு
வேதியன் பசு நாட்டமாய்
வந்தத டாமேய்ச்சத் தரையை விட்டுப் பிரிந்தும்
வஞ்சனை யில்லையந்த ராசனுஞ் சிரேட்டமா
யந்தண னுக்குமுந்தி தானம் பண்ணினு னதை
யார்க்குந் தெரியாதிது அடடா விளையாட்டமாய்
(செல்வனே)

4. கடையில்தேங்கா யெடுத்து வழிபிள்ளையார்க் குடைத்த
காரணமிது வாச்சு தந்தப் பசுவை நாடி
யுடைய பிராமணன் உஞ்ச விருத்திக் கார
னூர்க ளெங்கு மூடாடிக்
குடுகுடென வோடியே பறக்குங் காக்கை யிருக்குங்
கொம்பை யறியாதெனுங் கொள்கையது போல்தேடி
நடையில் மெலிந்து வெகு ராச்சியஞ் சுற்றி யங் - கே
நகல மென்று பேரொரு நகர மதனில் கூடி.
(செல்வனே)

**பசுவைத்தேடி ஊரூராகச் செல்லும் அந்தணன்**
**கேநகலம் என்னும் ஊரினை அடைதல்**

**எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்**

ஆண்டுபல வாய்ப்பசுவைத் தேடி வந்த
அந்தணன்கே நகலமென்னு மவ்வூர் தன்னில்
வேண்டிமுன்னே நிருகமகா ராசன் கையில்
வியந்துதா னங்கொண்ட மறையோன் வீட்டில்

பாண்டுநிறம் பெற்றகுடப் பாலின் செவ்வி
    பசுதனதா மென்றுகண்டு சபளே யென்று
பூண்டிடுபேர் சொலியழைக்க வரவுங் கண்டு
    பூரித்தான் மிகவார பாரித் தானே.

## இதுவுமது

ஊசிகண்ட காந்தம்போற் பசுவுந் தானே
    யோடியந்த மறையவன்பின் செல்லக் கண்டு
தேசமெச்சு நிருகனிடந் தான மேற்ளுன்
    சீக்கிரத்தி லோடியதட் டியாரடா நீயார்
பூசுரனே யென்பசுவைப் பின்னே யோட்டிப்
    போகவந்த காரியமென் புகல்வா யென்று
பேசியொரு வர்க்கொருவர் மடிகள் தன்னைப்
    பிடித்திட்டார் விவாதமங்கே படித்திட் டாரே.

## இதுவுமது

**த்விஜாவந்தி ராகம்]** **[ஆதி தாளம்**

### பல்லவி

பசியி லெக்கிய வயறு நில்லு நில்லடா - என்
பசுவை யோட்டிப் போறதென்ன சொல்லு சொல்லடா.

### அநுபல்லவி

நிசமதாயென் பசுவி தாமே யுனக் கேதடா
பசுநீ திருடிக்கொண்டு வந்தாய் வெகு சூதடா (பசியில்)

### சரணங்கள்

1. நாடறியு மூரறியு மென்பசு வென்றே - நீதான்
    நாலுபேர்க்கு மொப்பிவைநீ பார்க்கிறே மின்றே
ஓடியென்பின் வந்தது நீகண்டு கொண்டாயே - நீதானே
    உனதானல் அழைபார்ப்போம் வருமோ விண்டாயே
பச்சிலே முடிக்குண்டடா வல்லாள கண்டா - நீதான்
    பச்சிலேயிலே பிடிமாடு பிடிக்கிற வண்டா
அச்சமின்றிப் பேசுறுயே இந்த மாட்டைத் தானுனக்
    காரடா கொடுத்தார் சொல்லு வந்த நாட்டைத்தான்
(பசியில்)

2. மடியிலே கனமுண் டானல் வழியிலே பயமுண்டு
வார்த்தைக் கிளைத்துநானுஞ் சொல்வதே நியாயம்
பிடிகொடுக் காமல் பேசுரு யிந்த மாடு - அடா
பிராமணு தந்ததார் சொல்லிச் சண்டை போடு
புட்கரத்தில் தான்நிருக ராசன் தானஞ் - செய்த
போதிதே யெமக்கு வந்தவரு மானம்
முட்கர வந்த ராசனைக்கண்டு நாமே - அவன்
முன்னஞ் சொன்னல் வழக்குத் தீர்ந்து போமே.
(பசியில்)

## நிருகராசன் தரிசனங் கிடைக்காமல் அந்தணர் பசுவை இன்னொரு அந்தணர்க்குக் கொடுத்தல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

வழக்காளி மறையவ ரிரண்டு பேரு
மன்னநிருக னரண்மனை வாசல் சென்றே
பழக்கமதாய் நெடுநாள்காத் திருந்தா ரந்தப்
பார்த்திபன்தரி சனமகப்ப டாமல் மேக
முழக்கம்போல கதறியும்பின் கேள்வி யில்லை
முனைந்தவர்க ளிருவருமோ ரந்த ணன்பால்
குழக்கன்றில் கிழப்பசுவைக் கொடுத்தார் பின்னுங்
கோபிப்பா ரரசனையுஞ் சாபிப் பாரே.

## அந்தணர் நிருகராசனைச் சபித்தல்

**மோகன ராகம்]** **[சாபு தாளம்**

பல்லவி

கண்ணில் படாமல் போவாய் - நிருக ராசா
கரட்டோணு னுவாய்.

அநுபல்லவி

மண்ணில் ராசரீகம் பண்ணுற நீதா
னன்ருட மெங்குங்கண் ணுண்டாகப் பார்த்து
நண்ணி யொருவர்க்கும் புண்ணிலு ருமலே
எண்ணி நடக்காத புண்ணியத்து ரோகி நீ (கண்ணில்)

சரணங்கள்

1. எங்கள் வழக்கதையுங் கொண்டு - முதன்
   இடங்கண்டு சொல்லவு மங்கே வந்தோம் - வெகு
   கங்குல்பக லந்தரங் கந்தனி லிருந்தும்
   கண்ணிற் காணுதே யெங்கே யிருந்தநீ (கண்ணில்)

2. வழிக்கரிசி யில்லான் வழக்கழிப் பென்று
   வழக்க மாகிய மொழிக்கு ளெங்கட்குப்
   பழிக்குநீ யாளு யழுக்கு நெஞ்சனே
   அழுக்க தாகவே குழிக்குள் ளேகிட (கண்ணில்)

3. மாவலி யினிட மூவடி வாங்கினுர்
   பூவுல கில்வாசு தேவ ரெதுகுல
   மேவிர்த்தி யாகவுண் டாரவ - ராலே
   காவலனே மோட்ச மேவுவை யிப்போநீ. (கண்ணில்)

## இலக்குவன் நிருகராசனுக்கு மேல் நிகழ்ந்தவற்றைக் கேட்டல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

இச்சாப மந்தநிரு கனுங்கொண் டானென்
   றிலக்குமன்கேட் டங்கையது கூப்பிச் சொல்வான்
கற்சாபத் தன்றனுப்பங் கஞ்செய் முன்னே
   கற்சாபந் தவிர்த்தரிவை யாக்குங் காலோ
அச்சாப மந்தணர்கள் கோப மாகி
   யல்பாப ராதியந்த வரசன் மீது
உச்சாடனஞ் செய்பின்னுங் கவனென் செய்தா
   னேதலாங் கேட்கவுமென் காத லாமே.

## இளையபெருமாள், நிருகராசனுக்கு எப்படி இந்தச் சாபமேற்பட்டது என இராமபிரானை வினவல்

பைரவி ராகம்] [ஆதி தாளம்

பல்லவி

அற்புத மிதையா - ராகவேந்திரா
சாமி ராம சந்திரா.

அநுபல்லவி

அற்புத மிதையா ராமா - அந்த வரசற் கிதாமா
   அப்படி விப்பிரர் செப்பிய சாபம்
எப்படித்தா னநுபவிப்ப திப்படிப் பெரியதாய் (அற்புதம்)

சரணங்கள்

1. கண்டு செய்த தப்பிதமோ - இல்லையே
 ராசனே - விசு - வாசனே
 மண்டல மீதிலு தாரியு மாமவன்
 மாதபோத ஞதிமகி மையுமெய்யு மிகுமவன் (அற்புதம்)

2. கால தண்டமொத்திடு மாவல்ல - ஞகியே
 ராசனே ராச - யோகியே
 மேலவ னென்னசெய்தா னதையே சொல்லுவீரே
 வீரசூர - ஜய - வில்லில்வல்ல நரபதி (அற்புதம்)

3. உரிமைப்ப ணம்போய்த் தெருச்சண் டையை
 யிழுப்பானதே காதை யானதே
 விருதாவிலே யிந்தச் சாபமுஞ் சூழ்ந்ததே
 வேறுகூறுமெ வாறதென விண்டுகண்டு சொல்ல
 [வேணும். (அற்புதம்)

**நிருகராசன், அந்தணர்கள் சாபம் பெற்ற பிறகு, தன் புதல்வனுக்குப் பட்டங்கட்ட எண்ணி, மந்திரிகளுடன் கூறல்**

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

புருடசிகா மணிராம சந்த்ரன் றன்னைப்
 போற்றியினி யோனிதனைப் புகலச் சொல்வான்
பருவதநா ரதரெனவே வந்த வேத
 பாரகர்தா னிட்டகொடுஞ் சாபங் கேட்ட
நிருகரா சன்திடுக்கிட் டேங்கி யந்த
 நிமிடமேபு ரோகிதர்மந் திரிகள் தம்மை
வரவழைத்து மகனுக்கே மகுடஞ் சூட்ட
 வழிசொல்வான் தனக்கிசையு மொழிசொல் வானே.

**நிருகராசன் கூற்று : தொடர்ச்சி**

**சாரங்கா ராகம்]** **[ஆதி தாளம்**

பல்லவி

மந்திரி புரோகிதர் மாரே - என் குமாரர்க்
கபிடேகஞ் செய்வீரே,

அநுபல்லவி

அந்தணர்க ளுக்குக் கோபம்
வந்ததே கொடுத்த சாபம்
எந்தன் மனச் சந்தாப
மிந்த சன்மத் திலாபம் (மந்திரி)

சரணங்கள்

1. சிற்ப சாஸ்திரத்தின் பிரகார - மிக
வற்புத பலவிருட்சத் தோரங்
கற்பிதக மாக இந்த வனத்திற் கோடிக் - கூடார
மிப்படி யிருக்கவே யின்னுஞ் சொல்லுவேன் சாடி
(மந்திரி)

2. காலத்துக்குத் தக்கின கோல - மென்பார்
போலொன் றரையோசனைவி சால
மேலுமத னின்மழை வெயிற்கநு கூலஞ்
சாலவே மூன்றுகுழி தாபிப்பீ ரிதுவுங் காலம் (மந்திரி)

3. இப்பாரி லானைவந்தாலு மேற - வேணுஞ்
சப்பாணிவந் தாலுநகரக் கூற
அப்படி வந்தசாப மநுபவிப்பது நேர
இப்படிச் செய்வீரிங்கே என்மைந்தன் புகழ மீற
(மந்திரி)

## நிருகராசன் தன் புதல்வனை யழைத்து முடிசூடுமாறு கூறி அறிவுரைகள் பலவும் பகர்தல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

மந்திரிபு ரோகிதரை முதலா யுள்ள
மற்றுமுள்ள குடிபடைக்கிவ் வாறு சொல்லி
அந்தவகை மூன்றுகுழி யுண்டு பண்ண
வரசனுந்தன் மகன்வசுவை யழைக்க யேவி
வந்தவனை யருகில்வைத்தே யுச்சி மோந்து
மண்டலத்தை நீயாண்டு மகிழ்ச்சி யெய்தி
எந்தனுடைக் குலம்விளங்க வளர்வா யென்று
மிதஞ்சொல்வான் புத்திகளற் புதஞ்சொல் வானே,

## நிருகராசன் புதல்வனுக்குக் கூறும் அறிவுரைகள்

கௌளிபந்து ராகம்] [ஆதி தாளம்

பல்லவி

மகனே நான் சொன்னபடி கேளு - புத்தியுள்ளோனே
மகனே நான் சொன்னபடி கேளு.

அநுபல்லவி

பகவந்தம் வேத மேயப்
பொற்பாத மெப்போது நம்பு (மகனே)

சரணங்கள்

1. இங்கே குரு சனங்க ளாலே - மகுடஞ் சூட்ட
வுங்கொண்டு செலுத்துசெங் கோலே-வுயிர்கட்கெல்லா
மங்கங்கே பெற்றதாயைப் போலே - யாதரவுசெய்
புங்கவ ராசாங்கத்தின் மேலே - அந்தணருக்குச்
செங்கன கங்களொருக் காலே - கொடுக்க வன்றே
கங்கணங் கட்டிக் கொள்ளு(வாய்) கண்மணியே
[நீயன் பாலே (மகனே)

2. இந்தக் கொடுமையான சாபங் - கொடுத்த வந்த
வந்தணர் மீதிலேநீ கோபஞ் - செய்யாதே ஐயா
முந்தப்போகி னார்தாமே கூபங் - தனில்விழுந்தால்
பிந்திப் போறவற்கொரு தீபம் - பிடித்தாப் போலே
சந்தேக மில்லை முன்செய் பாபந் - தொடர்ச்சி கொண்டு
வந்திடுங் காமக் குரோத லோப - மோக மதமுஞ்
சந்தமாச் சரியக் கலாப - மிதையெண்ணுமல்
சந்ததமும் பண்ணுவிது தருமமே யான்ம லாபம்
(மகனே)

3. எதிர்த்த மன்னர்மேற் சண்டை போடு - விசயங்கொண்டு
கதிக்குந் திரைநிதியைத் தேடு - அவரவர்க்கு
விதிக்கு முறைமையெல்லா நாடு - பட்டணமெங்குந்
துதிக்கு நகர்சோதனை போடு - உயிர்கள்மேலே
மதிக்குந்தய வையேகொண் டாடு - கருவங்கொண்டு
மிதப்பா யிராம லன்றன் ரூடு - விசாரணைசெய்
தெதற்கும் வயணஞ்சொல்ல நீடு - கீர்த்தி மிகுந்து
பதிக்கும்பதி யாயிரு பரவிஞ் ஞான வேடு. (மகனே)

## நிருகராசன், சாபமேற்றுக் கரட்டோணுதல் ; இராமபிரான் இலக்குவனுக்கு நிமியரசன் கதை கூறத் தொடங்கல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

தமிதயம் பொருந்துமகன் வசுவுக் கேற்கத்
தானிதெல்லாஞ் சொல்லிப்பின்பு சாபந் தாங்கிக்
கமிருடைசோ லைப்பாலாங் குழியிற் சென்றே
கரட்டோணு னுகினனே நிருக னென்றே
நமிராம னிளையவர்க்கிவ் வகைபு கன்றே
நாடியும்பின் னுச்சரிய பூத மான
நிமியென்னுஞ் சக்ரவர்த்தி கதையுஞ் சொல்லி
நெரிக்கின்ற னென்றுயரை யரிக்கின் றனே.

நிமிராசன் வரலாறு

காம்போதி ராகம்] தரு [...........தாளம்

கண்ணிகள்

1. சமத்தனே தம்பி யிலக்குமனே யந்த - ராச
நிமிச்சக்கர வர்த்திகதையை கேளுநீ முந்த.

2. நமஸ்காரப் பிரியன் சூரியன் பிள்ளை யாகு - மநு
தமக்குமே வரபுத்திர னேயிட்சு வாகு.

3. இட்சுவா குக்குப்பனி ரண்டாவது பால - னுலக
ரட்சகர்த் தாவுக்கு ஒப்புமைசொன் னர பாலன்.

4. மன்னர் சிரோமணி புண்ணிய புகழ்வில் வீர - னிமி
யென்னும் பெயரை யுடையவன் மிக்க வுதாரன்.

5. நிலத்தையே யொருகுடைக்கு ளாண்டவன் செங்கோ - [லினைச்
செலுத்து வானையா வதிட்ட மொருவர் பங்கோ.

6. அந்த ராசரிஷி முந்தக் கௌதம யோகி - யவர்
சொந்த விடத்திலொரு பட்டணஞ் சிறப்பாகி;

7. வைசயந்த மென்றபெய ரிட்டகதை யுண்டு - பண்ண
மெய்சிறந்து மிருந்தங் கேளே மனங் கொண்டு ;

8. பார்க்கர குலதீப னங்கதை நண்ணி - நல்ல
தீர்க்க சத்திரயாகஞ் செய்வதை யெண்ணி ;

9\. அத்திரி யோடுமங் கிரசரும் பிருகு - பரி
சுத்தமுள்ள வதிட்டர் மெய்ஞ்ஞானம் பெருகு ;

10\. வேதியரிவர் நால்வர் களையும் வரித்தா - ரங்கே
மாதபோதனர் வதிட்ட ரோருரை விரித்தார்.

11\. தேவராச னேரியாகஞ் செய்வதற் காக - யென்னை
வாவென வரித்தானே முன்னளவ தாக;

12\. அந்த விந்திர னியாகஞ் செய்விக்க வேணும் - பின்பு
வந்தும் யாகத்தை நிறை வேற்றிவைப்பேன் காணும் ;

13\. இப்படிச் சொல்லி வதிட்ட னிந்திரன் யாக - சாலைக்
கப்படிச் சென்று செய்வித் தாரியல் பாக.

(சமத்தனே - தம்பி யிலக்குமணனே - அந்த
நிமிச்சக்கர வர்த்தி கதையைக் கேளுநீ முந்த.)

## யாகம் நிறைவேறுதற்காக நிமிச்சக்ரவர்த்தி, கௌதமமுனிவன் ஆச்சிரமம் செல்லல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

குவலயமெல் லாந்தனதா கும்வெண் கொற்றக்
குடையின்கீ ழாண்டநிமிச் சக்ர வர்த்திக்
கிவகைசொல்லி வதிட்டரம ராப திக்கே
யேகினர் கண்டுபின்னு மிதய மீது
கவலைகொண்டு யாகநிறை வேறச்செய் வான்
கௌதமனாச் சிரமஞ்சென் றங்கந் தன்மேற்
றவநிதியாங் கவனுடைப்பா தார விந்தந்
தரிக்கின்று னவரையங்கே வரிக்கின் றனே.

## கௌதமரிடம் நிமி கூறல்

புன்னுகவராளி ராகம்] [சாபு தாளம்

1\. பூசுர முனிவ சிகாமணி கௌதமா
புண்ணிய வேத சீலா
தாசனென் மீது கடாட்சஞ் செய்யுஞ்
சரணமெய்ஞ் ஞான லோலா.

2. பார்க்குள் ளபர சூரியனே - ஒருவிண்ணப்
பந்தான் செய்யுறேன் கேளும்
தீர்க்க சத்திரயாகஞ் செய்து வைப்பீரென்று
தேடி வந்தேனென்னை யாளும்.

3. பேரா முலகில் மானிட னுகப்
பிறப்பது மெத்த வரிதே
நேருங் குருடுகூன் ஊமை செவிடுபேடு
நீக்கிப் பிறப்பது மரிதே.

4. ஏதேனு மொரு வித்தை பூரணமா
யிசைந்து படிப்பது மரிதே
ஈதி லதிகமாம் வேதாந்த நன்னூலை
யேற்றே படிப்பது மரிதே.

5. இப்போ சொன்னதெல்லாங் கிடைத்தாலும் நெஞ்சி
லிரக்கம் வருவ தரிதே
அப்பாலுந் தருமதானம் பாத்தி ரங்களை
அறிந்தே கொடுப்பது மரிதே.

6. கொடுத்தாலு மிகபர லோக சுகத்தைக்
கோராத மெய்ஞ்ஞான மரிதே
அடுத்தே யிதுவெல்லாங் கிடைத்தாலு முமைப்போ
லாசான் கிடைப்பது மரிதே.

7. உத்திந்தப் படிவேதஞ் சொல்லுதென் றேபெரியோர்
சொல்லு வதுமுண்மை தானே
எத்தனை பிறவியின் றவப்பல னோவெனக்
கிந்த நினைவையுங் கண்டேனே.

8. செல்வ மிளமை யாக்கை நிலையாமை
தெளிந்தே னேயென தையா
அல்வரு மோபகல் வருமோ நமன்தூது
மறியே னேகன துய்யா.

9. பிடரியி லிருந்தே நகைப்பா னெமனென்று
பெரியோர்நா ளையென்று சொல்லாரே
கடலி லெழுமலை யாமெனுந் தேகத்தைக்
கருதா ரேயுரம் வல்லாரே.

10. காத்துள்ள போதுநெல்லைத் தூத்திக்கொள் ளுவதல்லோ
காரிய் மெனும்வழக்கம் போலே
பார்த்துத் தீர்க்கசத்திர யாகஞ்செய் வியும்வந்து
பாரு மருட்கண்ணை யென்மேலே.

### நிமிராசன் கௌதமமுனிவரைக்கொண்டு யாகம் நடத்துதல் கண்டு, வசிட்டர் கோபித்துச் சபித்தல்

**எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்**

ஊணியிது சொல்லக்கௌ தமமு னியுந்தா
னுடன்வந்தே யிமயமலை யருகில் யாகங்
கோணமற் றொடங்கிநடத் திவர வோர்நாள்
கொண்டுவதிட் டரும்வந்து கோபங் கொண்டு
தாணுவாஞ் சரீரம்விட்டு வாயு வாகச்
சலிக்கவென்றே மன்னனையுஞ் சபிக்கக் கேட்டுக்
காணமற் சபிப்பதுவே நீதி யென்று
கனிந்திட்டான் நிமிராசன் முனிந்திட் டானே.

### நிமிராசனும் கோபித்து வசிட்டரைச் சபித்தல்

**இதுவுமது**

உறுதிகொண்டை யாயிரமாம் வருட தீட்சை
யோங்கியதீர்க்க சத்திரயாக மங்குத் தானே
முறைகௌதம முனியினல் நடத்தல் கண்டு
முனிந்துவதிட் டரையுமங்கே சரீரம் விட்டு
மறைகாற்றுப் போலவே யலைய வென்று
ரவருமந்தப் படியானு ரறிநீ தம்பி
பொறுமையென்ப தருமையது விருந்தால் நல்ல
புத்திதான் பெரியோர்கள் சத்தி தானே.

### பொறுமைக் குணத்தின் சிறப்பை இராமன் இலக்குவனுக்கு எடுத்துக் கூறல்

**கல்யாணி ராகம்]** **[ஆதி தாளம்**

**பல்லவி**

பொறுமைக் கிணையான தெனினுண்டு - புண்ணியம் தன்னிலே
புதுமையல்லோ சுமித்திரை பெற்றருள் - புத்திரா -
[தம்பியே - மித்திரா.

அநுபல்லவி

பிறக்குங் கோபமே பாவஞ் சண்டாளமாம் - முன்
னிட்டுமத் தையாறு வாதங் கீர்த்தி
கிறக்கவே தான்வளரச் செய்வா ரடா
நித்த மெனது பிரிய முள்ளவனே (பொறுமை

சரணங்கள்

1. தானே கெடும்போது - பிறருக்குக் கேடு
தானெண்ண லாகாது - தன்னுடம்பினின்
ஊனே கெடவேபசி வந்தபோது
முண்ணு திடத்துண்ண லாமோ வுலக மெல்லாம்
தானே பெருகினும் நேரிட்டுச் சொல்
வோனே மகாபாவி மானிட னல்லவோ
ஈனமிகுங் கோவவா னென்பதொன்று மில்லாத
வல்லாமை நல்லோர்க ளுல்லாச னே (பொறுமை)

2. இன்னுஞ் சொல்வேன் பட்சிகளுக் குள்ளே - காக
மென்னு மிருகத்துக் குள்ளே - கழுதையே
என்னு மனிதர்களுக் குள்ளே - கோபி
யிங்கிவர் சண்டாள ரென்ப ரிலக்குமனே
என்ன தவம்வித்தை யென்ன சவுரியம்
என்ன ஜீவிரக்க மென்ன விருந்தாலுஞ்
சொன்னேன் முருக்கம்பூத் தன்னி னினையத்
துடுக்காக் கடுக்கு மெடுத்துத் தொடுப்பதோ
(பொறுமை)

3. கல்லாத மூடர் சடரு லுத்தர்கள்
கசடர் காமக் கள்ளரி வர்கட்குப்
பொல்லாத கோபஞ் சுவர்க்கம தாகும்
புண்ணிய வான்களுக் காமோ பொறுத்திடுவார்
நல்லோ ரெனவெங்குஞ் சொல்லாக வேசெய்வர்
அல்லாது வேறுண்டோ சொல்லடா - சச்சிதா
னந்த மனந்த னினைந்து தினந்துதி. (பொறுமை)

### நிமியரசனும் வசிட்டரும் காற்ருக மாறி அலைதல்; வசிட்டர் வேறு சரீரம் தருமாறு பிரமனை வேண்டல்; வருணனுல் கிடைக்குமெனப் பிரமன் கூறல்; வருணன் ஊர்வசியைச் சேர எண்ணல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

*இருவர்களுங் காற்ருக வலையு நாளி*
*லேகிவதிட் டனும்பிரம னிடத்திற் சொல்லித்*
*தரவையா மற்ருெரு சரீர மென்னத்*
*தக்கமித்தி ராவருணன் விந்துச் சார்வால்*
*வருமெனவங் கவனுகில் சென்ரு னந்த*
*வருணனுரு வசியவளை வரவுங் கண்டு*
*மருவவுன்மே லாசைகொண்டே னடிநா னென்று*
*மதங்கொண்டான் மன்மதச்சன் னதங்கொண் டானே.*

### வருணன் ஊர்வசியை வேண்டல்

காம்போதி ராகம்] [ரூபக தாளம்

பல்லவி

*உருவசி யெனை மருவி யாளடி*
*யுபரதிக் கிதுநல்ல நாளடி.*

அநுபல்லவி

*கருவி மிகவே மாதமன் கடுக்கின்ருன்*
*அடுக்கின்ருன் முடுக்கின்ருன்*
*உறவாய்க் கூடிவி ளையாட லுக்கு*
*மொரு வார்த்தை சொல்லி* (உருவசி)

சரணங்கள்

1. *மனத்தி லீர மெவ்வளவு மில்லை*
*யோடி - சொல்மானே*
*கனத்திலே உனதிரு கும்பத்*
*தனத்திலே கலந்தா லிங்கனம்*
*நினைத்து நினைத்து நெஞ்ச மையலே*
*நீடுதே - நாடுதே - தேடுதே*
*அனத்தினு மென்னடை யாளுநீ நின்னை*
*யாரடி - பாரடி - சேரடி* (உருவசி)

2. தொடைக்கிணை வாழையைச் சொல்லவுங்
கூடுமடி - நல் லமுதேயுன்
னிபத்திலே - யரையி னரவப்
படத்திலே - எழில்பெற விரல்
விடுத்துநான் கரிகரஞ் செய்தமிகு
மிளிக்கவே - களிக்கவே - துளிக்கவே
தொடுத்திட மன்மத லாகிரிக்கே வகை
சொல்லடி - புல்லடி - நில்லடி (உருவசி)

3. சமஸர லீலைக்குத் தருணமிதடி - உன்
செங்கனி வாயங்
குமுதந்தர - வதர மூறிய
வமுதந்தர - கொண்ட விரதங்
குமரிப் பெண்கிளி கூடி யிருந்து
கொஞ்சடி - மஞ்சடி - நெஞ்சடி
நிமிஷம தாகிலுந் தாங்காதென் சொல்லுவே
னிம்மதி - யுன்மதி - சம்மதி. (உருவசி)

## உருவசி வருணனுடன் சேர மறுத்தல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

காமரச மஞ்சரியா முருவ சிக்கே
காதலிதை மித்திரா வருணன் கூடி
நீமருவ வொண்ணாது வென்னை முன்னே
நிலவரமாய் மித்திரனன் னும தேவ
னுமெனையே கோரினு னென்ருள் தன்னை
யடங்காத வெறியாலே பார்த்துப் பார்த்துச்
சோமமுகி தனையெணியோர்கள்[?]சொர்ன கும்பந்
தொட்டிட்டான் விந்துவதில் விட்டிட் டானே.

புன்னுகவராளி ராகம்] தரு [ஆதி தாளம்

1. கண்மணியே யிலக்குமனே கருத்தினிலே நம்பி - யிந்தக்
கருத்தைக் கேளடா எனது கற்பகமே
பெண்மணியா முருவசிபாற் பெரியமையல் கொண்டு - அவன்
பேசினதை யுருவசியாம் பெண்ணரசி கண்டு ;

2. அப்படிக்கே யெந்தன்மன தாசையும திடத்தி - லாகு
மதையெண்ணிக் கொண்டிந்திரியந் தனைவிடுங் கடத்தில்
ஒப்புக்கொண்டான் மித்திரனு முவந்து மெந்தன்தேகம் - [என்று
உருவசியுஞ் சென்றனளே யுயர்ந்ததெய்வ லோகம்.

3. இருடிமூலம் நதிமூலம் இரண்டும் விசாரிக்க லாகா
தென்றுசொல்லும் வழக்கமடா யின்னுஞ்சொல்வேன்-மிக்க
இருடிகர்ப்ப மிராத்தங்காது என்பதல்லோ பேச்சு - வருணன்
ஏமகும்பந் தனிலிந்திரிய மிசைந்துவிட லாச்சு.

4. அந்தக்கும்பந் தனிலுண்டான அகத்தியரு முன்னே-இன்னு
மதனிலுரு வாகிவந்தா ரையா வதிட்டர் பின்னே
வந்தவதிட்டர் தனையுமிட்சு வாகுமக ராச - னுந்தன்
மரபுக்கேற்ற குருவாக வரித்தனன்பிர காசன்.

5. வைசயந்த பட்டணமதனில் மன்ன நிமியின் தேக - மதை
வைத்துக்கொண் டையாயிரமாம் வருஷஞ்சத்திர யாகம்
நெய்சொரிந்து கவுதமமுனி யைமுதலோர் தொடுத்தார் - வேத
நெறிப்படியே தேவர்கட்கு நிறையவிர்ப்பாகங் கொடுத்தார்.

6. வானவர்கள் யாவர்களும் மனமகிழ்ந்தே வந்தார் - நிமி
மன்னுயிருஞ் சகலநேமியில் வாழவேவரந் தந்தார்
ஆனகங்கள் முழக்கியந்த அமரர்சென்றார் மேலே - இங்கே
அருந்தவமா முனிசனங்கள் ஆலோசனை யாலே ;

7. அன்புறு வசந்தநகர்க் கரசனையுண் டாக்க - புவி
யதனிலெங்கும் புகழ்செலுத்தி யாண்டவனே காக்க
தென்புமிகு நிமியுடலே திவ்விடந்தபோ வனமா - மிந்த
தேகந்தன்னைக் கடைந்ததனுல் சனிக்குமதே சனமாம்.

8. என்றுமுனி வோர்களெல்லா மிசைந்துமந்த்ர ஓமம் - நன்று
யேற்றமுடன் செயதனர்க ளென்னசொல்வேன் நேமம்
வென்றிமிகு மவனுடலை வேதமுனி வோர்கள் - நல்
விதிமுறையே அரணிகொண்டு வியந்துகடைந் தார்கள்.

9. அரணிகடைந் ததிலிருந்து அதிகத வோவிம்ப - மிசை
அருமையான புருடர் வந்தத்தையென் விளம்ப
தரணியில் வெகுபுதுமை தழைக்குமுயர் கீர்த்தி - மிகு
தயையுள்ளவர் பொறுமைமிகுஞ் சனகரெனு மூர்த்தி.

10. மதனம்பண்ணி வந்ததனல் வருமொருபேர் மிதியாம் - தேத
மண்டலத்தில் சொன்னத்தினுல் வாய்த்த சனக நிதியாம்
உதித்ததும் விதேசத்தினுல் உயர்ந்தவிதே கனுமாம் -பெய
ருரிமையடா மூன்றவர்க்கு உண்மைவிவே கனுமாம்.

11. மிதுபுராத நகரமடா மிதிலையென்றுஞ் செழிக்கும் -
[செம்பொன்
விளையுமடா நவநிதிகள் வேணவெல்லாங் கொழிக்கும்.

அதிபதியாஞ் சனகரெனு மரசன்வந்த வாறு
அற்புத நிமிமகிமை யறிந்துசொன்னேன் தேறு.
(கண்மணியே)

## இராமபிரான் யயாதி வரலாறு கூறத்தொடங்கல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

வாளிகொண்டே யெய்தரக்கர் தலைகள் கூறி
வரிசையுணச் செய்தவன்பால் நிமியின் சேதி
வேளையா னிலக்குமன்கேட் டதிச யித்தான்
வேந்தனுக்கே விருடியிடஞ் சற்று மந்த
வேளைதனில் பொறுமையிலை யெனக்கோ தண்ட
வீரனுரைப் பான்பொறுமை யரிதே கேண்மூன்
னாளிலொரு விசித்திரமுண் டின்னு மென்றே
நலஞ்சொல்வான் யயாதிபிர பலஞ்சொல் வானே.

## யயாதி வரலாறு

**கல்யாணி ராகம்]** **[ஆதி தாளம்**

### பல்லவி

தம்பி யிலக்குமனே மனங்கொண் டிதைக் - கேளடா
என் பிரிய முள்ள.

### அநுபல்லவி

அம்புவி மீதினில் கோபமில் லாதவ
ராயிரத்தி லொரு நியாயமா ருண்டடா
உம்பர் புகழும் யயாதி மகா ராச
ருத்தம னென்றோர்பிர சித்தன் கதை கேளு (தம்பி)

சரணங்கள்

1. மண்டல மீதில (ங்குழ)[நகுஷ] னென்றோர்நர பாலனு -
 மைந்தன் யயாதி மகாராச னேகுண சீலனும் [மவன்
எண்டிசை மெச்சும் பிரதாபன் மநுநெறி நூலனும் - நல்ல
 ஈவிரக் கந்தந்து யேழையற் கேயநு கூலனும்
பண்டேசுர குலத்தின் வழிவந்து
 பாங்காம் விருட பர்வனென்பான் தந்து
கொண்ட மனைவிசர் மிஷ்டையு மிருந்து
 கூடி யிருந்தவகை யின்னு முகந்து (தம்பி)

2. சுக்கிரனுக்குப் பிறந்தபெண்ணுள் தேவ யானியா - மந்தத்
 தோகையைக் கூடமணம் புணர்ந்தானே நிதானியாம்
பக்க மிருவரில் சர்மிஷ்டை மேலபி மானியாம் - அந்தப்
 பைந்தொடி பெற்றவன் பூருவென் பான்மிக ஞானியா
மிக்குவ லயத்தில் தேவ யானி பெற்ற
 யெதுவென் பானொரு சேயனடா - சுத்த
மிக்க யயாதிக் கிரண்டு தாரம் வைத்த
 விதியை யின்னமுஞ் சொல்வே னடா வுற்ற (தம்பி)

3. பூருவெ னும்பிள்ளை சற்குண முளநல்வி வேகமும் - இந்தப்
 புதல்வனைப் பெற்ற சர்மிஷ்டை மேலதி மோகமுஞ்
சீருமு வனுடன் சேர்ந்திருக் கின்றவை போகமுங் - கண்டு
 தேவ யானிசுதன் யதுவுக் கேமனச் சோகமும்
நேரிட்டு நெஞ்சிலச்ச சித்தவ னுமல்ல
 நிட்டூரங் கொண்டுதன் றாயிடஞ் சொல்லப்
பேரிட் டெனைவளர்த் தாயேநா னென்சொல்லப்
 பேச்சொன்று கேளென்று தொடுத்தானே நல்ல.
 (தம்பி)

**யது, தன் தாய் தேவயானியிடம் முறையிடல், தாய் சுக்கிரனை நினைத்தல், சுக்கிரன் எதிர்ப்படல்**

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

தேவகுலந் தனில்வருநீ சிறுமை கண்டாய்
 சிறியேனு முன்வயிற்றைத் தேடி வந்தேன்
பாவமிது விருவோருந் தழலிற் பாய்வோம்
 படாதென்றால் நீயிருநான் விழுவே னென்ற

ஆவியொக்கு மகன்யதுவின் மொழியைக் கேட்டா
னையனெனுஞ் சுக்கிரனை நினைக்க வந்தான்
தேவயானி யுந்தகப்பன் முன்னே நின்று
சினஞ்செய்வா ளிதுசொலிவி தனஞ்செய் வாளே.

**ஆனந்தபைரவி ராகம்]** **[ஆதி தாளம்**

பல்லவி

ஐயா நான் பெண்பிறந்தது மிங்கே
அநுபவித்ததைச் சொல்ல ஆராதே.

அநுபல்லவி

மெய்யாகி யிசைந்து தெய்வ குலத்தில் வந்து
மேலாக வேசிறந்த நாலாக லெதெரிந்த (ஐயா)

சரணங்கள்

1. அருமையாக வளர்த்து எடுத்தீரே - என்னை
ஆட்சி மன்னவனுக்குக் கொடுத்தீரே
பரிபவ மிதுபார்க்கத் தொடுத்தீரே - நல்ல
பாம்புவாய்க் கெலிபோலே விடுத்தீரே - என் (ஐயா)

2. வீசுந்தழலில் மெய்யை விடலாமோ - அல்லால்
விடபட்ச ணங்களையுண் டிடலாமோ - இந்த
வாசியாம் புனலில்விழுந் திடலாமோ - இந்த
மாறாத துன்பநீச்சுக் கடலாமோ - யென் (ஐயா)

3. பானைதன்னைப் பாராமல் போனாலு - நல்ல
பாலைப்பா ராரோளங்கே யானாலும்
வானவ ரானஉம்மைத் தான்மேலு - மெண்ணி
மரியாதைக ளில்லையோ ஒருக்காலும் - என். (ஐயா)

**சுக்கிரன் யயாதியைக் கிழவுரு அடையுமாறு சபித்தல்**

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

திடமுடனிப் படிச்சொன்னாள் மேல்நடந்த
சேதியெல்லா மிலக்குமனே தெரியக் கேளாய்
மடமயிலா கியதேவ யானி நெஞ்சு
வாடியுரைத் திடும்வகைக ளனைத்துங் கேட்டுப்

படபடத்துச் சுக்கிரனு மிந்த ராசன்
பருவவிள மையைநீங்கி மிகத்த ளர்ந்து
சடலமதிற் கிழத்தனத்தை யடைவா னென்று
சபித்திட்டான் யயாதியிது லபித்திட் டானே.

புன்னாகவராளி ராகம்] [சாபு தாளம்

பல்லவி

அருமைத் தம்பி யிலக்குமா - யயாதியின்
பெருமைக் கெவரு மொக்குமா - அ....ல்லாம்.

அநுபல்லவி

ஒருமையுடன் சொல்வதே யுயர்நல்ல நாளடா
தரும புருஷனிவன் தானின்னுங் கேளடா (அருமை)

சரணங்கள்

1. சுக்கிரன் மிககோபங் தனிரை
உக்கிர முள்ள சாப மதனாலே
மிக்கதிரை திரைந்து மேனி தளர்ந்து வாடி........ர்க்கு
.........திறம்போலவே கொடிய நரைகள் நாடி
கிழத்தனம் வரலாலே - யயாதியு
முழித்தன னென்செய வினிமேலே (அருமை)

2. இதுவென வழிவழியே போகச்சே
விதிவந்து சூழ்ந்து பழிகளை தோரு.......
பருவமுந் தாழ்ந்தது
தாழ்விதை நீக்கிடவே - நரை திரை
சூழ்விதை போக்கிடவே........யெண்ணி
வாழ்வு பெருகுமாம் வாஞ்சையே தழைத்தானே
கேள்வியுட னெதுவைக் கிருபையா யழைத்தானே
(அருமை)

3. வந்த யெதுவைப் பார்த்து - மகனேயென்
சிந்தைத் துயரந் தீர்த்து - நான்கொண்ட
இந்த கிழத்தனத்தையே நீகொண் டிடுவாயே
உந்தன் இளமைதன்னை யுகந்துதந் திடுவாயே
(அருமை)

4. ஆசைதீர நானே....ன ராச போகம் தானே - தீர்ந்தபின்
தேகசுள்ள விளமையுன் தேகத்துக் களிக்கிறேன்
கூசி வைத்தி.......தைக் கொண்டுநான் களிக்கிறேன்
சொல்லென்ற தந்தை முன்னே - யெதுவெகு
கல்லிகள் பேசின.......திக்க
வெல்லந் தின்பதொருத்தன் விரல்சூப்புவ தொருத்தன்
நல்ல நியாயமி தையா.......விதுக்குக்கறன்(?) (அருமை)

5. இணக்கமாக வருதினம் உம்முட னமரம்பு
மணக்கவே சுகபோசன.......வான
குணத்துடன் பூருவுக்குக் கொடுப்பது நீரங்கு
கணக்கோ கிழத்தனத்தைக் காண்பது - யென்பங்கு
(அருமை)

6. என்ற யெதுவை நோக்கி யயாதிமுன்
நின்ற பூருவை நோக்கி குமாரனே
இன்றுன்சம் மதியென்ன யெனக்கறிய விள்ளடா
ஒன்றுங் கிழத்தனத்தை யுகந்துவாங்கிக் கொள்ளடா
(அருமை)

7. என வவன் கூறிடவே - பூருவின்
மனமது தேறிடவே - பணிந்துடல்
புனித மாகினேன் முன்செய்புண் ணியமிது
இனிவேறுண்டோ யென்னையா யிதனிலும் பெரியது
(அருமை)

8. வாய்த்ததுன் கிருபை தானே - அதனுல் நான்
பாத்திர னுகினேனே இது மாத்திரமல்ல - இன்னுமலே
போலேளது வந்தாலுங் காத்திருக்கிறேன் - உந்தன்
கருத்தின் படியே மேலும்
காலாலே காட்டுவதே - என்தலே
மேலாகச் சூட்டுவதே - கரும்பு தின்னக்
கூலியோ அப்படிக்கே கொண்டே னுமதிடத்தே
வாலேப் பருவந் தந்தேன் மாற்றுக்கி ழத்தனத்தைத்
தாருமென் றவன்கூற - ராசனும்
பூரிப்ப துவும்மீற - கிழத்தனம்
பூருவிட முற்ற போதே வாலிப மாகிச்
சேரவே மனமகிழ்ந் திருந்தா னதிவிவேகி. (அருமை)

## யயாதி இளமை யடைந்து பலகாலம் பூமியை ஆட்சி புரிதல் மீண்டும் கிழத்தனமடைந்து பூருவிடம் இளமையை யளித்தல்; யதுவை யழைத்துக் கோபித்தல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

*அகமகிழ்ந்தவ் வரசனுமே பூமி தன்னை*
*யநேகமா யிரம்வருடஞ் செலுத்தி யாண்டு*
*மகங்களுமோ ராயிரஞ்செய் திருந்தான் பின்னு*
*மனோபீஷ்ட முள்ளவெல்லாஞ் சுகித்துத் தீர்ந்து*
*மகனான பூருகொண்ட கிழத்த னத்தை*
*வாங்கியிள மையையீந்து மனத்தி னாலே*
*மிகவெகுண்டே யெதுதனையழைத் தேய யாதி*
*வீரந்தான் சொல்லிநிட் டூரந் தானே.*

## யயாதி யதுவிடங் கூறல்: தொடர்ச்சி

கல்யாணிராகம்] [ஆதி தாளம்

பல்லவி

*பெற்றபிள்ளை நீயென் னுற்றவார்த்தை தட்டிப்*
*பேசலா மோ யெதுவே.*

அநுபல்லவி

*சத்திய ரூபங்........த்தி ராட்சத னிந்தி*
*டத்திற் பிறந்தவுன் கருத்துத் தெரிந்து நான்* (பெற்ற)

சரணங்கள்

1. *தகப்பன்சொல் மறுத்த பிள்ளைக் - கேது மகிமை*
*செகத்திலுண்டோ வென்ன கொள்ளை - நல்ல பாதையை*
*அகத்தில் போட்டுக் கொண்டாய் முள்ளை-யிதென்ன சள்ளை*
*மிகுத்த ராட்சதர் செய்கை தொகுத்தென்முன்*
*........ய் தாயே*
*அகந்தை யுள்ள வரக்கர்ச் சரித்திரம் பெறுவாயே* (பெற்ற)

2. *ராச யோக்கிய வைபோகமாகிய - சிங்*
*காசனத்துக்கு நீ யாக - மாட்டாய் நீ யிந்தத்*
*தேச மன்னர்க்குக் கீழாக - யிருந்தநேக*
*மோச........ற்கான தோசிக ளுடனும்*
*பேசிக்கொண்டு பாரில் வாசஞ்செய் வாயடா-நான்* (பெற்ற)

3. சுந்திர வங்கிசத்துக்கே நீஆகுவ துண்டோ
எந்தன் றன்னையவ மானித்த வுன்னோடு •
பந்தி போசனஞ் செய்யே னிப்போதே போடாநீ
தந்தை நெஞ்சு நோக வந்து பிறந்தவனே
இந்தப் படியேநீ பலன்தா னநுபவிப்பாய். (பெற்ற)

## யயாதி பூருவுக்கு முடிசூட்டல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

அவமானஞ் செய்தயது தனக்கிச் சாப
மளித்தபின்பு பூருதனை யழைத்தே மெத்த
உவந்துதா னெனக்குழப் புக்கொ டுத்த
உத்தமனென் றேமகிழ்ந்து மகுடஞ் சூட்டி
பவபந்தம் விட்டொழிந்து யயாதி யென்னும்
பார்த்திபனு முயர்வானப் பிரத்த னுகி
தவஞ்செய்து சொர்க்கத்தை யடைந்தான் கண்டாய்
தம்பிநீ திகளையறி நம்பி நீயே.

சகாணு ராகம்] [ஆதி தாளம்

## யயாதியின் புதல்வர்களது வரலாறு

### பல்லவி

சொல்லக் கேளாய் தம்பி லட்சுமணு - என்
துணையே கண் ணிணையே.

### அநுபல்லவி

நல்லோ னென்னும் யயாதி
ராசன் புத்திரர்கள் நீதி (சொல்லக்)

### சரணங்கள்

1. வருகாசி தேசமீதோர் மேரு - போலே
பிரதிட்டான புரத்தை யாண்டானே பூரு (சொல்லக்)

2. கிரவுஞ்ச துர்க்க மேலே ஓரா
யிரமரக்கரைப் பெற்று னெதுவுமப் பாலே (சொல்லக்)

3. கொள்ளு மகுடச் செங்கோல் நீதி யெல்லாந்
தள்ளுண்டவனு யிருந்தா னெது சேதி (சொல்லக்)

4. சுக்கிரன் மேலேபின்னும் யயாதி - ஒரு
உக்கிரம் பண்ணுததனு லுத்தமன் பிரக்கியாதி
(சொல்லக்)

5. முன்னே நிருகன்கதை கொண்டு - அதன்
பின்னே நிமிகதையுஞ் சொன்னேனே கண்டு.
(சொல்லக்)

## ஸ்ரீராமன் யமுனுதீர வாசிகளான முனிவர் வரவுகேட்டு அவர்களை வரவேற்கச் செய்தல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

நிறைந்திந்தப் படிக்கதைகள் மூன்றுஞ் சொல்லி
னேனந்த நிருகன்மேல் தோட மில்லைப்
பொருந்திமநு நீதியா லிராச்சி யத்தைப்
புரப்பதுவே தருமமென்று புகன்றி ராமன்
திருந்திமறு நாள்யமுனு தீர வாசஞ்
செயுமவர்கள் வரவுகேட் டழைக்கச் சொல்லப்
பரஞ்சோதி மயராமப் பிரமா னந்தம்
பருகுவார் மாமுனிவர் வருகு வாரே.

## முனிவர்கள் வருகை : தொடர்ச்சி

பூரிகல்யாணி ராகம்] [ஆதி தாளம்

### பல்லவி

யமுனு தீர வாசிகள் வந்தார் - ஸ்ரீராகவன்முன்
யமுனுதீர வாசிகள் வந்தார்.

### அநுபல்லவி

சாமவேதமு மாகம ரூபமு மாயந்த வசுமிகு (யமுனு)

### சரணங்கள்

1. பார்க்கவ சவுனரை முன்னிட்டுக் கொண்டு
சாத்திரங்க ளெல்லாமு மேகரைகள் கண்டு
பரிவாகிய நாமசங் கீர்த்த னங்கள்
செய்வோர்கள் கையிலே யோக தண்டு - உள்

போத மெய்ஞ் ஞானிகள் வாய்த்த
பிரம்மா நிட்டானந்த மாமது வுண்டு - வெகு
அருமைய தாகிய தீர்த்த கோடி நிறை
பூரண கும்பங் கொண்டு - கந்த மூலங்கள்
ஏற்றகனி வகைகள் சேர்த்திபுட னெடுத்துப்
பார்த்தி வேந்திரன் முன்னே நூற்றுக் கதிக மான
(யமுனை)

2. தேசினுல் பர சூரியர்க ளிவராமே
விடையாதிகள் மேல் - மன
மாசியாய்த் திரிகால ஞானமது தாமே
அறிவார் புரிநூலணி
பூசுரர் தரிச னுதி யாலே - உயர்
பூமேலுறை மானிடர் தீவினை-வி
மோசனம் பெறுவரா மெனவே - சொல
மா-மேன்மை சிறந்து
கோசல தசரத ராச தனயனை - உல்
லாச ராமனை விசு வாசமுட னேகாண (யமுனை)

3. தெலிவியான விதரணிகர் வாசலதை நாடி-கவிவாணர்கள்
கலிகளோடே வெண்ணி மதுரமான கவிபாடி - வரு
[வது போல
இலவணசுர னுபாதி தீரும்வகை தேடி-குளிர்ந்திடுஞ்செஞ்
சலச லோசன விராம னென்று கொண்டாடிக்
[கொண்டு விளங்கு
மலரின்மே லயனை நலமதா யுவமை
சொலவுமே சுருதி மலைக ளாகிவரு. (யமுனை)

## முனிவர்களைத் தக்கவண்ணம் இராமபிரான் உபசரித்து, வந்த காரியம் பற்றி வினவுதல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

விண்ணிலெழுஞ் சூரியர்போல் யமுனை தீர
மேவுமுனி வோர்களெல்லாம் ராமன் முன்னே
நண்ணியே பூர்ணகும்பங் கந்த மூல
நல்லபலங் களையெல்லாம் நல்கிப் பின்னும்

அண்ணலிட்ட செம்பொன்னு சனத்தி ருந்தார்
அய்யனெழுந் தேவணங்கி யடியேன் முன்செய்
புண்ணியத்தின் பலனுங்கள் சேவை யென்றே
பூரிப்பான் காரியம்வி சாரிப் பானே.

### இராமன் கூற்று: தொடர்ச்சி

**சாவேரி ராகம்]** **[ஆதி தாளம்**

**பல்லவி**

வந்த காரியம் புண்ணிய ராசிகளே - நல்ல
வரத்தா லெழுநு தீர வாசிகளே.

**அநுபல்லவி**

எந்தாய் தகப்பன்முன் னுந்தான் செய்யுந்-த
வந்தா னிப்படி வந்தாப்போ லிங்கே (வந்த)

**சரணங்கள்**

1. உங்கள் பணிவிடையைத் தானே - மன
துவந்து செய்யும்வனு நானே
இங்கித மானதைச்செய் வேனே - சாதித்
தெதிலுமுன் னிற்கவேயஞ் சேனே
எங்கள் குலவிருது அந்தணர் பாதபத்தி
என்று மறவாமலே யிருப்பதிது வேவெற்றி
எங்குங்கொ டுப்பதிந்த வாசீர்வாத மேபுத்தி
இன்னதென் றுரைப்பநு மநுக்கிரகத் தின்சத்தி
(வந்த)

2. இந்தராச் சியத்தின்வை போகம் - எந்தன்
இதயப் பிராணனுடனே தேகம்
வந்தபொ ருள்களேய நேகம் - இது
வெல்லா மறையவர்க் கென்பதேசு வாகம்
சந்ததமும் பெரியோர் தங்களின் சரணார
விந்தரெ னுமகிமை யாலேயென் பரிவார
முந்தழைக் கவேபிர மானந்த மதுசேர
மூர்த்திகர மாகிய முனிவோரே கிருபைகூர (வந்த)

3. தருமசொரூபத்தின் தரிசனம் - விளங்கவே
 தானேசொல் வதுவேத வசனம்
ஒருமையா யதைப்பூசு ரசனம் - தெரிவிப்ப
 துண்மை யென்பது மெந்தன் பசனம்
குருதெய்வ மாகவுருக் கொண்டுபு வியின்மீது
 வருமிரு டிகளுங்கள் மனைபீட்ட மதுயாது
உரைசெய்தா லதைநிறை வேற்றுவே னிப்போது
 தரணியி லிதுவென்சொல் சத்தியமே தப்பாது. (வந்த)

## வந்த காரியத்தைப் பார்க்கவர் என்னும் முனிவர் இராமனிடம் கூறத் தொடங்குதல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

குளுமையாய் முகமலர்ந்தே யிப்ப டிக்கே
 கோசலேந் திரன்சொலவே யமுனு தீர
வளமைசேர் முனிகளெல்லாம் புகல்வார் மைந்தர்
 வந்தகா ரியமறிந்து சபதஞ் செய்வார்
தெளிவாகு முமக்குநிக ருண்டோ வென்றார்
 சயராமன் நீங்கள்வந்த வகையே தென்றான்
புளகங்கொண் டேபிரமா னந்தந் தானே
 பொங்குவான் பார்க்கவன்று டங்கு வானே.

### பார்க்கவர் கூற்று

காம்போதி ராகம்] [சாபு தாளம்

1. காம கோடி சுந்தர பூமி பதியே ராம பத்திரனே - சாருவ
 பூம சூரியகுல சோம சுகுண ராம பத்திரனே.

2. குவலயந் தனில்வந்து மவதரித்தும் ராம பத்திரனே - [எங்கள்
 தவசு நிலைநிறுத்திக் கவலை தவிர்க்கும் ராம பத்திரனே.

3. முன்னேகி ரேதாயு கந்தனி லையனே ராம பத்திரனே - [வெகு
 உன்னத பலசாலி யின்னுங் கேளும் ராம பத்திரனே.

4. கோலா வென்னு மசுரன் பாலன் மதுவாம் ராம பத்திரனே
[- இந்த
ஞாலந் தன்னி லேதர்ம சீல ஞகவே ராம பத்திரனே;

5. வேத வசனங்களி னீதி யறிவான் ராம பத்திரனே - நல்ல
சாது சனநடக்கும் பாதை தெரிவான் ராம பத்திரனே.

6. மறையோ ரிடத்திலன்பு நிறையு மதுவாம் ராம பத்திரனே -
[வெகு
உறுதியுள்ள மெய்ஞ்ஞானங் குறைவில் லாதவன் ராம -
[பத்திரனே.

7. தஞ்சமென் றடைந்தோரை யஞ்ச லென்பவன் ராம
[பத்திரனே - அவன்
நெஞ்சினி லிவிரக்க மிஞ்சி யிருப்பான் ராம பத்திரனே.

8. சகல வுயிர்கள் மேலே மிகவும் பரிவா னிராம பத்திரனே -
[நானும்
·பகவந் நாம மறவான் சுகிர்தவான் மதுராம பத்திரனே.

9. இந்த நடத்தைகண் டுகந்தார் தேவர்கள் ராம பத்திரனே -
[மாசு
னிந்த சேற்றில் பிறந்த செந்தாம ரைபோல் ராம
[பத்திரனே.

10. கருவேலங் காட்டிலே ஒருவிளாங் கனிராம பத்திரனே -
[போலே
நிருதர் குலத்தில்மது அருமை யாகினன் ராம பத்திரனே.

11. மதுவின் குணத்தி னுடைப் புதுமை யறிந்து ராம
[பத்திரனே - பசு
பதியுருத் திரதயா நிதியு மகிழ்ந்து ராம பத்திரனே.

12. தானவ னுக்குவெகு மான மாகவே ராம பத்திரனே - அவர்
தானேஉ யர்வாய்ப்பிற தானங் கொடுத்தார் ராம
[பத்திரனே.

13. சூலாயு தத்தில்நின்றோர் சூலங் கொடுத்தார் ராம
[பத்திரனே - பின்னு
நீல கண்ட சிவனும் மேலுஞ் சொல்லுவார் ராம பத்திரனே.

14. தரும சிந்தை யுள்ள புருஷ னென்று ராம பத்திரனே - [அந்த
அருமையி னால்தந்தோர் திரிசூல மென்று ராம பத்திரனே;

15. சுரர்களு டனேபூ சுரர்கள் மேலே ராம பத்திரனே - நல்ல
பிரியமது வேளது வரையி லிருக்கும் ராம பத்திரனே ;

16. அந்த மட்டு மிருக்கு மிந்தச் சூலம் ராம பத்திரனே - என்று
கந்து ருத்திரனும் பின்னுந் தயையுடன் ராம பத்திரனே ;

17. எதிராளி யின்மேல் சூல மிதனை யேவினால் ராம [பத்திரனே - அங்கே
வதைசெய்து பின்னு மதுவின் கையினில் ராம பத்திரனே;

18. வருமென் றிப்படி யரனுரை செய்வாரின்னும் ராம [பத்திரனே - தேவர்
பிரமர் சாதிபகை வருமே யாகில் ராம பத்திரனே ;

19. நல்ல தானசூல நில்லா தென்று ராம பத்திரனே - சிவன்
சொல்லவே மதுவுஞ் சொல்லு வானே ராம பத்திரனே.

### பார்க்கவர் மது சரித்திரங் கூறல் : தொடர்ச்சி

#### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

சுருதிநா யகதேவே தேவா விந்தச்
சூலமதென் வங்கிசத்துக் கெல்லா நிற்க
வருளென்றான் மதுவேகே ளுனது மைந்த
னுருவா னொருத்தன்வரை நிற்கு மென்றுந்
தரணிமே விச்சூலங் கைய தன்னில்
தரித்திருந்தா லுன்மகனைச் சகல பூதத்
தொருவரா லுஞ்சயிக்க வொண்ணா தென்று
ஊணினன் விடவரவைப் பூணி னனே.

### மதுவரக்கன் கும்பீநசியை மணம் புரிதல் ;
### இலவணாசுரன் தோற்றம்

#### இதுவுமது

மதுவென்னு மசுரனிந்த வகையாய்த் தானே
வரம்பெற்றுந் தன்னிடத்தே சேர்ந்து வீர
மிதிகமா யரக்கன்விசு வாவசு வுக்கு
முன்னலக்கும் பிறந்தகும்பீ நசியைத் தானே

சதிருடனே மணம்புரிந்தா னவனி டத்திற்
[றகுதியிலா] விரோதலவ ணன்றான் கங்கா
நதியினிலே முதலைவந்தாப் போலே வந்து
நாடுவான் அவகுணத்தைத் தேடு வானே.

## இலவணாசுரன் வரலாறு

சுருட்டி ராகம்] [ஏக தாளம்

### பல்லவி

திருத்தமா யிலவண சுரன்கதை கேளு - மையா
செந்தாம ரைக்கண் ணிராமனே யெங்களை யாளும்.

### அநுபல்லவி

வரத்தி னுதிக்கம் பெற்ற மதுவுக்கு
வந்து விடம்போல்பி றந்தவன் றானின்னும் (திருத்தமாய்)

### சரணங்கள்

1. துஷ்டத்த னந்தானே மட்டுப் படாதவன்
தோன்றினன் முதல் ஆணவ மீறியே
எட்டு வரிசையில் கட்டுப்ப டாதவி
தத்தில் சரீரம தத்துத் திரிகிறான் (திருத்தமாய்)

2. பெற்றத கப்பன்சொல் புத்தியைக் கேளாமல்
பேரான பாவத்தை நேரிட்டுச் செய்யும்-வி
தத்தைய றிந்தந்த வுத்தம னு-மது
தானே மனநொந்தான் மாநில மீதிலே (திருத்தமாய்)

3. தாய்க்கா காதபிள்ளை யூர்க்காகா தென்பது
தக்கவு லகவ ழக்கம தல்லவோ
ஆக்கினை மீறிய நாய்க்குணப் பிள்ளையி
னங்கையிற் சூலத்தை யுங்கொடுத் தான்மது
(திருத்தமாய்)

4. சூலங் கொடுத்தந்த நீலகண் டன்தானே
சொன்னவ ரங்களை யின்னதென் றுசொல்லி
பால னிலவண காலன்கை மேலுமப்
பன்மது வீந்தானே வர்மமின் னுஞ் சொல்வேனே
(திருத்தமாய்)

5. தந்தை மதுஅவ்வி டந்தப்பி யேவிவ்வி
 தத்தில ருணுல யத்தைய டைந்தானே.
அந்தப்ப டிசூல மிந்தப்பொல் லாதவன்
 ஆதிக்க மேகொண்டு வாதிக்கி றானையா (திருத்தமாய்)

6. தானொரு மூவுல கானதிற் றீயவன்
 தாயதற் கேவெகு வாபத்தைச் செய்கிறான்
ஏனினிச் சொல்வது மாநில மீதிலே
 யாகங்கள் மேலவிர்ப் பாகங்க ளில்லையே (திருத்தமாய்)

7. வேத விதிகளை யோதவொட் டாமலே
 விக்கின காரியாந் துக்கிரி செய்யு-மு
பாதியா லேவெகு பீதிய டைந்திந்தப்
 பாடுபட் டோமிங்கே யோடிவந் தோமையா.
 (திருத்தமாய்)

## இலவணாசுரனால் ஏற்படுந் துன்பங்களினின்று காத்தருளுமாறு முனிவர் இராமபிரானை வேண்டல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

பஞ்சபாத கங்களையும் பயப்ப டாத
 படிபயில்வா னிலவணன்செய் பயத்தை நீக்கி
அஞ்சலென்பார் தாமுமிந்த பூமி மேலோர்
 அரசர்களை யுங்காணே மண்ண லேநாம்
வெஞ்சரத்தா லிராவணா திகளை வென்றே
 வீடணர்க்கு முடிதரித்த விவரங் கேட்டோந்
தஞ்சமென்றே வந்தடைந்தோம் வினைக ளெல்லாந்
 தாழ்விப்பீர் தவசுநிலை வாழ்விப் பீரே.

### இதுவுமது

வாசாம கோசரமாய்ப் பார்க்க வன்சொல்
 வகையெல்லாங் கேட்டுமந்த லவண னுக்கு
ஆசார மென்னவா கார மென்ன
 அவனிருக்கு மிடமென்னென்றே ஐயன் கேட்க
வாசார மெப்பொழுதும் கோப மாகு
 மாகாரஞ் சகலவுயி ருடலே யாகும்
வாசமது மதுவனமே யென்ற சொல்லை
 வாங்கினன் செயிப்பேனென்று வாங்கி னனே.

## முனிவர்கட்கு இராமபிரான் அபயமளித்தல்

**அசாவேரி ராகம்]** **[ஆதி தாளம்**

பல்லவி

*பாரவாசி யா லவண (சுர)னுயிரை பறிப்பே னெமுனு*
*தீரவாசி யாரே.*

அநுபல்லவி

*பாரில்வந்து பிறந்ததென்ன காரியந்தா னெனக்கு முங்கள்*
*பாதமற வாத ஆசீர்வாதமே பலிக்கும் பலிக்கும் (பார)*

சரணங்கள்

1. *எத்தனை வரம் பெற்றிருந் தாலும்-அ*
*சத்திய நெறி மாறி நெஞ்சி*
*லீவு யிரக்கமோ வில்லாத*
*பாவி யுடலைக் கிறி*
*கொத்திப் பிடுங்கிக் காக நரி நாய்கள்*
*கூளி காளிபரந் ........து கழுகு பேய்கள்*
*சுத்துக் கொண்டி ரத்த மாங்கி*
*சத்தை யெல்லாம்பரு கத்தனுவில்*
*சூரஞ்செய் தோரம்பு கம்பீ ரத்துடன்*
*தொடுப்பேன் தொடுப்பேன் (பார)*

2. *இங்கினி மேலே யுங்களுக் கெல்லா*
*மங்கவன் பயமிலை யே - அது*
*ஏதென்று லக்கணை காதத் தோடு கோ*
*தண்டப் பெருஞ்சிலை யே - புங்கமுட*
*னென்கையி லிருக்கு தையா - பூமி*
*மீதிலே யிதென்ன பொய்யா*
*எங்கே யோடி னுங்க டிந்து*
*பங்கஞ் செய்வே - னவனுமோ*
*ரிலக்கோ வல தக்கோ விதுக்கோ*
*தள மெடுப்பே னெடுப்பேன் (பார)*

3. *தவசி கட்கொரு வவதியைச் செய்யு*
*மவர்களுக் கெதிர் நானே - இது*
*தானுஞ் சத்திய மேனிந் தப்பய*
*மோனம் பெற்றவர் தாமே*

கவலை கொள்ள லாகுமோ முனிவோரே
கருணை நயனமெந்தன் மீது செய்வீரே .
உவரின பேர்கொண் டவனு மானலவ
ணனையே அரைத்துக் கரைத்து
ஊதி யெங்குங் கியாதி பண்ணி
நீதி செய்வ துறுதி யுறுதி. (பார)

### இலவணனை வென்று, முனிவர்களின் தவத்தை நிறைவேற்றி வைப்பதாக இராமபிரான் உறுதிகூறல்

### சத்ருக்னன், தான் லவணனை வென்றுவிடுவதாகக் கூறல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

சத்தியமா யிலவணனைச் சயித்து முங்கள்
தவசுநிறை வேற்றிவைப்பே னென்று பின்னும்
உத்தமனை வரைப்பார்த்து லவண சூர
னுடனெதிர்த்து விசயஞ்செய் வதுயார் பங்கு
புத்தியுடன் பரதசத்து ருக்க னீங்கள்
புகல்வதென பரதனது என்பங் கென்றான்
சத்துருக்க னெழுந்துவையன் திருவ டிக்கஞ்
சலிசெய்தான் சொலிவாயங் குலிசெய் வானே.

### சத்ருக்னன் கூற்று

பூரிகல்யாணி ராகம்] [ஆதி தாளம்

பல்லவி

ஆரியரே சாமி காரிய துரந்தர
ராமரே பரதர் தாமே.

அநுபல்லவி

வீரியர்நீர் தண்ட காரணி யத்தில்முன்னே
மேவ இவர் தேவரீர்தம் சேவடியின்
மீதிலே தொடு பாதுகை கொடு
விரதம் பிடித் திருந்தார் (ஆரியரே)

சரணங்கள்

1. நந்தி கிராமத்தி லிருந்தார் - பதினாலாண்டும்
உடுத்தினரே யரையினு மரவுரி
முடிமேலுஞ் சடை பூண்டு
கந்த மூலங்களைப் புசித்தார்
புவியை யாண்டு விரதங் காத்தார்
அருமையது வல்லவோ - இனிமேலும்
என்ன வேண்டு மிந்த மானுயாவர்க்கு
அந்த லவண னொரு ஈடோ
வொரு சோடோ - வெகு பாடோ - அல
ஈதெனது பங்கு வீதமிட விங்கு
இருக்கிறேனே யென்னையா (ஆரியரே)

2. தேவரீரைப் பிரிந்த துயரஞ்சொல வொண்ணாது
இன்னுந் தீர வில்லையே
எவர்தானு மறியார்க ளிந்தப்பு விமீது
கோவென் றழுத கண்ணீர் மாறவே யில்லையிப் போது
மனது கூசாதெ மூந்து சொல்லுறே
னென் றறிவர்போலே நல்லோ ரேது
தேவர் முனிவர்கள் யாவர்க்கும் மனத்துயர்
தீரக் களிகூரப் பூமி பார - மிகு
தீய ராவணன் மாய வீடணர்
தென்னிலங்கை பெறக்கொடுத்த (ஆரியரே)

3. வாழிநின் பாதார விந்த-மகிமை சொன்ன
பேர்க்கு வருமே சகல விசயங்களும்
பெறலாமே மன்னர் மன்ன
கோழி யடிக்கக் குறுந்தடி யோ
லவணன் சின்ன - ஒரு
கொஞ்சக் காரனவ னுக்கிந்தப் பரதர்-போக
வேணுமோ அருமை என்ன
ஏழுலகுஞ் சொல்ல வேழைக ளுக்கிரங்கி
ரட்சிப்பதுன் கட்சிசொன் மகிழ்ச்சிதனை
ஈவு பெறுமுந்தன் ஏவல் தனையெந்த
னிடத்திலே பதித்த. (ஆரியரே)

## இலவணாசுரனை வென்று, மதுபுரத்தை யாளுமாறு இராமன் சத்ருக்னனிடம் கூறல்.

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

*சத்துருக்க னிவைசொலவே மகிழ்ந்து ராமன்*
*தம்பிநீ யிப்படிக்கே லவண னென்னும்*
*புத்தியில்லா தவனைவென்று மதுபு ரத்தைப்*
*பொருந்தியர சாளெனவே சாமி சாமி*
*உத்ததலை யிருக்கவா லாடு மோவென்*
*றோதுங்கிவாய் புதைத்துநின்று னங்கே ராம*
*பத்திரனு நீயதற்குக் கர்த்த னென்று*
*பட்டந்தான் தரிப்பதுவுஞ் சட்டந் தானே.*

## சத்ருக்னனை மதுபுர அரசனுக்கி இராமபிரான் முடிசூட்டுவித்தல்

**காம்போதி ராகம்]** **[ஆதி தாளம்**

பல்லவி

*திருக்கண் செய்துசத் துருக்கனுக் கபிஷேகஞ்*
*செய்தானே சாமி.*

அநுபல்லவி

*திருக்கண்செய் தயோத்தி ஸ்ரீராம சந்த்ரமூர்த்தி*
*உருக்க மாகமது புரமதி லேசென்று*
*உண்மை யாகநீ யேயர சாளென்று* (திருக்கண்)

சரணங்கள்

1. *பரதலட் சுமணரை யக்நேர - மருகிலழைத்துப்*
*புரிவாய்ச் சொல்லுகிறேன் கேள் வித்தார -*
[அபிடேகஞ்செய்ய
*வரிசை யாகவேண்டுஞ் சமபாரங் - கொணர்வீரிங்கே*
*வதிட்டர் முதலோரை யிந்நேரம் - அமைச்சர்க*
*வரவேத ருயரவே சுபந் தரவே* [ளெல்லாம்
*நல்திர வேளையில் வரவே*
*செய்யலா மென்று மைய னுரைக்க - வண்மை*
*யாகியப்படி யேயழைப்பி விக்க* (திருக்கண்)

2. மன்ன னரண்மனையை வேடிக் - கையதாக
சொன்ன மணிகளுடன் கூடி - வாழை கமுகு
தென்னங் கனிவகைகள் கோடி அலங்கிருதங்க
ளுன்னித மாகவேகொண் டாடி - மேள தாளந் தத்
தின்னுகிட சென்னுவென
மின்னார்களு நன்னுடக
முன்னித பரதநன்னா வின்படி நடக்கவுங்
கன்னய தேசிகமும் படிக்க (திருக்கண்)

3. வேத விதிப்படிசு வாகம் - அந்தணருடன்
ஆதி வதிட்டருமநேக - மந்திர வோமங்கள்
நீதியுடன் செய்தார்வை போக-மிகுந்த ரகு
நாதன் கையினலபி டேக - மதுபுரத்தின்
ரீதேஅக லாதேயிரு - நீதேறியிப் போதேமனு
நீதி செலுத்திலவ ணசுர னையும்வென்று
நீயிருந் தரசாளடா தம்பி யென்று (திருக்கண்)

4. கோசலை முதலாந் தாய்மார்க - ளின்ன முள்ள
ராசா ராணிகள் பெரியோர்கள் - குருசனங்கள்
பூசுரர் மண்ணிய நெறியோர்கள் - யமுனதீர
வாச மாதவ முனிவோர்கள் - சேடைகளிறைத்
தேசங்கள் வாசங்களுல் லாசம்பெற வேசம்பிர
மேசிறந்து தாம்பூல வகைகள் பூரி
வேணதே யருள்செய்து கருணை மாரி. (திருக்கண்)

## இராமபிரான் சத்ருக்னனுக்கு முடிசூட்டிய பின்பு, இலவணசுரனை வெற்றி கொள்ளுமாறு அவனிடங் கூறல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

அருமையுடன் தம்பிசத் துருக்க னுக்கே
அபிடேகஞ் செய்துமையன் மடிமேல் வைத்து
ஒருமையுட னலிங்க னந்தான் செய்து
உச்சிமோந் த்திகபல னுதவிப் பின்னுங்
கருமைகொண்ட மேனிரகு ராம சந்த்ரன்
கடாட்சித்தே சகலவிச யங்கொ டுக்கும்
பெருமையுள்ள வத்திரந்தான் தம்பி யுன்கைப்
பிடியென்ற னிலவணனை யடியென் றனே.

## இராமன் கூற்று: தொடர்ச்சி

மத்தியமாவதி ராகம்] [சாபு தாளம்

பல்லவி

சத்துருக்களை வெல்லும் அத்திர மிந்தா தம்பி
சத்துருக்கனே பாரடா.

அநுபல்லவி

அத்தந்த னிலேலீபி டித்துல வணையை
றுத்துடனே மதுபு ரத்தைய ரசாளடா (சத்துரு)

சரணங்கள்

1. பண்டும துகயிடப ராமசுரரைக் கொல்லாப்
படைத்தார்நா ரணனுமிப் பாணமிதுவே நல்ல
மண்டல மிதிலொரு வருக்குந் தெரிவ தல்ல
மந்திர சரமிதன் மகிமைநா னென்ன சொல்ல (சத்துரு)

2. மாநில மதிலிராவ ணன்தலை யையுருட்ட
வந்து சேர்ந்தது மன்னர் மணியே யெனது கிட்ட
தானைகை கண்டதிது தவறாது விதியிட்ட
சட்ட மெவர்களாலுந் தள்ளவொண் ணாதுகொட்ட
(சத்துரு)

3. இலவண சுரன்கையி லிருக்குது திரிசூல
மீசன் கொடுத்தது மென்பாயறி வாய்மூலம்
பலவானு னக்குநன் றாய்ப் பிறந்ததே யநுகூலம்
பிடியிக்கணை யைச்சயம் பெறுவாயுன் னுடைசீலம்
(சத்துரு)

4. காதக னிலவணன் கையில் சூலத்தால் பண்டு
களத்தில் சமர்விளைத்தால் கடினமென் பதுமுண்டு
ஆதலால் மதுவனத் தவன்சென்றி டவேகண்டு
அப்போ கோட்டைவாசலை யறிந்துநீ கட்டிக்கொண்டு
(சத்துரு)

5. நித்தம் பூசையில்வைத்து நேமத்துட னர்ச்சித்து
நெடிய சூலமிருக்கு நீயதறி வாயுத்து
மத்தியா னத்தினி லவணன்மது வனத்து
மார்க்கஞ்செல்லு வான்கண்டாய் வகைதெரி
[வதேயெத்து. (சத்துரு)

## இராமபிரான் கூற்று : தொடர்ச்சி

### கொச்சகம்

மன்னுமணி மந்திரமே கொடுத்தஅத்தி ரங்கொடுத்துத்
தன்னருளே செய்துபின்னுஞ் சத்துருக்க னைப்பார்த்துப்
பன்னுபறை யோர்புகழும் பண்பாமி ராமசந்திரன்
என்னுயிர்நீ யென்றனே யின்னமுரைக் கின்றனே.

கேதார கௌள ராகம்] [ஆதி தாளம்

### பல்லவி

புருட ரிடபனே சத்துருக்கனே - நீநல்ல
புத்திசாலி யின்னுங் கேளடா.

### அநுபல்லவி

பெருமைசேர் முனிவர் தவசு நிறையச் செய்து
பிரபல மதுபுரத்தை யாளடா (புருட)

### சரணங்கள்

1. அதிரதர் மகாரதர் சமரத ரிவரிந்த
அட்டதிக் கையும்வெல்லுஞ் சூரர்
சதுரங்க பலத்துடன் வருகிற ருன்னைப் போலே
தானுண்டோ உன்னைப் போலே வீரர் (புருட)

2. உந்தன் மனதிற்சம்ம திப்படி நடப்பார்கள்
உத்தம ரிவர்சத்திய சீலர்
எந்தக் காரியந்தா னெள்ளின்மு னெண்ணெ
[யாய் நிற்பா
ரிவரே நமக்கு அநுகூலர் (புருட)

3. வெகுதலை முறைகண்டு பரம்பரை யாய்நின்று
வேண்டி யிருந்தார் நம்மை நம்பி
தகுமான திராணியுள் ளவரிவர் மனதுகள்
சந்தோஷம் பெறச்செய்வாய் தம்பி (புருட)

4. அவரவர் தராதர மறிந்து மரியாதைசெய்
தரவணைப் பதுவே யல்லாதே
கவலையென னடாவிவர் முகத்தைப் பார்த்துநீ ஐயா
கடுத்த வசனங்கள் சொல்லாதே (புருட)

5. வெய்யிற்கானல் மிஞ்சிய வேலையில் நடந்திவர்
வெதும்பப் போகாது சொன்னேன்பாரு
பய்யப்பய்ய நடந்து படைகளுடனே சென்று
பண்பாங் கங்கைக்கரையிற் சேரு (புருட)

6. கங்கைக் கரையிலுந்தன் தளத்தை நிறுத்திநீயுங்
கையில்வில் லம்பெடுத்துக் கொண்டு
சிங்கமென வேசென்று அந்த லவணனெனுந்
தீயன்வரும் வழியைக் கண்டு (புருட)

7. கோட்டை வாசலைக்கட்டிக் கொண்டு அந்த லவணன்
கோட்டைக்குள் வாராமல் காத்து
நாட்டிற் சொல்லியமதுக் காட்டிலவ னுகார
நாடிப் புசிக்கும்வேளை பார்த்து (புருட)

8. காதக னவன்கையில் சூலமி ருந்தால்கொல்லக்
கடினமென் பதுசொன்னேன் முன்பு
ஈதறிந்து தந்திரஞ் செய்யும்வகை உரைத்தே
இப்படிக்குச் செய்வதே தெம்பு (புருட)

9. வேத வேதியரிவ ரநேக யாகங்கள்செய்யும்
விபுதர் யமுனாதீர வாசி
மாதவ மிகுந்தவ ராசீர்வாதஞ் செய்து
வருகிறார் வெகுவிசு வாசி (புருட)

10. மீன்னனே யிவர்களை முனனிட்டுக் கொண்டுசெல்லு
வந்ததே விசயங்க ளெல்லா
மென்னுடைக் கண்மணி நீலவ ணனைச்சயிப்பா
யென்பதினா லெங்கெங்கு நல்ல சொல்லாம். (புருட)

## சத்ருக்னன், இராமபிரான் முதலியவர்களை வணங்கிப் பவனி செல்லத் தொடங்கல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

வணிதமா யிப்படிக்கே சொல்லக் கேட்டு
மகிழ்ந்தெழுந்தே யையனடி வணங்கிப் பின்னுங்
கணிகொண்ட கோசலைசு மித்திரா தேவி
கைகேயி முதலான தாய்மார்க் கெல்லாம்

பணிகொண்டு பரதலட்சு மணரைப் போற்றிப்
பரிவான வதிட்டரையுந் தொழுது நீல
மணிவண்ணன் கருணைகொண்ட பெருமை யால
வனிகொண்டா னுயர்துரைப்ப வனிகொண் டானே.

### சத்ருக்னன் பவனி வருதற் சிறப்பு

**உசேனி ராகம்]** **[ஏக தாளம்**

**பல்லவி**

பவனி கொண்டானே - ராமாநுசன்
பவனி கொண்டானே.

**அநுபல்லவி**

தவவிரோதி லவணனைச் சயிப்ப
திவனென வேவந் தவன்சத்து ருக்கன் (பவனி)

**சரணங்கள்**

1. நாலாயிரங் குதிரைத் தானையு மாயிரத்தின்
மேலாயிரந் தேர்சத மியானையும் வெகுசகத்திரங்
காலாளும் வில்லாளி களும்வே லாளுங்
கடல்போல பொங்கி யதுபோல மதுபுரத்திலே
கோலா கலமுஞ் செய்வோ னுமென்று [சென்று
நாலாவித பேரி யடிக்கவே
பாலர்முறை மாதர் படிக்கவே
பத்திரி றுத்திய பத்திவி சித்திர (பவனி)

2. நானுவர்ணங்க ளுள்ள சாதியும் வெகு சரக்குகள்
சீனும் பரங்களுங் கடைவீதியுஞ் செம்பொன் னுயுத
மானிதியைக் கொண்டு ராமத
யானிதி யென்று பரவியெ
சேனு சமுத்திரம் விரியவே
வானோர் பூமழை சொரியவே
தானே யமுனு தீர மேவிய ஞானுதிபர் வழிகு லாவிய
நல்லவர் வல்லவர் நல்லுரை சொல்லவே (பவனி)

3. வீராதி வீரர் வாளை வீசுவார்-தொடைதட்டிக் கொண்டு
தாராளமாக விருது பேசுவார் - லவண னென்பவன்
வாரானே வந்து கண்முன்னே
நேரானே யென்றதட்டிக்கொண்

டோரொருவர் தலைவர் மீறியே
சீராம னென்று கூறியே
பாரோ ரெல்லாரும கிழ்ந்திடச்
சீராய்க் கவிவாணர் புகழ்ந்திடச்
செப்புதற் கொப்புமொ ருப்படி யற்புத. (பவனி)

## சத்ருக்னன் வான்மீகிமுனிவரின் ஆச்சிரமஞ் சென்று, அன்னாரைக் கண்டு வணங்கல் ; முனிவர் எதிர் உபசாரஞ் செய்தல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

அணியுடனே மாதமொன்று நடந்து மேக
னாகவே யிரண்டிராத் திரிதான் சென்று
துணிவுளவால் மீகரிடங் கண்டு போற்றி
துய்யவனே தமியேனு நின்ன டிக்கே
பணிவிடை செய்திருந் துதைய மதனின்
பண்பாகச் செலநினைந்து வந்தே னென்று
தணிவுடனே யிவைகள்சொல்லிச் சத்து ருக்கன்
றரிக்கிறான் முனிவனுப சரிக்கின் றானே.

## வால்மீகி கூற்று : தொடர்ச்சி

எதுகுல காம்போதி] [ஆதி தாளம்

பல்லவி

வாரும் வாரு மிராமானுசனே - இங்கு
வந்தீர் சுகமே வாரும்.

அநுபல்லவி

சூரஞ் சேரும் ரகு குலமன்ன வர்கட் கெல்லாஞ்
சொந்தமிவ் விடந்தானே சீமானே (வாரும்)

சரணங்கள்

1. மகுடபதிகள் வாந்தால் மகிமையா யுபசாரம்
வனத்தில் தவசிகள் செய்வதென்ன விந்நேரம்
வெகுபுக ழுலகினில் விளங்குமுன் கம்பீரம்
வீரப்பிர தாபசாலி மேதினிக் கதிகாரம் (வாரும்)

2. இந்த வாசனத்திருந் தெந்தனுலே கொடுக்க
விளைந்த வருக்கிபாத் தியாசம ணீயமிக்க
கந்த மூலமுதற் கனியுங்கொண்டு புசிக்கக்
கைவல்லிய முனிவோர்கள் கண்டுகண் களிக்க
(வாரும்)

3. இயற்கை வாசனையா மிரவிகுல மேயாதி
என்று நிறைகுடமா யிருப்பது முங்கணீதி
யுயற்கை யாகமேமூன் றுலகுள் ளறியுஞ்சோதி
உத்தமனே யின்னும் ஓங்குமுங்கள் பிரக்யாதி.
(வாரும்)

**வான்மீகர் ஆச்சிரமத்துக்கு முன்உள்ள இடம் எவரதுஇருப்பிடம் என்று சத்ருக்கனன் வினவ, வான்மீகர் கூறத் தொடங்குதல்**

**எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்**

இதமாக இவகைசொல்லிக் கொடுத்த தெல்லா
மேற்றிருந்து என்குருவே ஒருவிண் ணப்பஞ்
சதமாக விந்தவாச் சிரமத் தின்முன்
தானதோ தோணுவதே யெவர்கள் வாச
மதுவுமிராக் கதரிருப்போ சொல்ல வேணு
மையனே யென்றுவவ்வாச் சிரமம் வந்த
விதமெல்லாங் கேளுமென்று தொடுத்தா ரேவான்
மீகிதா னுயர்பிரம யோகி தானே.

**வான்மீகர் கூற்று**

**ரீதிகௌளை ராகம்] தரு [ஆதி தாளம்**

1. ஊர்ச்சித மாயிந்த வாச்சிரமம் வந்த வாறு - சொல்ல
வுற்றது கேளிரா மானுச னேமனந் தேறு
பூசக்க ரத்தினில் தேசங்க ளோரன்பத் தாறு - தன்னில்
பூபதி யாரும் பணியு முங்கள்குலம் பேறு.

2. பூருவ முங்கள் குலத்தில் பிறந்தவுல் லாசன் - வெகு
புண்ணிய மிக்கத போதனர் மேல்விசு வாசன்
மீறு பலன்கொண்ட கைக்காரன் பெருஞ்சு தாசன்-பாலன்
மித்திர சகனென வந்துதித் தான்மக ராசன்.

3. அங்கவ னேச்சவு தாசனென் றுஞ்சொல்லு வாரே - வெகு
ஆதிக்க மாய்மனு நீதிசெய் தாண்டானிப் பாரே
இங்கே வனத்தினில் வேட்டைக்கு வந்தவ னேரே - ரெண்
டிராட்சதர் கூடிப்பு லிவேடங் கொண்டுவந் தாரே.

4. காமரூ பங்கள் மிகுந்த ராட்சதத் தீய ரிந்தக்
காட்டில் மிருகங்க ளைப்புசிக்கு நாற வாயர்
பாமர ராசிக்கொ டுமைசெய் யுமனி யாயர் - பஞ்ச
பாதகஞ் செய்ய ஒருத்தருக் கொருத்தர் சகாயர்.

5. இப்படிக் கொத்தவ னத்தில் மிருகங்களைச் சாடி - இரை
யேற்றுக்கொண் டேதிரி வாரே புலிவேடங் கூடி
அப்படிச் செய்துவ ருநாளி லிங்ஙனே தேடி - வேட்டை
யாடினன் மித்திரச கராசன் வந்துழு டாடி,

6 துள்ளிய ராட்சத சோரப்புலிக் குக்கு டோரி - யாக
சோதித்த டித்தானொ ருப்புலி யையொரு சாரி
கள்ளன் கழுவோடே பாம்பாட்டி பாம்போடே நேரிட்-டவர்
காயமிறப் பாரென்பார் பாருக்குள்விவ காரி.

7. கானகத் திற்புலி யான வொருவனைக் கொன்றான் - அது
கண்டுபின் மற்றொரு ராட்சதன் தப்பியே நின்றான்
வானகத் திலவன் மாய வுருக்கொண்டு சென்றான் - அந்த
மன்னனைப் பார்த்துச் சிலவே மொழிகள் புகன்றான்.

8. இந்த வனத்தினி லுதரநி மித்திய மாக - நாங்கள்
என்ன விதமாகி லுமுருக் கொண்டு அநேக
தந்துகள் செய்து வயிறுவளர்த்ததி லேக -னென்ன
தப்பிதஞ் செய்தானென் றேயடித் தாருயிர் போக.

9. முற்பழி பிற்பழி யுண்டோ யேதாகிலுஞ் சொல்லு - இந்த
மோசமுஞ் செய்தாயே யாசனே நீயிங்கே நில்லு
துர்ப்புத்தி செய்ததைக் கண்டேனே யுன்மனங் கல்லு -
[நெஞ்சைத்
தொட்டு மறிந்துகொள் நீசெய்த தேதில்லு முல்லு.

10. துண்டக னேயிதற் கேற்ற பதில்சொல்லவே னுனே - [யென்று
சொல்லிய ராட்சதன் மாயம தாகச்சென் ருனே
கண்டக னிந்தவயிர நினைத்திருந் தானே - அந்தக்
காவலன் மித்திர சகன்கதை யின்னுஞ்சொல் வேனே.

11. பட்டணத் திற்சென்று காவல னெப்போதும் போலே -
பண்பா யரசு செலுத்திவந் தானேயிப் பாலே [வெகு
சட்டம தாகயிவ் வாச்சிர மத்தின்முன் னுலே - வெகு
சாத்திரஞ் சொல்லுந் தரும நெறியொருக் காலே.

12. பூராய மாகவி சாரணை செய்தந்த மேட்டி - அன்பு
பூண்டு பரிமேத யாகத்துக் கேதம்பம் நாட்டி
ஆரிய ராகிய வேத முனிவர்கள் கோட்டி - யுடன்
ஆதி குருவாய் வதிட்டர் முதல்வரக் கூட்டி;

13. வேண்டுசம் பாரங்க ளெல்லாங்கொ ணர்ந்துச ராக-மாக
மிக்க நவமணி சொர்ணங்க ளம்பார மாக
ஆண்டுக ளென்பது ஆயிர மானத நேக - கால
மற்புத மான பரிமேத யாக மமோக.

14. வைபவ மிக்கமத் தயந்தி யென்றிடு மாது - அந்த
மன்னவ னுக்கு மனையாட்டி யாய்மன மீது
மெய்ப்பர வுங்குண சாலி யுடனக லாது - நல்ல
மித்திர சகன்ருனே யாக நடத்திடும் போது;

15. பானகத் தில்துரும் பானது போலவே பண்டு - போன
பாதக னுனவ ரக்கனவ் வேளையைக் கண்டு
தானவ னங்கே வதிட்டரைப் போலுருக் கொண்டு - வந்த
தப்புத் தனத்துக்கு ஒப்புமை யானதொன் றுண்டு.

16. புலிபசுத் தோலைப் போர்த்துக் கொண்டவித மாச்சு -அந்த
பூபதி முன்னே கபடமாய்ச் சொன்னதும் வீச்சு
வலியில் மிக்கவர சேயு மக்கிது வாச்சு - திந்த
மாமேத யாகந் தொடுத்தீரென் றேவெகு பேச்சு.

17. சொல்லியு மின்னுந் தொடர்ந்துரைப் பானவன் காணும் -
துய்ய வமுதுடன் மாங்கிச போசனம் வேணும் [நல்ல
வல்லவ நீயே தருவா யெனமனந் தோணு - மிந்த
மாமகத் தில்தந்தா லுந்தனுக் கோபுகழ் பூணும்.

18. என்றது கேட்டந்த மித்திர சகனெனுந் தியாகி - நல்ல
தென்று வதிட்ட ருரைமெய்யி தென்றன்ப தாகி
அன்றக் கணமே குருமொழி தப்பாத தூகி - சொல்ல
அப்படிச் செய்வமென் றெப்பின ரேசுயம் பாகி.

19. பூனைக்குந் தோழனாய்ப் பாலுக்குங் காவலாய்ச் சீக்கி -
[ரத்தில்
போக்கிய ரக்கனுந் தன்னுரு வானத்தை நீக்கி
தானே சுயம்பாகி வேடங்கொண் டேயவ் வாக்கி - மனச்
சங்கை யில்லாமல் நரமாங்கி சத்தையே யாக்கி;

20. வைத்த கவட்டை யறியாமல் மன்னனந் நேரங் - குரு
வதிட்டருக் கிட்டுப் பண்ணினு னேவுப சாரம்
சுத்த வதிட்டர் நரமாங்கி சமதின் சாரல் - கண்டுஞ்
சொல்லவொண் ணாத கோபாக்கினி யான கோரம்.

21. கொண்டா மன்னனே ராட்சதர் தின்பத்தை நீயே -
கொண்டு வனத்தி லரக்கனு கத்திரி வாயே [தின்று
மண்டு நரமாங்கி சங்குரு வுக்களித் தாயே - இந்த
மாறுபாட் டுக்கிச்சா பமனுபவிப் பாயே.

22. என்றது கேட்டு நடுங்கி யரசனுந் தாழ்ந்து - சாமி
யேது மறியேனென் றேதுய ராழியி லாழ்ந்து
நின்று மதயந்தி தன்னுடன் மூவலஞ் சூழ்ந்து - ஐயா
நிர்மலா வென்று வதிட்டர் பதத்தினில் வீழ்ந்து;

23. கெஞ்சவுங் கண்டு வதிட்ட ரெனுமுனி வோரும் - இந்த
கீலகம் வந்தவ ரலாறும் ராட்சதன் பேரும்
நெஞ்சி லறிந்தந்த மன்னனைப் பார்த்துனைச் சாருஞ் - சாப
நீணிலத் தில்பனி ரண்டு வருடத்தில் தீரும்.

24. சாபமுந் திருநிந்த மண்டல மேலர சாட்சி - ஆளத்
தக்க வரமுங் கொடுத்தார் வசிட்டர்கண் காட்சி
பூபதி யப்படிப் பன்னிரண் டாண்டினில் மீட்சி-கொண்டு
பூவுல காண்டது லகங்க ளெங்கெங்குஞ் சாட்சி.

25. ஆங்கவ னுக்குப் பெயருரைப் பேனேகன மாட - பரத
னுரு மவனுடை யாச்சிரம மென்றறிதே கூட
இங்கும் வனமீதே யையா மலர்வண்டு பாட-வன
முற்றது சொன்ன தறிவாயே யுன்புகழ் நீட.

## சத்ருக்னன் அன்றிரவு வான்மீகரது ஆச்சிரமத்தில் தங்குதல்; சீதாப்பிராட்டி நல்லோரையில் மக்களைப் பெறுதல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

தவக்கொழுந்தாம் வான்மீகி முனியிவ் வாறு
சரிதையென்று கனமாட பரதன் செய்தி
துவக்கியவ னச்சிரம மதுவா மென்று
சொல்லவே சத்துருக்கன் கேட்டு கந்து
சேவைக்கி யந்தராத்ரிஅங் கிருந்தா ரென்றுந்
தீர்க்கசுப மங்கிலியச் சீதை யாரும்
நவக்கிரகமுஞ் சுபக்கிரகமா முதய ராசி
நயங்கண்டாள் பிள்ளைபாக் கியங்கண் டாளே.

## குசலவர் தோற்றம் பலரும் வாழ்த்தெடுத்தல்

சங்கராபரண ராகம்] [ஆதி தாளம்

பல்லவி

உலக மெங்குந் துதிக்குங் கோதை - நல்ல
உபயச்செல் வரைப்பெற்றாள் சீதை

அநுபல்லவி

மலர்மகள் வாணி யுடனயி ராணி
மகிழ்கலி யாணி உயரணி குலவேணி (உலக)

சரணங்கள்

1. நந்த னரிவர் பிறந்த நாளைமுனி
   நங்கை மார்க ளன்பைமேவிக் - கொண்டு
   வங்கே சூழ நின்று ராம நாம
   மனமகிழ்ச்சியா யுரைகு லாவினது
   மெந்த ராத்திரி யிராமானுச
   னந்தரி வீர பன்னக சாலையினில் சேவித்தது
   வந்த ராத்திரியில் சுபவேளையி லெங்கள்
   அண்ண னிராம சந்திரன் தேவி (உலக)

2. முனிகுமார னிந்தச் சோபனம் வான்மீகி
   முனியிடத்தில் சொல்லி யைய - அந்த
   வனிதை பாலரிடம் பூதரட்சு வொன்றும்
   வாராமலே ரட்சை செய்யப்
   புனித யோகிமன மகிழ்ச்சியாய் நடந்து
   புதல்வரைக் கண்டவ ருய்ய - என்னிட
   மினிமை யாகவந் தப்படியே ரட்சை
   மந்திர மேற்கச்செய்து கருணை பெய்ய (உலக)

3. ஒருமை யானகுச லவமதை வான்மீகி
   யுறுதியாய்க் கைக்கொண்டப் போதே - வெகு
   அருமை யாகமுன்னே பிறந்த பிள்ளையைப்பார்த்து
   அந்தக் குசங்க ளவன் மீதே - தொட்டுச்
   சுருதிதர பொழிந்து பரிசுத்தஞ் செய்தந்த
   சுதனைக் குசனென்றுந் தப்பாதே - உயர்
   பெருமையான நாம கரணஞ் செய்தது கண்டு
   பேரானந்தங் கொண்டனள் மாதே (உலக)

4. பின்னுமா முனிவ ரிரண்டாவது வந்த
   பிள்ளை தானும்நவ மணிபோலே - கண்டு
   சொன்ன வாரிலவங் கொண்டே - அங்கம்பரி
   சுத்தஞ் செய்து வேத விதியாலே - யிரட்சை
   என்னு மேன்மையுள்ள மந்திர மருள்செய்து
   இவனேலவ னென்னும் பெயராலே - புவி
   தன்னிலே விளங்குமி ரண்டுமைந் தரைப்பெற்ற
   தாயு மகிழ்ந்தனள் மென்மேலே (உலக)

5. நல்லதா யிரண்டுகு ழந்தைக்கு ரட்சைசெய்து
நாமங் குசலவ ரென்றே னுட்டி - யெங்குஞ்
சொல்லவே யிவர்கள்பிர சித்தியாம் புவியில்
சுகமே யிருப்பரென் ருரருள் சூட்டி - ஞானம்
வல்ல மாமுனி குமாரர்க ளியாவரும்
வாழ்த்தல் செய்துமன தன்பூட்டி - யிந்த
வல்லி சானகியே பாக்கியவதி யாஞ்சுப
மங்கிலியம் வளருஞ்சீ மாட்டி (உலக)

6. பாதி ராத்திரியில் சீதாங்கனி யென்னும்
பைங்கிளி ராமசங் கீர்த்தனமே - செய்யு
நீதி குழந்தையி ரண்டுபே ரையும்பொது
நிறைந்த சந்தோஷசுப சோபனமே - இந்தச்
சேதிகேட் டுகந்து ராமானு சன்வந்து
தெய்வாதி யையுங்கை வந்தனமே - யென்க
வேதமா முனிவர் ஆசிர் வச னமது
மிகுந்த பதிவிரதை ரத்தினமே. (உலக)

## சத்ருக்னர் மறுநாள் பொழுது புலர்ந்ததும் வான்மீகி முனிவரிடம் விடைபெற்றுச் சென்று, ச்யவன முனிவர் ஆச்சிரமம் சென்று இலவணாசுரனைப்பற்றி வினவுதல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

பொருத்தமிகு நாளிலந்த சீதை யார்க்குப்
புனிதவுப யச்செல்வர் பிறக்கக் கண்டு
திருத்தமா யன்றுராத் திரியி ருந்து
சயமுனிபால் விடைபெற்று நாளா மெட்டி
ஒருத்தான யமுனதீ ரத்தில் மேவு
முத்தமர்பா லிலவணன்தன் பலங்கள் கேட்க
கிருத்தியங்க ளாலேயிந் திரியத் தன்னை
கெலிக்கின்றூர் சவனர்சொல்லிச் சொலிக்கின் றூரே,

## இலவணுசுரன் வரலாறு : தொடர்ச்சி

முகாரி ராகம்] தரு [சாபு தாளம்

1. அவனி தனிலே யெங்கும் பிரபலமாகு
மயோத்திநக ரில்ராமா னுசனே! - வெகு
சவுரிய முள்ளவன் யுவணுசுவ னென்றொரு
தரணிபதியாம் ராமா னுசனே!

2. அந்தமன்ன வன்பெற்ற நந்தனன் மாந்தாதா
அதிகவீ ரியன்ராமா னுசனே !-அவ
ரிந்தப்பு வியையாண்டு வந்தநாளில் தேச
மெங்கும்ப ரவிராமா னுசனே !

3. பரராசர் களையெல்லாந் தன்னுடைக் கைவசம்
பண்ணிக் கொண்டான்ராமா னுசனே! - பின்னும்
பரவிவா னுலகமுஞ் செயிக்க வேணுமென்று
படைகொண் டெழுந்தான்ராமா னுசனே!

4. தேவர்க ளுடனந்த தேவராசன் றன்னைச்
சயிக்கவென்று ராமா னுசனே! - வெகு
ஆவலாக வந்து மாந்தாதா வையுங்கண்டு
அண்டர்கோனு ராமா னுசனே !

5. எதிர்த்துப்போர் செய்யாமல் கவடு மனதில்வைத்து
இணக்கமாக ராமா னுசனே! - வீரங்
கதித்தபு ருஷருமமைப் போலே புவியிலெங்குங்
காணேமென்று ராமா னுசனே !

6. உமக்கு நமக்குமென்ன பூசல்வேண்டா மென்று
வொருமை போலேராமா னுசனே! - நல்ல
சமத்தன்கா ணுமக்குப் பாதி ராச்சியமுந்
தருவே னென்றுராமா னுசனே !

7. சிங்கா சனத்திற்பாதி பங்குதரு வேனென்றுந்
தேவராசன் ராமா னுசனே! - தானே
அங்காதர வாய்ப்பேச்சுச் சிங்கார மாகவே
அண்டர் சபையில்ராமா னுசனே !

8. பிரதிஞ்ஞையை யுஞ்செய்தா னதுகண்டு மாந்தாதா
பெருமைய டைந்தான்ராமா னுசனே! - பின்னுங்
கருவம டாவொரு வார்த்தை பேசினனே - யா
கண்டல னும்ராமா னுசனே!

9. மலையின்மீ துவைத்துத் தலைகீழாய்த் தள்ளின
விசையைப்போ லேராமா னுசனே! - மகி
தலமீதினி லெங்கும் வசியஞ்செய் தீரேநீர்
மாந்தாதா வென்றான்ராமா னுசனே!

10. ஒருபக்கத் திலுமொரு சத்துரு வில்லையே
உசிதமென் றான்ராமா னுசனே! - வீர
விருதுகட் டினவும்மைப் போலேமன் னர்களின்னும்
வேறில்லை யென்றான்ராமா னுசனே!

11. இப்படி வெகுவிதந் தப்புத் துதிகளாக
வெடுத்தானே யாராமா னுசனே! - மன
வெப்பம துகொளவே வருமங்க ளாகவே
விளம்பி னனேராமா னுசனே!

12. மாந்தாதா வுக்குநெஞ்சில் சுருக்கென்றமரர் கோவே
வாருமென் வேராமா னுசனே! - எது
நோந்தபடி சொல்லுநீர் பூமண்டலத்தின் மீதில்
நின்றதென் னென்றும்ராமா னுசனே!

13. மீசைக்கா ரர்கையில் வில்லுப்பி டித்தொரு
வேந்தர்காட்டும் ராமா னுசனே! - எந்தத்
தேசத்தார்கள் சொல்லுமென் றுறுதியா யந்தத்
தேவராசனே ராமா னுசனே!

14. நாடிக்கேட் கும்போது தேவரா சனங்கே
நகைத்துச்சொல் லுவான்ராமா னுசனே! - படை
கூடிக்கூடிக் கொண்டு எங்குஞ்சயித் தீர்காணும்
கோவேயென்று ராமா னுசனே!

15. மதுபுரத் தசுர லவணனைத் தெரிய
வருமோ என்றும்ராமா னுசனே! - அந்த
அதிக வீரனுக்கு எதிர்தானு மந்த
அரசரென் றும்ராமா னுசனே!

16. இந்தச்சக வட்டம் லவணன்முன் நடவாது
என்றேவா சவன்ராமா னுசனே சொல்ல !
அந்தத் தரணிபால னிந்திரன் வசனத்தை
யறிந்துகொண் டுராமா னுசனே !

17. தலையைக் குனிந்துகொண்டு வார்த்தையொன்று
தானேமன் னவராமா னுசனே ! தேவ [சொல்லாமல்
ருலகந்தனே யேவிட்டு யிந்தமண் டலத்தினி
லுடனேவந் தான்ராமா னுசனே !

18. இரதக்கச துரகக் காலாளுட னேசேனே
யெங்கும் பரவராமா னுசனே !- மது
புரமீதி லவணனேச் சயிக்க வேணுமென்று
புறப்பட் டானேராமா னுசனே!

19. முன்னேதூ தனேவிட்டுத் தன்னுடை வரலாற்றை
மொழியச்சொன் னன்ராமா னுசனே! - அவ
னன்னபதி போன்றி லவண சூரனுக்
கியம்பினனே ராமா னுசனே !

20. தூதன்வந்து மிப்படி யிலவண சுரன்முன்னே
துணிந்துசொன் னதைராமா னுசனே ! - கண்டு
காதகன் நகைத்தானே நரிசந்தை யேறின
கதையாச்சென் றுரேராமா னுசனே !

21. மலைமுழுங் குபவனுக்குக் கதவோரப் பளமென்ற
வகையைப் போலேராமா னுசனே! - தூதன்
தலையைத் திருகியவ னுடலையுங் கூடவே
தானேதின் றுன்ராமா னுசனே!

22. போனதூ தன்வரக் காணுமை லேமனம்
பொங்கி யெழுந்துராமா னுசனே! - வெகு
சேனையுட னேயந்த மதுபுரத் தையேசூழ்ந்து
சென்றுனே யனேராமா னுசனே !

23. சரவருஷங்களாலே நாலுதிக் குகளிலுஞ்
தாக்கினனே ராமா னுசனே! - பாணம்
வரவேகண் டறிந்துயி லவண சுரனும்
வாச்சுதென் றேராமா னுசனெ !

24. சூலங்கையி லெடுத்து விட்ட வுடனேயென்ன
சொல்லப்போ கிறேன்ராமா னுசனே! - அந்த
ஆலகால விடத்தைப் போலே பறந்துவந்து
அழலால்மண் டியேராமா னுசனே !

25. படைகளு டனேயந்த மாந்தாதா வையுமங்கே
பற்பஞ்செய்த தேராமா னுசனே ! - பின்
னுடனேலவ ணன்கையில் சேர்ந்ததே திரிசூல
முற்றுங்கே ளும்ராமா நுசனே !

26. அப்படிக் கொத்தசூல மகிமையை யாராலே
யறியலா கும்ராமா நுசனே ! -நாளை
யெப்படியும் நீரந்த இலவணா சுரனை
எதிர்த்து அடக்கிராமா நுசனே !

27. அவனைவ தைப்பதற்கோர் சந்தேகங் களுமில்லை
யறிந்து கொள்ளும்ராமா நுசனே ! - வெகு
கவன மாகச்சூல மவன்கையி லேறுமுன்
கண்செய்யும் ராமா நுசனே !

28. இலவணா சுரனு முந்தன்கைக் கணையாலே
யிறந்திடு வான்ராமா நுசனே !-இந்த
வுலகத்தில் முனிவோர்கள் தவசுக வீடேறு
முத்தம னேராமா நுசனே !

**சத்ருக்னன் ச்யவனமுனிவர் ஆச்சிரமத்தினின்றும் புறப்பட்டு இலவணசுரன் இருப்பிடத்தை யடைதல் ; இலவணன் சத்ருக்னனைப் பாாத்துச் சினந்து சில கூறத் தொடங்கல்**

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

நெடுகவே ச்யவனமுனி யிந்த வாறு
நிறைந்தகதை கேட்டிருந்து சத்து ருக்கன்
கடுகிமறு நாளெழுந்து யமுனை யாற்றைக்
கடந்துமது புரவாசல் கட்டி நின்றார்
கொடியவில வணன்மதுகாட்டி லாகா ரங்கைக்
கொண்டுமத்தி யானத்திற் குறுகி வந்து
முடுகிவெகு வீரங்கள் பேசி மீசை
முறுக்குவா னிதுசொல்லி யுறுக்கு வானே.

### இலவணசுரன் கூற்று

அடாணா ராகம்] [சாபு தாளம்

பல்லவி

பொறுடா - பொறுடா - பொறுடா - வில்லாளி நீதாண்டா
பொறுடா - பொறுடா - பொறுடா.

அநுபல்லவி

பொறுடா - பொறுடா - வுந்தன் புசபல மறியுறேன்
புருடசிங்க மென்றெங்கும் புகழச்செய்யு றேன்சற்றே
(பொறு)

சரணங்கள்

1. தேச தேசத்திலுள்ள பிராணி - முதல்
ராச ராசர்களையு மூணி - பார்த்தென்
வீசு வந்தனையே நெஞ்சில் தோணிப் - பாரு
மோசம்போ காதேசொன்னேன் திராணி -
[பார்க்கலாமடா
பூசலிட லாமென்று ஆசைகொண்டு வந்தாயே
மீசைக்கார னு மாகி ரோசமுள்ளவ னுனை
வெல்லு மாலினி நல்ல தல்லவுன்
வில்லின் வல்லமை சொல்லி நில்லடா (பொறு)

2. அடர்ந்து நாடுகள்தோறுஞ் சென்றேன் - இரைகள்தேடி
படர்ந்து பலநரரைக் கொன்றேன் - மாங்கிசந் தின்னத்
தொடங்கி அவர்கள்சதை தின்றே - னிரத்தங்குடித்
தடங்காத பசிகொண்டு நின்றேன் - வந்த[ா]யே நீதான்
கிடங்கு வயிறுநிரம்ப விடங்கண்டு புசிக்கவே
தடங்கல் வந்ததா லுன்னை - மடங்க வைப்பது நானே
தத்தி மெத்தவு றுத்தி அத்திர
வித்தை கத்த சமத்தை வைத்திடு (பொறு)

3. நீவந்தது வேதெய்வா தீன - மிதைவிடவு
மாவதென்ன டாவரு மானம் - எந்தனுடைய
சேவகத் தினுடல் தானம் தேவர்
யாவரு மறிவார்நி தானம் - காணலா மிப்போ
நீவிட்டா லுமுனைநா னேவிடே னிசமாக
ஆவிக்கு றுதிபாரு பூவிக்கி துபுதுமை
அக்கி னிக்கணை யைக்க லக்கியு
னுக்கி ரத்தையொ றுக்கி வைக்கிறேன். (பொறு)

## இலவணசுரன் கூறியவற்றைக் கேட்ட சத்ருக்னன் வெகுண்டு கூறுதல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

சகலசன கண்டகனி லவண சூரன்
சத்துருக்க னைப்பார்த்தி வகைதான் கூறி
நகைபுரிந்தா னடிக்கடியீ தெல்லாங் கண்டு
ராமாநு சன்வெகுண்டு தேக மெல்லாந்
திகுதிக்கென் று அக்கினிச்சு வாலை மண்டி
திருக்கண்ணால் நீர்பெருக வீர வார்த்தை
மிகப்பேசி தொந்தயுத்தங் கொடடா வென்றே
மேன்மைதான் பேசுவது பான்மை தானே.

### சத்ருக்னன் கூற்று : தொடர்ச்சி

**கல்யாணி ராகம்]** **[ஆதிதாளம்**

பல்லவி

சத்துருக்க னென்றென்னை யறியடா - அடடா-லவண
சத்துருக்க னென்றென்னை யறியடா.

அநுபல்லவி

எத்திசை யெங்குந் தேடித் தேடி
மித்துருபரி பாலனஞ் செய்து
சத்துருக்க ளெல்லாரையும் - வே
ரறுத்திடும் வீர சூர னாகிய (சத்துருக்)

சரணங்கள்

1. தசரத னெனுமகா ராச தீர - னுயர்
சக்கர வர்த்தி யருளுங்கு மாரன்
புசபல ராம சந்திரகம் பீரன் - அந்தப்
புருஷ மேருவுக்கு அநுசன் சூரன் - நானே
வசமா யுன்னை யெதிர்த்து நூலிட்டு
மாரைப் பிளப்பதி னாலே யெட்டுத்
திசையுஞ் செயபேரி ஒலித்திட்டுச்
செலுத்தவே நீபடிந் திட்டு (சத்துருக்)

2. பகட்டெல்லா மறிவேன் நீகொடு தொந்த - யுத்தம்
பார்க்க லாமுன்ச மர்த்தெல்லா மிந்த
மகத்தான ரிஷிகள் கண்ணுக்கு முந்தவுந்தன்
வாணுளை வாங்கவே நானும் வந்த
வகைக்கேநீ எங்கே தப்புவாய்
மண்மேற் கைகால் பரப்புவாய்
தகத்திடு மிது கப்பு வாய்
சரமென்றுன் மனதி லொப்புவாய் (சத்துருக்)

3. எப்போது பனிரண்டு பகடையும் விழுமா
யேண்டாவீண் மலைப்பு நெஞ்சினி லடையும்
இப்போது தப்பா துன்தலை யுடையும் - படிக்கு
எதிர்த்துவந் தேனே யென்னடா தடையும்
இப்பாசி ருலக கண்டகன்
எனவே தவசிகட்கு ரண்டகன்
றப்பான மனதி லுண்டகம்
அழிப்பதே யெங்கள் தண்டகம். (சத்துருக்)

**சத்ருக்னன் கூறியவற்றைக் கேட்ட இலவணாசுரன் அவனை இகழ்ந்து சில கூறத் தொடங்கல்**

**எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்**

பேரகமே யடக்கியுந்தன் மார்பைத் தானே
பிளக்கவந்தே னெனச்சொல்லிச் சத்து ருக்கன்
வீரகளை பொருந்தினதை இலவ ணன்றான்
விதங்கண்டுங் காணுத விவேக ஞகி
பூரகும் பகவிரேச கத்தால் யோகம்
பூண்டயமு ஞதீர வாச வேத
பாரகரை வணங்காமற் றூனி ரம்பப்
பகைத்திட்டா னிதுசொல்லி நகைத்திட் டானே.

**பைரவி ராகம்]** **[ஆதி தாளம்**

**பல்லவி**

நாடிநாடிநான் தேடிக்கொண் டிருந்தேனே
ராமன் தம்பிநீ தானே.

**அநுபல்லவி**

தேடிப்போன மருந்து காலிலகப் பட்டாப்போல்
சிக்கிக்கொண்டாயே சத்து ருக்கனும் நீயாயுத்து(நாடி)

**சரணங்கள்**

1. என்றாயு டன்பிறந் திலங்காதி பத்திய
மேற்றா விராவணனைப் பண்டு
ஒன்றான மனைவிநி மித்தமாகக் காட்டி
லுள்ளகு ரங்குப்படை கொண்டு
கொன்றா னரக்கர்கள் குலமறுத் தானே - ராமன்
கொண்டுபொ றுத்தேன்மனங் கண்டு
நன்றாயி ருந்ததடா துர்ப்புத்திக் காரரே
நாட்டிலினி மேலென்ன வுண்டு (நாடி)

2. மெள்ளமெள்ள வந்துமிள கென்று சுக்கென்ற தாகும்
விந்தைக்க தைப்போ லிந்தப்பூமிக்
குள்ளே ஆட்டைக்கடித்து மாட்டை மனிதனையுங்
கூடக் கடித்தது போலநேமி
துள்ளிக்கொண்டு நீதெய் வாதீன மென்முன்வந்து
தொந்த யுத்தங்கொ டென்றசாமி
உள்ளவத்திர சத்திரங்க ளெல்லாந் தெரிந்துன்கையி
லெடுத்துக் கொண்டா யுத்தகாமி (நாடி)

3. முன்னே உண்டானபேர்கள் பின்னேவரப் போறபேர்
முதலாக நீங்களெல்லாந் தானே
சொன்னே னென்று பாரெந்தன் கையிலடி படாதாருந்
துரும்பாய் மதித்திடுவே னானே
என்னுடை வதிட்ட முன்னைக்கொண்டு விட்டதடா
எங்கேதப்பிப் போவாய்வீர வானே
வன்னிக்கோட்டை தன்னிலொரு வெண்ணெய்ப்
[பதுமை கூத்தாடு
மானதடா வாதடா சொல்லுவானே. (நாடி)

## சத்ருக்னன் இலவணனைப் போருக்கு அழைத்தல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

கரந்துடைமேல் கொண்டுதட்டி தெய்வா தீனங்
கண்டேனே சத்துருவை யினிவி டேனே
உரம்பிளப்பே னெனயிவ்வா றுரைக்கக் கேட்டு
முயர்பரதா நுசன்அடடா வசுரர் வீணை
நிரம்பயேன்பி னத்துகிறாய் சமரின் முன்னே
நில்லடா தொந்தயுத்தங் கொடடா வென்றான்
மரம்பிடுங்கிக் கொண்டெறிய இலவ ணன்றான்
வந்திட்டான் கண்களுஞ்சி வந்திட் டானே.

## சத்ருக்னன் - இலவணன் போர்

ஆனந்தபைரவி ராகம்] வண்ணத் தரு [ஆதி தாளம்

1. சத்துருக்கன் றிரமது பேசிய வலிமை
யறிந்துங் கண்கள் சிவந்துங்
குத்திரக் கண்டக னிருதோளில்
ஒருகை யறைந்துங்
துண்டரிகங் கொண்டவ னோடிவெருண் டெழுந்து
லவணா சுரனுங் கடிந்து
நெறுநெறு நெறெனவே சிங்கத் தந்தமே
கறடெற டிடுகடி கொண்டுத்தும் பெரு;

2. கப்பு விடம்படர் மரமானது மலையென வொன்றுஞ்
செங்கையி லங்கொண் டப்படிக்
கங்கவ னுரமேல் வீழ
விசிறி யெறிந்துஞ் சண்டுதல் கண்டும்
பரதாநு சனுங்கரங் கொண்
டொருபாணங் கொடும் பிளந்துஞ்
சததுனி படவே திரும்பத்தன் கையில்
மிதமில தருக்கள் பிடுங்கிக் கொண்டெறி;

3. யத்தடுத் துஞ்சர மழையானது
மிகவே சொரிந்துந் துண்டமது
கண்டதிறத் தினகணை சாகர னுரமது
கண்டும் புண்பட விண்டும்புலி போல சினந்து

நின்றுஞ் சலியா தவிதந் தெரிந்துங்
கலகலென வேதகை கொண்டக் கண்டக
னிலவணன் மனதினி லுஞ்சற் றுந்துயர்;

4. தொட்டிருக் கும்பருவ மிலாமலே-ஒயிலுட
னங்குஞ் செங்கை யதுகொண்
டெட்டிநிற்கும் பெருமர மானது
மிகவு முயர்ந்துங் கொம்பு படர்ந்துந்
துடியாக விருந்ததுங் கண்
டடியோடே பிடுங்கி நின்றுந்
தலையதி லடிபடவும் பட்டங்களே
நிலைதள றிடவே விழுந்திட்டுங் கன ;

5. திக்கு முக்குங் கொள்மதி யானது
மிகவுமறந்துங் கண்க ளிருண்டுஞ்
சக்கரத்தின் சுழல்வது போலவே
சுழல்வ தறிந்துஞ் சிந்தைக ளைந்துந்
திறவா னோர்களும் பயந்துந்
துறவோர்கள் நடுங்கி யங்கம் பதறிட
உருவசி ரம்பைப் பெண்களை முதல்வர
லறி வயங்கிக் கம்பமி;

6. குத்திருக்குந் தருணம தாகியு
மிலவண னென்றுந் தன்பெய ரெங்கும்
பெத்திருக்குங் கயவ னென்னுமலே
ரகுகுல துங்கன்
தம்பியை வென்றுஞ் - சய
மாலை புனைந்த மென்றுஞ்
சுயமாக நினைந்திருந்து மரமனையினி
லுமவனு மைழந்திட்டுந்
துயவர னருள்படை தனையுங்கைக் கொண்டிலன்.

7. மட்டி துட்டன் தனது பிராண நிலையை
மறந்துங் கும்பி வருந்தும்
பட்டினிக் கங்கிரை களுமாகிய சுமைகள்
பகுந்துந் இன்றிட வென்றும்

படுபா விதுணிந் தங்கிருந்
தடுபோ தேநிலங்க ணின்றுங்
கடிகையு மறையொ டிரண்டிற்
செங்கை யீரொடு விலதுடனு-மெ
ழுந்திட் டன்பொடு;

8. சத்துருக்கன் றைரிய மீறிட விருடிகள்
மிஞ்சுந் தென்புற வந்துந்
துத்தியப் பண்பொடு வுபசாரமு
முதவின துங்கொண் டங்கை விளங்குந்
திரமான கனம்பொருந்துஞ்
சரமேதி வியந்துலங்குந்
திகுதி குதிகெனவே மண்டிச் செந்தழல்
மிகுவட வையென நிரம்புற் றிந்திரன்;

9. வச்சிரத்தின் றிறமை யகோரமு - மிருமுனை
கொண்டுந் தங்க மணிந்துங்
குச்சிதச் சந்தனமன் சொரியுநிண
மேதிமிர்ந்தும் பொங்கி யெழுந்துங்
கழுகொடிற கும்புனைந்துங்
குழுவான பரந்துமண்டுஞ்
சுரர்கள சுரர்மலை யருகிட்டுந் - துயர்
பரவு கொடிய பிரசண்டச் செங்கணை;

10. தொட்டுவிட் டேந்திட மதிலெதிலு மதிக
சயங்கொண்டும் பலமிஞ்சுஞ்
சட்டமி குந்திரு மேருவையே
திருமுகங்கொண் டண்ட நடுங்குந்
திருவாளி கரந்தொடுங் கண்
டருசோதி நிறைந்த தெங்குஞ்
சகல வுயிரு மனமஞ்சிக் கண்டது
மிகவு மமரர்முனி சங்கக் கந்திரு;

11. வக்கு லத்தின்றலை வருமாகவே - பிரமரிடஞ்
சென்றிக் கோலம்புக்
தக்க மெய்ப்பண்டனை யொருநான்முக மதிலுரை
யெந்தந் தந்தை சகந்தன்

கடலியானை தொடங்கி நின்றுங்
க்டையானை வெறும்பி னந்த
மூலகமு முயி........ம் பத்தம்
தந்திட மவாய்வய விதியிங்குற்றும் ;

12. இப்படிக் கும்பிற வுலகே மையு மதிர்தல்
செய்யுந் துன்பந்தனை விண்டுஞ்
செப்பிடக் கம்பமு மிதுவே வரவுக
மதினந்தஞ் சந்துக ளந்த
மிதுதானோ கலங்கலவ
தெதுதானோ சொலுந்திறந்து
மிதுபுதுமைகள் விழிகண்டத் திங்கிலை
பதறுது செவியிலறி யறிவித் தொன்றிலை.

13. கட்டளைக் குங்கன மு[வ]மை வேறிலா
எனவே வணங்கும் - பண்பது கண்டுந்
திட்ட மட்டுஞ் சொலுவர் பிதாமகன்
இலவண சண்டன்றன் றலைதின்றங்
குயிர்மாள விடுஞ் சரந்தன்
சுயவீரம் பொருந்து கின்றுந்
தசரதனைய னுக்கந்
திட்டந்தரு புயபல மது
கண்டு நெருங்கிக் கொண்டு-மு

14. யுத்த கட்டந்தனில் விடுசாயக
மிகுதழல் மண்டுங் கமரம தென்றுஞ்
சத்துருக்கன்பல சாலியுமவ
னமரென்றுற பின்புறை கண்டுந்
தலைநாள்முத லிந்தவிஞ்சை
நிலைகேசவ னின்சரம்பண்
டிதுவரி யுருவ மிலங்கிக் கண்டகர்
மதுகை டவருயிர் கொன்றிட் டுஞ்ஜய ;

15. மிக்கதைச் செங்கர மதிலேதரி
சமய மறிந்துங் கண்டிடு மென்றுங்

தக்க விட்டம் பெறவுரை போதுயர்
கடவுளர் சங்கத் தென்பொடு வந்துந்
துயவானில் விறைந்து நின்றும்
பயமான தொழிந்து கண்டு
நலமுள பொழுதில் மண்டிச் சண்டையி
லிலவண னுரமதி லும்புக் குங்குறி;

16. வைத்தி ழுத்துஞ் செவியள வானபின்
விடவு மெழுந்துஞ் செஞ்சுட ரெங்குஞ்
சுத்த முறகுண்ட மதனிலே - செய்யைவிடு
தருணங்கண் டங்கி சொரிந்துஞ்
சொலி வாகிய வன்றங்கங்
குலைவாக வுரம் பிளந்து
முயிர்பருகியு மிவரண ருடைக்குஞ் சயமுயர்வரு
தலைமிசைந் திட்டன்றமர்
இலவணனுக் காவியது போன.

**இலவணனைக் கொன்ற சூலம் பரமசிவனிடம் சென்று சேர்தல்: தேவர்களும் முனிவர்களும் சத்ருக்னன் முன்னே தோன்றி, வேண்டிய வரங்களைக் கேட்பாயாக எனல்**

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

சாடியிந்த வகையிலவ ணனும்வி ழுந்தான்
தானதுகண் டச்சூலஞ் சகல பூத
கோடிமிகு தேவர்முனி வோர்கள் பார்த்துக்
கொண்டிருக்க வுருத்திரன்பாற் செலவே கண்டு
நீடியகீர்த்தி பெறுமிரா மானுசன் முன்னே
விபுதரி யாவர்களு நெருங்கி நெஞ்சில்
நாடியதெல் லாந்தரவே வந்த திந்த
நாளென்றார் வரமென்ன கேளென் றாரே.

### இதுவுமது

பிலஹாரி ராகம்] [ஏக தாளம்

**பல்லவி**

வரமென்ன கேளீர் ராமா நுசனே - சொல்லையா.

**அநுபல்லவி**

நரபாலனே யிந்தலவண சுரசங் காரனே (வரம்)

**சரணங்கள்**

1. தெய்வாதீன மாயிந்த பொய்வாரிய லவணனை
அடித்தீ ரேமெய் வாசகனே யின்னும் (வரம்)

2. சயசீல ராகினீர் புயவீர னீரையா
தயையாயிந் திராதிதேவர் சுயமாய்வந் தோமேயிங்கே
(வரம்)

3. எங்கள் தரிசனமே மங்களமுமக் குண்டாம்
சங்கையில் லாமலேகே ளுங்கன புண்ணியனே. (வரம்)

## மதுபுரத்தையாளும் வரந்தருமாறு சத்ருக்னன் வேண்ட தேவர்கள் அளித்தல்

**எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்**

வேண்டியது யாதுவரந் தருவோ மென்று
விண்ணவரெல் லாமகிழ்ந்து கேட்க வன்பு
பூண்டமன தானபர தானு சன்றான்
புவியிலிந்த மதுபுரியைப் புரக்க வென்றே
ஈண்டுவரந் தாவெனவே வப்ப டிக்கே
யிந்நகரந் தான்சூர சேன மீதே
யாண்டுவா வெனக்கென்றான் சேனை யெல்லா
மழைப்பித்தான் உலகமெல்லாம் பிழைப்பித்
[தானே,

## சூரசேனம் என்னும் நகரில் பலரையுங் குடியேற்றிப் பன்னிரண்டாண்டுகள் சத்ருக்னன் ஆண்டுவருதல்

**கல்யாணி ராகம்]** **[ஆதி தாளம்**

பல்லவி

*பட்டணங் குடியேற்றியே - வருடமோர்*
*பன்னிரண் டிருந்தன ரே.*

அநுபல்லவி

*அட்டதிசையும் புகழும் ராமாநுசனே*
*சட்டமுள்ள சூரசேன மென்னும்* (பட்டணம்)

சரணங்கள்

1. *மந்திர மாவணஞ் சித்திர சாலையு*
*மந்திர மேடை யுத்தம சோலை*
*சந்திர காந்த திண்ணைய நேகஞ்*
*சுந்தர மாய்வளர் நல்ல தடாகம்*
*விந்தைய தாகிய தோரண வீதிகள்*
*சுந்தர மேவிய மானிட சாதிகள்*
*சிந்தைகள் கூறவே மாமநு நீதிகள்*
*சந்தத மேயக லாத மகாதிகள்* (பட்டணம்)

2. *மதுரையு மான மதுபுரி தேவர்*
*தமதுரை யாயினு லேயுமானு பாவர்*
*சதுரர்க ளான வீரர்க ளேக*
*சதுர கசந்தேர் பரிமித மாக*
*அதிசய தானிய மாமணி வாரிகை*
*நிதிகளு மாடவர் தாமகிழ் காரிகை*
*அதிநவ பாவலர்கள் சூழ்வரு பேரிகை*
*விதிவித மேளவி நோதமோர் சாரிகை*(பட்டணம்)

3. *கோகனகை குடிகொண்டு மென்மென் மேலே-தான்*
*கோகன கபாற் கறந்திட நுதலே*
*யாகங்கள் பூசுரர் தான்செய்து மேற்றி*
*யாகங்கள் வேண்டிய துந்தா மாத*
*மேகமும் மாரி பொழிந்திட வேயெழு*
*ஞகதி நானது வம்புலி பாதிமுன்*
*ஞகவி பாசமி குந்திடவே யமுதார*
*முாக வளர்ந்திடு கோலமும்.* (பட்டணம்)

## சத்துருக்னன் பன்னிரண்டாண்டுகள் மதுபுரத்தை யாண்டு பின்பு அயோத்தி செல்லுதற்குப் புறப்படுதல்; இரவில் வால்மீகி முனிவரது ஆச்சிரமத்தில் தங்குதல்

**எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்**

*மதுபுரிக்கே யலங்கார மரசாய்நின் றானே*
*வருடமோர் பனிரண்டி லயோத்தி யாளும்*
*பதியவரை யெண்ணியமைச் சுகளை யங்கே*
*பதித்தொரு நூறுபுரவி களுமே தேரி*
*லதிவேக மாய்நடந்து வெட்டா நாளில்*
*அய்யர்வான் மீகரைக்கண் டடிப ணிந்தான்*
*மதுரகந்த மூலமுண்டன் றிரவு மங்கே*
*வசிக்கின்றான் முனிவர்சொலும் ருசிக்கின் றானே.*

## வால்மீகி முனிவர், சத்ருக்னன் இலவணனைக் கொன்ற வீரச்செயலைப் பாராட்டிக் கூறல்

**பைரவி ராகம்]** **[ஆதி தாளம்**

**பல்லவி**

*மானுபாவரே ராமநுசனே - ஆசீர்வாத மையா வாரும்.*

**அநுபல்லவி**

*மானவ னயோத்தி மானகர் தனில்ராமன்*
*மானய குணன் தன்ச மானது ளைமணியே* (மானு)

**சரணங்கள்**

1. *உங்கள் குலந்தனிலே உரியோர் - மநுமுதல்*
*உண்டான ராசராசர் பெரியோர்*
*தங்களா லாகாத காரியஞ் சிறுபாலர்*
*தானீ ரொருத்தர்நின்று சாதித்தீர் செய்பாலர்* (மானு)

2. *ராமனிரா வணனை வதைக்க - நீருமிந்த*
*நாட்டினி லிலவணனைச் சிதைக்க*
*தாமிதி ரண்டினால் மூவுலகின் பயங்கள்போச்சு*
*சகலபூத கோடிகள் தமக்குநிலை யுண்டாச்சு* (மானு)

3. *இலவண சுரனங்கே முறிந்தே விழுந்தத்தை*
*யிந்திரன் சபையில்கண் டறிந்தே*
*உலகறியச் சந்தோஷங் கொண்டேன்தெய்வப் பிரசன்ன*
*உச்சிமோந்து பார்க்கவேணு முண்மையுள்ள*
*மன்னர்மன்ன.* (மானு)

## வால்மீகி முனிவர், சத்ருக்னனுக்குத் தாமியற்றிய இராமாயண காவியமாகிய மதுரகீதத்தைப் படித்தல்; சத்ருக்னன் கேட்டு மனமுருகி ஆனந்தக் கண்ணீர் பெருக இருத்தல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

*ஆதித்தன் குலதிலக னிரகு நாத*
*னநுசனுக்கே வால்மீக ருபகா ரஞ்செய்*
*தாதித்தி யங்களுந்தா னீந்து ராமா*
*யணகா வியக்கிரந்த மதுர கீதம்*
*போதிக்க வானந்தக் கண்ணீர் தானே*
*பொழிந்தொரு முகூர்த்தமதி மயங்கித் தேறச்*
*சாதித்தார் முன்னடந்த சரிதை யேநி*
*சங்கண்டார் நவரசவி தங்கண் டாரே.*

## வால்மீகி ராமாயணப் பெருமை

ஆனந்தபைரவி ராகம்] [அட தாளம்

### பல்லவி

*சங்கீத ரசபுஞ்ச ராம சரித்திரமு மிதுவே - சமதள*
*சங்கீத ரசபுஞ்ச ராம சரித்திர மிதுவே.*

### அநுபல்லவி

*சங்கதி துலங்கிய தான வரிசை*
*தந்திரி யிலக்கண மீதான*
*இங்கித லயங்கள் தானிசமாக் கொண்டு*
*இசையுள்ள சுரங்கள் பேசு.* (சங்கீத)

### சரணங்கள்

1. *மண்டலவர் கொண்டாடவே தானே*
*பண்டுகண்'ணில்கண்டது போலே*
*கொண்டுதான் கூடியிங்கே நடக்கிறுப் போலே*
*விண்டது காதுக்கமு தாகுது*
*வேண்டின மரம் பாலது ஊறுது*
*பண்டித பாமரர் சாதாரணங்*
*கொண்டிப்படி நிரந்தர மேலான* (சங்கீத)

2. இன்னு மின்னுஞ்சொன் னலுமே - கேட்க
'நன்னயங்க ளுன்னிதமு மாகு
மன்ன ராமாநுசனே முனித்தலைவர்
பன்னக சாலைத் தடமானது
என்ன புதுமை காணுது தோணுது
சன்னிதி மாதவ மீதே - புவி
தன்னில் சொல்லி விளங்கிடுமே நய (சங்கீத)

3. சிசுவுடனே பசுபாம்பு மேதானே
அசையாம லிசையறியு மையா
பசியெல்லாந் தீருவது நிசத்தி லுண்டு
இசையில் பாடல்வசை யாகுமே
ரசிகர் செவியி லேறுமே தேறுமே
உசித மனோகர ராமாயண
பசனத்தினி லிசைத்திடு தேசிக. (சங்கீத)

### இராமாயணங் கேட்டு சத்ருக்னன் வியத்தல்

#### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

நவவியா கரணவித வேத ரூப
ராமாய ணப்பிரபந்த சரச கீதந்
தவமுனிவர் வால்மீகர் சரசுவதியி னலே
தலைவரங்கே ஆச்சரிய முடனே கேட்டு
விவிடமெவி டமிதுதான் கனவோ கண்ட
தென்னவிது வினவவந்த முனியை யென்று
ரவருமது வொணக்கூடாதென் றிவகை சொல்லி
யமர்த்தினர் மிகமிகவுஞ் சமத்தி னரே.

### இரவில் இராம கர்ணமிருதங் கேட்ட சத்ருக்னன் காலையில் வால்மீகி ஆச்சிரமத்திலிருந்து புறப்பட்டு அயோத்திமாநகர் சேரல்

#### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

இவிதமதா யிராமகர் ணமு தத்தை
யேத்திரவு நீக்கியுதய மத்தெ ழுந்து
கவாம்பரி செலுத்தவே தேர்மேற் கொண்டு
கடுகியே சத்துருக்க னென்னுஞ் சிங்கங்

குவிகரங்கொண் டடிபணிந்து முனியுத் தாரங்
கொண்டுகுதி ரைத்தலவ ருக்கே சூழ்ந்து
திவிபதினைந்து கடிகையி லயோத்தி யாமுச்
சிதங்கண்டார் சாமிசெம்பொற் பதங்கண் டாரே.

## சத்ருக்னன் இராமபிரானைக் காணுதல்.

மோகன ராகம்] [ஆதி தாளம்

### பல்லவி

திருக்கண்ணாலே காட்சி கண்டானே - ஸ்ரீ ராமனைச்சத்
துருக்கனங்கே சே(ர்)வை கொண்டானே.

### அநுபல்லவி

நெருக்கமா னதேவ கோடியிருக்கவே
நடுக்கற் பகத்தருக் கெல்லா - நாத ராகண்ட
லருக்குநி கராய் விளங்க (திருக்கண்)

### சரணங்கள்

1. சாமள மேனியுஞ் சுயமுங் - குண்டல காதுஞ்
சந்திர பிம்பமுக நயமு - மாசாநுபாகு
தாமரை விழித் துயமும் - பராக்கிரம
சத்தியே மிகுந்த புயமும்
கோமள மந்த காசமு - மாமதுர பாஷணமுங்
காமகோடி சுந்தரத்தே கோமயமாய் வீற்றிருக்க
(திருக்கண்)

2. கோதண்டந் தரித்த கரமு - மநுநெறிச் செங்
கோலு மாக்கினைச் சக்கரமு - மரவிந்தப்பொற்
பாதமு மரைநூ புரமுந் - திசைகளெங்கும்
பளபளப் பானபீ தாம்பரமும்
பூததயை மிகுஞ்ச நாதனனே யிவனென்றும்
ஆதவன் குலத்தினுக்கே நாதனை அயோத்தி தன்னில்
(திருக்கண்)

3. நவமணிக் கிரீட பதியே - தேசதேசத்தில்
ராசராசர்களுந் துதியே - சொல்லவே யெங்குங்
குவியவே கப்பங்கொள் நிதியே - பெரியவர்கள்
கோஷ்டி வளர்நிதி விதியே
இவரெனப் புகழ்ந்து கூற - நவரசப் பிரபந்த சார
சுவைகளைப் பொழிந்து மேவை பவமிகும் திருந்த
[போது. (திருக்கண்)

## இராமபிரான் திருவடிச் சேவையைத் தனக்கு என்றும் அருளுமாறு இலக்குவன் வேண்டல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

கோடிசூ ரியப்பிரபை வீசுந் தேகங்
குளிர்ந்தவிது மண்டலவ தனஞ்சி றந்து
நீடியகீர்த் திகளிருக்கு மிடமாய் நின்று
நீலமணி வண்ணனவ னிவனே யென்று
நாடிமன தன்புகொண்டு அடிய ளந்து
நமஸ்கார விதிமுறையே செய்து பாதந்
தேடிவந்தே னினிப்பிரியா திருந்துன் பாதச்
சே(ர்)வைதான் தரவருட்கண் பார்வை தானே.

பந்துவராளி ராகம்] [ஆதி தாளம்

பல்லவி

எந்த நாளு மேமது புரந்த ளுதிக்க வரந்
தந்த நாதனே ரகு நந்தனு.

சரணங்கள்

1. தேவரீ ரேவல்படியே பாவ யிலவணு சுர
னேவத மாகினன் கண்டு - தேவர்க ளானந்தங்
கொண்டார். (எந்த)

2. விரிகடல் சூழ்புவி யெங்குந் தரிகொளவே யந்தமது
புரியுஞ்சாமி கிருபைதானே பரிபாலனஞ் செய்ததையா.
(எந்த)

3. பொன்னடி விட்டுப்பிரிந்து தன்னந் தனியே யிருந்தேன்
பன்னிரண்டு வருடமே யென்னவென்று சகிக்கலாம்.
(எந்த)

4. விள்ளுறேன் தாய் தன்னைவிட்டுப் பிள்ளைபிரிந் திருக்குமோ
முள்ளுமே லிருந்தாப்போலே வள்ளலேநா
[ணங்கிருந்தேன். (எந்த)

5. உத்தரவில் லாததரு ணத்திலேவந் தேனென்று - கோ
பித்திடச் சகியேனைபொ றுத்திடவேணு மென்னையா.
(எந்த)

6. பார்த்தமுக மெல்லாமங்கே வேற்றுமுக மாயிருக்க
நாற்றுநாற் பத்துநால்மதி காத்திருக்கப் பாத்திரமோ.
(எந்த)

7. அண்டரர்கள் முனிவரர்கள் கண்டதிச யிக்கவே - பூ
மண்டலமதில் வந்தகோ தண்டராம சாமியென்னை.
(எந்த)

## இராமபிரான், மதுபுரத்தை ஆட்சி புரிதலே கடமையெனச் சத்ருக்னனுக்கு அறிவுறுத்தல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

மன்னர்சிகா மணியெனப்பூ மண்ட லத்தில்
மநுகுலத்தி லவதரித்து வளரா நின்ற
இன்னமுதைக் கண்டவர்க்குப் பசியோ யில்லை
இன்பவா ரிதிதானே சாமி சே(ர்)வை
இன்னமுநான் பிரிந்திருக்க மாட்டே னென்ற
இளையதம்பி வசனங்கண் டறிந்து முன்னே
சொன்னவகை மதுபுரிராச் சியமே யுந்தன்
சுமையென்று ளிலத்தரசர்மு றைமையென் றனே.

இராமன் கூற்று : நொடர்ச்சி.

சாரங்கா ராகம்] [சாபு தாளம்

பல்லவி

மனதில் சஞ்சல மென்ன சொல்வாய் - உந்தன்
மதுராபு ரிக்குநீயே செல்வாய்.

அநுபல்லவி

கனநிறங்கொள் யமுனாநதி மாலி
காமரண மதுபுரிவள வேலி
தனமிருந்திட வேநீ பரிபாலி
தைரியம் பெருகும்நீ குணசாலி (மனதில்)

சரணங்கள்

1. குழந்தைப் பிள்ளை யாகவே - இருப்பதுவே சிறிதுகாலங்
கூடி யௌவனம் வந்தால் - பாரம் வகிப்ப தநுகூலம்
தழைந்த திப்படி யல்லோ - பூமி நடத்தைகள் விசாலஞ்
சத்திய முறைமை தெரிந்து நடப்ப துந்தன் சீலம்
எழுநடந் தோடியுந் தேசாதி தேச
மெங்குந் திரிந்துமே சரீரப்பிர யாசம்
உழன்று தெளிவுகொண்டு மனதுக்குல் லாசம்
முடனே உயிர்களைப்பிழைப் பார்புகழ்வி லாசம்
(மனதில்)

2. நாலுபே ரண்ணன் தம்பி - யிருந்தா யெல்லாமொரு வீட்டு
நடுவே கூடியிருப் பதுவோ - ராசருக் கெல்லாந் தேட்டு
மேலும் பரசமாப் தானங்கள் பிடித்தே யந்த நாட்டு
வேந்த னென்றுபேர் வாங்குவ தல்லோவிளை யாட்டு
நாலங்கி சையறிந்து வீரஞ்செய் வாரே
ராசர்கள் விட்டுப்பிரிவ தனுக்கஞ் சாரே
பாலனே நீசெல்லு வாயுந்த னூரைப்
பாலனஞ் செய்வது பிரபலமுன் பேரை (மனதில்)

3. ஏழுநா ளென்னுடன் கூடவிருந்து வாசம் பண்ணு
இதற்குமே லானநாளி லுந்தனூர்க்கு நீயே நண்ணு
வாழுமந்தத் தருணங்களி லென்னைக் காண யெண்ணு
வரப்போக விருதம்பி நீயே யெனதிரு கண்ணு

ஆழி நிகருங்கம் பீர கலியாணன்
அந்த மதுபுரியை யாண்டிடு வாணன்
சூழும் விசயமலர் சூடுது ரோணன்
சுமுக துணைவனே நீயென் பிராணன். (மனதில்)

## அயோத்தியிற் சில நாட்கள் தங்கியிருந்த சத்ருக்னன் மீண்டும் மதுபுரஞ்செல்லல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

தநுகரண புவனபோ கங்க ளெல்லாம்
தான்பிரம மென்றறிமு னிவர்கள் தாமே
அனுதினமுங் கொண்டாடி ராம சந்திரன்
அருளதுதந் திவகைசொல்ல நாலி ரண்டாந்
தினமதனில் பரதனிலக் குமனுந் தானே
சிலதூரம் பின்சென்று திரும்பி னார்கள்
தனதான மதுரைசென்றான் றம்பி யென்னுந்
தளங்கண்டான் ராமன்வெகு வளங்கண் டானே.

## முதுமையுற்ற அந்தணன் புதலவனொருவன் அகால மரணமடைதல்; அந்தணன் அயோத்தியரண்மனை வாயிலில் இறந்தமைந்தனுடன் சென்று நின்று முறையிடல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

அவனியெல்லா மொருகுடையி லிராம சந்த்ர
னுநா ளங்கொருநா ளருகே சூழ்வை
பவமிகுந்த சனபத்தோ ரூரில் தானே
பயிலும்வே தியக்கிழவன் பால னங்கே
அவமிருத்தாய் வயதைந்தில் மடியத் தூக்கி
ஐயனரண் மனைவாச லதன்முன் கொண்டு
சவமதையே வளர்த்திநின்று அடித்து வீழ்ந்து
தளம்புவான் னுயர்வசனம் விளம்பு வானே,

### இதுவுமது

ஆ(தி)[கி]ரி ராகம்] [ஆதிதாளம்

1. பாலகா வுந்தனுயிர் காலனர் கொண்டுபோகக்
காலமா வென்னசொல்லு பாலகா
மூலகா ரணமெந்த னுலறி யப்படா
மோயெளிதா யில்லையே பாலகா.

2. முந்தின சன்மத்திலே யெந்தமா பாவஞ்செய்தி
ருந்ததோ நானறியேன் - பாலகா
இந்தஎன் கண்முன்னே வந்தொரு பிள்ளையாகி
ஐந்து வயதில்நீயே பாலகா;

3. நாட்டிலே கண்டதில்லை கேட்டது மில்லைபாவக்
கோட்டையாய் வந்ததென்ன பாலகா
காட்டியென் கண்ணினுள்ளே காட்டின தெய்வமென்ன
போட்டிதான் செய்ததடா பாலகா.

4- புத்திரசோ கத்திலென்னை வைத்திடவோ வந்துபிறந்
தித்தனைகண் காட்சிதந்தாய் பாலகா
புத்திபூருவ மாகநான் உத்தொருபொய் வசனமு
ரைத்ததில்லை நாவினுலே பாலகா.

5. பரர்களுக்ககீங் கிசையொன்று மவர்நினைத்த தில்லையிந்தத்
தரணியில்நா னென்னசெய்வேன் பாலகா
இரவுபகலும் விடாம லுரமதினில் வளர்ந்தாயே
மரணமடைந்த தென்னடா பாலகா.

6. கனியுதிருவ் தல்லாமலகி யாயத்தில் பிஞ்சுதிரச்
சனியனேவி தென்னசொல்வேன் பாலகா
பனியைநம்பி யேரதுகட் டினவகையா கவேநானு
முனையுநம்பி யிருந்தேனே பாலகா.

### தன் புதல்வனுயிரை மீட்டுத்தருமாறு இராமபிரானை மறையவன் வேண்டல்

#### நேரிசை வெண்பா

உரோதனஞ்செய் திவ்வகையே யுற்றமறை யோனும்
வரோதயவி ராமரெதிர் மாற்ற - மரோவந்தோ
உன்கொடிய பாவத்தா லுற்றவினை தீர்த்திவன் - சீ
வன்கொடுவா வென்றலறு வான்,

## மறையோன் இராமனை வேண்டல் : தொடர்ச்சி

நீலாம்புரி ராகம்] [திரிபுடை தாளம்

பல்லவி

ஏறுத பழிதீரு மிராம னே - முறையோ
ஏறுத பழிதீரு மிராம னே.

அநுபல்லவி

பாராளுங் கோதண்ட பாணியே அபய மையா (ஏறுத)

சரணங்கள்

1. உமது ராச்சியமிதில் உண்டாச்சு தனியாயம்
சோமாவது பழிதானே தொடர்வதென்ன அபாயம்
ராமனுக்கின் னேரிடத்தில் நடவாது இந்தமாயம்
சமரசங் கொண்டேசீவன் தருவீர்நீரே சகாயம் (ஏறுத)

2. பாலனுயிர் பிழைக்கப் பண்ணுமலே போனலந்த
காலனைத் தந்தைதாயுங் காண்பாரென் றெண்ணுமுந்த
மூலவோ ருயிருக்கு மூன் றுயிர் பழிவந்த
காலமதை வாங்காமல் காத்திட வேணுமிந்த (ஏறுத)

3. அட்டிசெய்தீ ரேயாகி லப்படிப் பழிதானே
கட்டிக்கொள்ள மனது கண்டால்நான் [சொல்லுவானே
சட்டமா யுன் னுடைய தம்பிமா ருடனே - நே
ரிட்டுச்சிரஞ் சீவியா யிருங்காணையா சீமானே (ஏறுத)

4. மாதரை யினிலிட்சு வாகுவங் கிசமும்மை
நாதனுக வடைந்த நாதனுகி யெந்தம்மை
ஆதியாய்ப் பாலர்க்கெல்லா மந்தஞ்செய்வ தோவுண்மை
போதும்போதுங் கோசல புரிநிவாச னேசெம்மை (ஏறுத)

5. மரணம் வராதநாளில் மரணம் வருவதென்ன
தரணி பாலர்கணீதி தவறினல் வேதஞ்சொன்ன
வரமுறை பிசகியிந்த வகையாகிச் சனங்களின்ன
தருணமென் றில்லாமலே சாயுமென் பார்கள்மன்ன (ஏறுத)

6. மெய்யாகப் பட்டணங்கள் வெளியூர்க ளிலேயாருஞ்
செய்யாக்காரி யஞ்செய்துஞ் சிட்சக ரின்றி நேரும்
வையகத்தி லேபயம் வருமேயு றுதிபாரு
மையனே ராகவனே அறிந்தெந்தன் குறைதீரும்.
(ஏருத)

### அரசனின் ஆட்சிமுறைத்தவறே தன்மைந்தன் இறக்கக் காரணம் என மறையவன் கூற, இராமபிரான் அதனை விசாரிக்க எண்ணல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

காலகா ரணமன்னர் மன்ன ருக்கே
காலங்கா ரணமாகுங் கண்டாய் ராமா
ஞாலமே விராசாவின் றேட மென்று
நவில்வதற்கோர் சந்தேக மில்லை யிந்தப்
பாலனுந்தன் தோடத்தால் மடிந்தா னென்று
பழிகூறி சவமுடி யிருக்கக் கண்டு
மேலய்யன் மனதுநொந்து மறுவில் தானே
விதிகண்டான் விசாரிக்கு மதிகொண் டானே.

### இராமபிரான், தம்பியர், வதிட்டர் முதலான முனிவர், அமைச்சர் ஆகியோரை அழைத்து ஆலோசனை செய்தல்

இதுவுமது

பாரதனிற் புகழமைச்ச ரெட்டுப் பேர்கள்
பாங்குள்ள வதிட்டரொடு வாம தேவர்
பேரதனிற் பிரபலராந் தம்பி மார்கள்
பின்னுமப்பட் டணசனங்கட் கேமெய்ப் பிக்க
நீரதமே னியனழைக்க வதிட்ட ரோடு
நிறுவியமு னிவோரெட் டுப்பேர் வந்தார்
நாரதமா முனியிந்தக் கதையா ரம்பம்
நடத்தினன் மெய்ஞ்ஞான திடத்தி னனே.

## மறையவன் மைந்தன் மடிய நேர்ந்த காரணங்களை வதிட்டர் முதலான முனிவர்கள் இராமபிரானிடங் கூறல்

**சௌராஷ்ட்ர ராகம்]** [ஏக தாளம்

கண்ணிகள்

1. கோசலபுர வாச ராசராச சேகர ராமா - சத்திய
வாசகமிகு தேவ பவ மோசன ராமா.

2. ஐந்து வயதுமைந்தன் மடியவந்த வகையை ராமா - கேளும்
இந்த வுலகில் முந்தி யுகத்தந்த ணர்களோ ராமா.

3. அவனிதனிலே தவசுசெய் பவர்கள் வேதரே ராமா - வெகு
சவரணை கொண்டு கவலையில்லாமல் எவரு மன்பொடு
[ராமா.

4. பூமியெங் குந்தே சோமய மாகமது வெல்லாம் ராமா - இந்த
நேம மதனால் தீமைக ளின்றி மாமகி மையாய் ராமா;

5. சீலந்தன் னாலே காலங்கண்டுவி சாலங்கொண்டது ராமா -
[ஒரு
மூலஞ் சொல்லுறேன் மேலறிந்திடு நூலறிந்தவி ராமா.

6. நிலத்தில் தேசுகள் சொலித்துமேபிர பலித்த தையனே
[ராமா - அந்த
நலத்தையென் னென்று சொலத்திற மையா பலத்த
[கோதண்ட - ராமா.

7. சாதினால் வருநீதி வழுவொண்ணு திருந்தாரே ராமா - உயர்
வேதியர்களே மாதவஞ்செபு நீதி பொருந்தி ராமா;

8. நடந்தந்த யுகங்கடந்து திரேதந் தொடர்ந்து வந்தது ராமா -
[பாரி
லடர்ந்து மன்னர்கள் படர்ந்த மாதவ திடம்
[பொருந்தியோ - ராமா.

9. தாங்களுந்தவ மோங்கிவாழ்கவே பாங்கு கொண்டாரே
[ராமா - உயர்
சாங்கியமுத லாங்கும்பகமு வாங்கு பூரகம் ராமா.

10. சேர்ந்தராசேகம் வாய்ந்தயோகமுங் கூர்ந்து செய்தாரே [ராமா - வெகு
பாந்த மாகவே சாந்தமீறிய தாந்தவங்க ளிராமா.

11. சத்திரியரு முத்தவசு பெற்றிருந் தாரே ராமா - அதில்
மெத்த வீரிய சத்தியுமதி கத்தவங்கண்டு ராமா ;

12. தேககாந்திய நேகமாகவி வேகமிஞ்சி யிராமா
யோகசாலிக ளாகமன்னர நேகமாகவே ராமா ;

13. பூசுரமுனி ராசரிஷிகள் மீசுரமொடு ராமா - இந்தக்
காசினியிலே மாசிலாமலே தேசுபெருகி ராமா.

14. சட்டமுடனே கட்டளைகளு மிட்டுமன்ன ரிராமா - சாதி
மெட்டுவரிசை திட்டமுஞ்செய்து நிட்டைசெய்தாரே [ராமா.

15. நூதனமன்னர் சாதனைசெய்து மாதவஞ் செய்தார் ராமா - [இந்த
பூதலத்தொரு பாதமதர்ம மேதரித்தது ராமா.

16. மெய்யகத்திலே பொய்யொருபங்கு கையுறைத்தது ராமா - [எங்கும்
பய்யப்பய்யவே துய்யதேசுகள் நய்யலுற்றது ராமா.

17. பிரசைகட்குயர் திறமையாயுசு குறையலுற்றது ராமா-அந்த
முறைகண்டேதர்ம நெறிதவறும லுறுதியாகவே [ராமா ;

18. சனங்களெல்லாரு மனம்பொருந்துவ சனங்கள்மெய்யாக [ராமா - அநு
தினந்தருமமே தனந்தனமென்று நினைந்திருந்தாரே [ராமா.

19. சாதாரணதி ரேதாயுகமு மேதானிவ்வகை ராமா - சது
வேதாசரணை மீதாய்நடந்து மேதானிரகு ராமா.

20. பிரமசாதிகள் தரணிபாதவ கிரதராகவே ராமா - மற்று
மிருவருமன வரதமவர்க்கே பரிவொடுசெய ராமா.

21. வணிதமாகவே தணிவுடனவர் பணிவிடைசெய்தார் ராமா - [யுக
கணிதமானத ரணியிலேபுகழ் மணியேபின்னுமி ராமா.

22. மண்டானதனி ரண்டாம்யுகத்தில் கண்டாயதர்மம் ராமா - [பின்னி
ரண்டாம்பாதமு முண்டாகினதை விண்டார் சொல்லு [வார் ராமா.

23. பூபதியேது வாபரயுக மேயிறந்தது ராமா - பொய்க
ளேபிரபல தாபவதர்ம மேபிரபஞ்சத்தில் ராமா.

24. விசிதமாகவே வசியர்தாமுந்த வசுகள்செய்தாரே ராமா-யுக
நிசமதாய்மூன்றி லுசிததர்மத்தைத் துசமதுங்கட்டி [ராமா.

25. பூவதில்சாதி மூவரேதவ மேவினுரையா ராமா - பண்டு
தேவர்கட்காகி ராவணவத மேவிளைத்தா யிராமா.

26. நாலாஞ்சாதிக்கு மேலாந்தவசு யேலாதிருக்க ராமா - இனி
நாலாம்யுகத்தில் காலாநுகுண நூலாலுரைக்க ராமா.

27. சகத்தில்மூன்றான யுகத்திலேயிந்த மகத்துவமுள்ள [ராமா - தவந்
தொகுத்துச்சதுர்த்த னகத்தைமீறினன் வகுத்துச் [சொல்லுகிறேன் ராமா

28. அதர்மமேயாகி னதுதுவாபர மிதுசதுர்த்தனல் ராமா - [கொண்ட
ததனுலேவந்த ததிகப்பாவமிவ் விதமுண்டாச்சுது [ராமா.

29. சுயத்தினந்தள சியத்திலுந்தன்வி டயத்தில்சதுர்த்தன் [ராமா - தன்னி
தயத்தில்கொஞ்சமும் பயத்தையெண்ணுமல் செயத் [துணிந்தானே ராமா.

30. காலந்தப்பிய பாலமரண மூலமிதுவோ ராமா - நர
பாலனேகுண சீலனேயிந்த ஞாலமதிலே ராமா.

31. எந்த மன்னர்கள் சொந்தநாட்டினில் எந்தமனிதன்
[ராமா - பாவ
மெந்தவகைபொ ருந்தச்செய்தாலு மந்தநரக
[மடைவன் ராமா.

32. நரகமடைவ னரசனுமந்த நரகமடைவன் ராமா - அந்த
நரன்செய்யும்வினை யிரண்டிலாறினி லொருபங்
[கடையும் ராமா.

33. அப்படிக்குவி திப்பிரகாரம் ஒப்பிதமாக ராமா - உயி
ரைப்புரவாம விப்படிவந்த தப்பிதமையா ராமா.

34. நாடியும்முடை நாட்டிலெங்கணும் தேடித்தேடியே ராமா -
[பால
மூடர்களையே சாடப்புண்ணியங் கூடிவருமே ராமா.

35. பூரணுயுசுஞ் சேரவேதர்ம நேரதாகவே ராமா - இக்கு
மாரனுயிரும் பாரில்பிழைக்கும் வீரகேசரி ராமா.

## இராமபிரான் மறையவன் புதல்வனுடலை என்ணெய்க் கொப்பறையிற் போட்டு வைத்திருக்குமாறு இலக்குவனிடம் கூறல்; விமானத்தில் ஏறிச் செல்லல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

மறித்திந்த வகைநார தமுனி சொன்ன
பேச்சறிந்து பாலனுடை யுடலந் தன்னை
நிறுத்தியெண்ணெய்க் கொப்பறையி லிட்டு வாடை
நேரிட்டு வையெனத்தம் பிக்குச் சொல்லி
உறுத்திபிரா மன்விமா னத்தை யெண்ண
ஒருமுகூர்த் தத்திலது வரவே கண்டு
குறித்துமுனி வரைவணங்கி விமானந் தன்மேற்
கொண்டிட்டான் மநுநீதி கண்டிட்டா னே.

## இராமன் தேரேறிச் சென்று தென்திசையில் ஒருவன் தவஞ்செய்யக் காணுதல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

*தருசுஅம்ப ரந்தூணி கூர்வா ளங்கை*
*தரித்தஜய னயோத்தியிலே தம்பி மாரைக்*
*கனமுடனே வைத்தேபின் மேற்காந் திக்கைக்*
*கடிதாகச் சென்றடைந்து தாங்கி ழக்கின்*
*வனநாடு மலைசெடிகள் நதிக ளோடு*
*வாரிதிக் கரைகளெல்லாம் பார்த்துப் பின்னும்*
*தனதான தென்திசையி லொருவன் செய்யுந்*
*தவங்கண்டான் ராச்சியவை பவங்கண் டானே.*

### இதுவுமது

சங்கராபரண ராகம்] [ஆதி தாளம்

#### பல்லவி

*அருந்தவஞ் செய்வானைக் கண்டானே - ஸ்ரீராமசந்திரன்*
*அருந்தவஞ் செய்வானைக் கண்டானே.*

#### அநுபல்லவி

*பொருந்தியே விமானமேறி பூமியெங்கும் பார்த்த பேமன்*
*திருந்துசத்தி யவசன சீயநர பால ராமன் (அருந்தவஞ்)*

#### சரணங்கள்

1. *தக்கணத் திசையிலொரு மலைக்கு வடபாலாகச்*
*சேர்ந்தநொரு [வெளி]யத னிடமதிற் கால்மேலாக*
*உக்கிர தவத்தில்தலை கீழாக நின்றுயோக*
*மிக்கவே காயக்கிலேச மேபொருந்தி யுறுதியாக*
*(அருந்தவஞ்)*

2. *புருவமய்ய லட்சியத்தில் கண்ணிரண்டும் நாட்டியே*
*பூரண பிராணனைஅ பானனுடன் கூட்டியே*
*நிருவிகற்ப மானச மாதிகொண்டு மூட்டியே*
*நிட்டையிலே தொங்குகின்ற நேர்மையைப்பா*
*[ராட்டியே (அருந்தவஞ்)*

3. வெய்யில்மழை மூடுபனி மாப்பிரசண்ட காற்றிலே
வெட்டவெளி யானமயிர்ப் பாலநெருப் பாற்றிலே
வையுமுட லென்றெண்ணு லேயானந்தக் கூத்திலே
பய்யப்பய்ய பஞ்சையிட்டுப் பாரமேற்று மேற்றிலே.
(அருந்தவஞ்)

## தவஞ்செய்யுமவனைப் பார்த்து, நீ யாவன்? என இராமபிரான் கேட்டல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

பூபதியி ராமனிந்தத் தவஞ்செய் வானைப்
புகலுவான் தாசரதி நானே ராமன்
தாபதா சுபவிரதா கேளு நீயே
தன்னியநீ நாடினது வரமா சொர்க்க
லாபமா வேதியனு மன்னு வித்த
லத்திலிவ் வேசியசூத் திரனுஞ் சொல்லு
மாபலங்கோ ரினவைகளு மென்ன வென்றான்
வசனிப்பா னேதவசி னிசனிப்பா னே.

### சம்பூகன் கூற்று

பாசு ராகம்] [ஏக தாளம்

பல்லவி

நரபதி தசரத நந்தன ராம
ராசனே நானே தவ சாலியே.

அநுபல்லவி

தரணிமீ தினில்நாலாஞ் சாதியில்
தானே பிறந்தேனே யென்றறி (நரபதி)

சரணங்கள்

1. சம்புகனென வும்பிரபல மென்பெயரது தானேஅருந்
தவத்தினு லவ்வுரு வத்தோடே யந்தச்
சுவர்க்க மெனும்வைப வத்தை யெண்ணினேனே (நரபதி)

2. நாடினேன் யோகங் கூடினேன் - உடல்
வாடினேன் தவத்தாலே ரகு
நாதனே - கன போத னேமனு
நீதனே வெகு சாதனை செய்தேன் (நரபதி)

3. மன்னே யொருத்த ரென்னில் - மிகுத்த
மன்னு தவஞ் செய்வாரோ - நல்ல
பிராணை நிரா காரஞ் சுரர்கள்
கோராமை வ ராதரிது (நரபதி)

4. தேவ தத்துவமே வரவென்று மாவல்
கொண்டதி னலே-மனஞ்
செல்லேனே - பொய்யைச் சொல்லேனே - கவ
டில்லேனே - வெகு வல்லாமை பெறு. (நரபதி)

## சம்பூகனை இராமபிரான் கொல்லுதல்; தேவர்கள் இராமபிரானைப் போற்றல்; மலர்மாரி பொழிதல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

புத்தியிலாச் சம்புகன்சொல் மொழியைக் கேட்டு
பூபதிரா மனுஞ்சரே ரென்றெ ழுந்து
கத்திதனை யுறையினின்று முருவி யோங்கிக்
கைகொண்டு மவன்தலையை வெட்டக் கண்டே
அத்தியயி ராவதத்தோன் முதலாந் தேவ
ரடங்கலுங்கே சரியில்வந்து நின்று கந்து
துத்தியஞ்செய் திராமன்மேற் புட்ப மாரி
சொரிந்திட்டா ரிவையிற்றைப் பரிந்திட் டாரே.

## தேவர்கள் முனிவர்கள் ஆகியோர் ஸ்ரீராமனைத் துதித்தல்

செஞ்சுருட்டி ராகம்] [ஏக தாளம்

பல்லவி

மதியே நே ரானனனே - ரகுபதியே
மதியே நே ரானனனே.

அநுபல்லவி

அதிபலசாலி கோச லாதிப ராம சந்திரனே (மதியே)

சரணங்கள்

1. மேதினி மேலே யிவன் - சாதியில் நாலே
தீது செய்து தேவ ருலக
மீதி லேறிவர வெண்ணினன் (மதியே)

2. முப்பது முக்கோடி அமரரை ஒப்பிட் டடிநாடி
தப்பிதஞ் செய்ததைக் கண்டு - பிடித்து
இப்படிச் சங்கரித் தீரையனே (மதியே)

3. ஆரிய சோதகனே தேவ - காரிய சோதகனே
பாரினி லெங்கும் புகழ்பெறு முன்மனங்
கோரின தெல்லாந் தருவமையா. (மதியே)

## இராமபிரான், மறையவன் புதல்வன் உயிர்பிழைத்தெழுமாறு அருளத் தேவர்களை வேண்டுதல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

இந்திரனை யாதியாந் தேவ ரெல்லா
மியம்பியது கண்டுமிக வணங்கி ராம
சந்திரன்சொல் வானடியேன் ஒருவிண் ணப்பம்
சகலவா னவர்கள்பிர சன்ன மாகி
வந்ததுமெய் யாகியந்த வேதி யன்றன்
மைந்தனுயிர் வரவேணு மவர்மீ தென்றான்
இந்தவகை கண்டமர ருவகை தானே
யேறுவா ரிராமனிடங் கூறு வாரே.

## தேவர் அங்ஙனமே அருள்செய்தல்

**ஆனந்தபைரவி ராகம்]** **[ஆதி தாளம்**

### பல்லவி

ராமா ராமா மங்களமுமக் குண்டாமே
ராசாதி ராச ராமா ராமா.

### அநுபல்லவி

நன்மை பெருகு வீரே ராமா - நித
முண்மை தருகு வீரே
பூமண்ட லாதிப ரகுகுல சேகரனே
பூரணனே காரணனே நாரணனே நிகரான (ராமா

### சரணங்கள்

1. எந்த முகூர்த்தந் தன்னிலே - இந்தச் சம்புகனு மிங்கே
வந்தன்கை வாளினல ரிந்த தானதோ
அந்த முகூர்த்தந் தன்னிலே - வந்தணன் பாலனு மங்கே
ஆவி பிழைத்தா னையா ராமா

இந்தநல்ல தினந்தேடி யிசைந்துன் னருமைபாடி
பந்துசனத் துடன்கூடிப் பரிந்து சுகத்தில்நீடி
பாரினி லாரிய சூரியர் சீரிசை
பதியினில் மேவியு மதிபதி யாகினன் (ராமா)

2. துட்டர்களை வெட்டியெங்குஞ் சிட்டபரி பாலனஞ்செய்
தட்டதிசை யெங்கிலுங்.கெடிசெலுத்திய
கட்டளை தவறாதநின் சட்டமே சட்டமாமினிக்
கவலை தவிரும் ரகுநாதா
வட்டநெடுங் கடலேழும் வரையுலக மீதேழுந்
திட்டமாயுன் கீர்த்திசூழுஞ் சிறந்துங் குலமேவாழும்
செஞ்சர பஞ்சர குஞ்சர நெஞ்சர
சிக்கரு ணாலய யக்கல சுபாகர (ராமா)

3. உத்தம வகத்தியர் சலத்திலே படுத்திருந்து
மெய்த்தவஞ் செய்தார் பனிரண்டு வருஷமாய்
சித்தியான தீட்சையிலப்போ முற்றுதலா லும்வரை
சேவை செய்குவோம் வாரும்ராமா
புத்தி பூருவமாகப் பகவநாங் களும்ஏக
உத்தம நீருஞ்சு பாகமுடனே வாரும்
மோக யோகவி ராகவனே கருணாகர
வுபநிட தமறி சுபபல தாயக. (ராமா)

## தேவர்கள் விடைகொண்டேக, அகத்தியர் இராமனைப் போற்றல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

தீதறுதே வர்கள்சொல்லி விமான மேறிச்
சென்றிடப்பின் விமானமே விராமன் சென்றான்
மூதறிவா மகத்தியரைச் சகல தேவர்
முன்கண்டு பூசைகொண்டு ககனஞ் சென்றார்
நீதிநெறி ராமன்முனி யடிப ணிந்து
நேர்மைகண்டு வாவாவென் றருமை யாக
மாதவங்கட் கிடையூறும் வியாதிக் கேநீர்
மருந்தென்பார் எனக்குவெகு விருந்தென் பாரே.

## அகஸ்தியர் இராமனைப் போற்றல்

நோடி ராகம்] [ஆதி தாளம்

பல்லவி

வருக வருக ராமா மார்த்தாண்டகுல சோமா
வருக வருக ராமா.

அநுபல்லவி

முருக மலமலர்த் திருவடியி லன்பு
பெருகுந் தசரத னருளுஞ் சுத்தமணி (வருக)

சரணங்கள்

1. சம்புகனென வந்த அதிகப் பிரசங்கி - சாதியிற்
சதுர்த்தன்முறை தப்பித் தலைகீழாகவே தொங்கி
உம்பருல கத்திலேற விப்படித் தொடங்கி - கேளுமிவ்
வுலகில்நொய் யரிசிகொரதி பெறுதெனவே பொங்கி
அம்புவியில் தீமை விளைத்தவனைத் தேடி
அறிந்துபட்டாக் கத்தியாலே பொட்டி மூடி
என்பதுக்கு நிகராக வெட்டி சாடி
எங்குந் தருமநிலை நாட்டினீரின்னுங் கூடி (வருக)

2. நல்வரத் தாகவந் தீரே-தெய்வாதீன மிங்கே-கோசலை
நாட்டுக்கரசே தேவர்சொன்னர் உமக்கு-நிக ரெங்கே
சொல்வதென்ன வந்தணன் குமாரனுந்தான் சிங்கே-றுமது
சுகிர்த மதனாலே ஆவிபிழைத் தானே யங்கே
கல்விக்கடல் நீரே நல்ல பாத்திரங்
கலையறிந் துதவுமுங்கள் கோத்திரம்
செல்வ இந்திடமே உங்கள் க்ஷேத்திரம்
திரும்பச் செய்வதென்ன காணுந் தோத்திரம் (வருக)

3. எந்தன் மனதுக் குப்பிரியமவா வின்றி ராத்திரி முழுதும்
இருந்து தயந்தனில் செல்லலாகு மயோத்தி [இங்கே
இந்த ஆபரணத்தை நானு முமதுமார்பில் சாத்தி -
[அலங்கிருத
இருகண் குளிரப் பார்க்கவேணு மையனே வெகுநேர்த்தி
முந்தி விசுவகர்மன் செய்ததிது சிலாக்கியம்
முறையே தேவர்கள்பூணும் பணிதி உமக்கே யோக்கியம்
வந்த அதிதிபூசை செய்யச் சொல்வதே வாக்கியம்
வகையெல்லா மறிவீரே மனு-குல புத்திர பாக்கியம்.
(வருக)

## அகத்தியர், இராமன் மார்பில் அணிந்துள்ள ஆரத்தின் வரலாறு கூறத்தொடங்கல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

எதிர்முகமாய் ராமனைப்பார்த் திவைகை சொல்லி
  யிரவதனில் விதிபூர்வ தானஞ் செய்து
கதிர்வீசு மாரமதை யையன் மார்பிற்
  கண்டிடவே தரித்திடவு மிதுவு நல்ல
சுதினமென்றே யாபரணம் வந்த மார்க்கஞ்
  சொல்லுகநன் குருமாதா வடியேற் சென்றான்
முதிரறிவுச் சகத்தியனென் றட்ட சித்தி
  முற்றுவான் திருவுள்ளம் பற்று வானே.

### அகத்தியர் கூற்று

**கல்யாணி ராகம்]** **[சாபு தாளம்**

பல்லவி

சொல்லுறே னையா ராசசேகர ராமா - சுகிர்தவானே
சொல்லுறே னையா ராசசேகர ராமா. [சீமானே

அநுபல்லவி

வில்லாளிகளுக் கெல்லாந் தலைமையாய்
  மேதினி தன்னில்ரகு நாதனென வேவந்த
சல்லாப னேயிந்த நல்லாப ரணத்தின்
  சங்கதிக ளெல்லாமே விளங்கவே யுமக்கு நன்றாய்
(சொல்லுறேன்)

சரணங்கள்

1. பண்டுதி ரேதாயுகந் தனிலொருவன் நாலு
  பக்கமு மியோசனை தானொரு நூறுங்
கொண்டது மனிதசஞ் சாரமில்லாத காடு
  கொடிகள் செடிகள்பல வகைமரங்கள் மீறும்
உண்டானத் தில்நல்ல கந்தமூலங் கள்பல
  வுங்கனி வகைகள்தாமே பழுத்துத்தே னூறும்
அண்டின பேர்க்குதவா வுலுத்தர்செல்வத் தைப்போலே
  அந்த ஆரணியந்தா னிருந்தது வரலாறு
(சொல்லுறேன்)

2. பறவை மிருகசாதி ஒன்றுமில் லாமலே
பழுத்துக் குலுங்கிக்கொண்டு அதனுடைதென்வாடை
பரவ வதனடுவே தானே யோசனைதூர
பரியந்த முள்ளதை யாஒரு ஓடை
பெரிய வோடையிலன்ன நீர்க்காகஞ் சக்ரவாகம்
பிரபலமாய்ச் சிறந்து வாழுமே யாடைகோடை
ஒருவிகற்ப மில்லாமல் தெளிந்து சலநிறைந்து
உற்பலந்தா மரைபாசி யுள்ளதின் னேர்ஓடை
(சொல்லுறேன்)

3. அந்த வோடைக்கருகே ஆச்சிரம மதொன்று
ஆச்சரியந் தவசிச்சன மில்லா வெறுவீடு
வந்திந்தக் காட்டிலே தவஞ்செய்ய வேணுமென்று
மார்க்கங்கொண்டு வந்தேனன் சொல்லுறே னெருகூடு
முந்திராத்திரி யொன்று ஆச்சிரமத் திருந்து
முறையே ரவியுதய காலமதனிற் கூடு
சந்திதனிலே யந்த ஓடையிடத் தில்வந்தேன்
சலத்தில்கண் டேனேயொரு சவத்தையே கூறுபாடு.
(சொல்லுறேன்)

### அகத்தியர் கூற்று : தொடர்ச்சி

#### அறுசீராசிரியச் சந்த விருத்தம்

சவத்தை யேதி தென்று பூத லத்திலோ ரிரண்டரை
இவைக்கெ னேது வென்று நாழி கைக்குளான தங்கனே
திவத்தி லேயி ருந்துமேசி றப்ப தாய் விளங்கவே
சுவர்க்க வாசி வந்த தேசொ லிப்பதேமி குந்ததே.

### இதுவுமது

**நாதநாமக்கிரியை ராகம்]** **[சாபு தாளம்**

#### பல்லவி

சுவர்க்க வாசி வந்தான் - ஒரு புருடன்
சுவர்க்க வாசி வந்தான்.

#### அநுபல்லவி

சுவர்க்க வாசி வந்தான்வை பவமிகுந் திடும்புட்ப
கவிமா னத்திலேறி நவமன்ம தன்எனவே (சுவர்க்க)

சரணங்கள்

1. சரிகம பதனியென் றெழுசுர லட்சண
　　தாளலட்ச ணங்கண்டு தந்திரி மீட்டியே
வரிசையா கவேகாலம் பிரமாண மதுகண்டு
　　வர்ணமெட்டுக் களுஞ்சூட்டிக் கையாகக் காட்டியே
　வருகன ராகம் - சேர்த்தி ராகங்க
　　ளருமைய நேகம் - தெய்வ மங்கையர்
　ஒருபிரம காதம் - கட்டுக ளாக
　　சரச சங்கீத மத்தள தாளம்
　பரவுபணவ வாத்திய கோடஞ் - சமாயிப்பும்
　　பரத சாத்திரரீதி நாட்டியங் கூடியே,
　தரித தித்திம மிதத் திதிதிச் செணுத்த ததி
　　குறுதிதெய்த் தளாங்கு தத்திங்கிண்ணத்
　　　　　　　　　　[தோமென்று - ஆடியே
　ஒருபுறம் வருவார் - வெண்சாம ரைக்கால்
　　மருவவி சறுவார் - கண்களு நல்ல
　குருமணி நீல - நவ ரசங்கள்
　　பெருகும் விசாலம் - இப்படி யின்னும்
　தருணிபல பேர்தேறு - விருது கட்டியங் கூறிட
　　ஒருமையுடன் பூசிக்க மருமலரும் வாசிக்க　(சுவர்க்க)

2. கமலினி சுரபியென் றெடுக்கும் ரசகுளிகை
　　கட்டிச்சா ரணைதீர்ந்து வாயில டக்கிக்கொண்டு
சமமாய் வாயுவைக்கட்டி யோகச மாதிமிட்டை
　　சாதித்தெழும் புஞ்சித்த புருஷரெல் லாங்கண்டு
　தமதன்பு நாட - இந்தி ராதியாம்
　　அமரருங் கூடச் - சொல்லிக் கொண்டாட
　அமலம தான - ஆகாசத்தி
　　லுமதிக ஞான - ரிஷிகள் காண
　இமகரர் சூரிய ரிருவர்மண் டலங்களு
　　மிசைநட்சத் திரமண்டல மும்வாயு மண்டலம்
　விமரிசை யாகவே படிப்படி யாய்வந்து
　　மேக மண்டலந் தாண்டிக் கீழேபூ மண்டலம்
　இமைகொட்டு முனமே - மனோ வேகமா
　　யுமடுத்த கணமே - அற்புத மென

மணிச் செங்கதிரோ - துய்ய வெள்ளைய
னமிருக்குஞ் சதிரோ - என்ன சொல்லுவேன்
அமரிற்சத் துருவின் சிரமறுத்தேன் - தவமிஞ்சி
சுமுகமாக நடத்தும் சுமுகாபர னிடத்தும்
(சுவர்க்க)

3. அச்சில்லாம லேதே ராகாசத்தி லோடுவ
தது போல்பொன் மலைதானே யூர்ந்து வருவ போலே
வச்சிரவயி டூரியகோ மேதக புட்பராக
மாணிக்க மரகத நவரத்தி னங்களாலே
உச்சிதச் சுவர்ணமே - செகசோதியே
மிச்சமாய்க் ககனமே - நிறைந்தெங்கும் - ப
ளிச்சென்று பிரகாசமாம் புஷ்பகந் தெய்வத்
தச்சன்கை விலாசமாம் - அதினடுவே
மெச்சிக்கை யாக விருந்து சொலிக்கும்- புருஷனவன்
மேலுமலங் கிருதங்கள் வேடிக்கை வெகுவாக
அச்சுவர்க் கத்திலிருந்து மனித ருலகிலொரு
அடவியினில் வந்திறங் கியதென் சொலுவேனுக
நச்சரவிற் றுயிலே - பொருந்து மெங்கள்
அச்சுதர் செங்கையிலே - சங்க சக்கரம்
வச்சின்ன முபரியே - சார்ங்கங் கத்தி
வச்சிருக்கு மரியே - கதையுள்ளவர்
பச்சை நெடுமாலிந்த சச்சரூவ மாய்வந்த
அச்சே அரசையாளும் இச்சைராம னேகேளும்.
(சுவர்க்க)

## இதுவுமது

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

ச்மானமொருத் தரைச்சொல்லத் தகாத ராம
சந்திரர் சுவர்க்கபுரு டன்ரு னங்கே
விமானமேல் வந்திரங்கி ஓடை மீதில்
மிதக்கின்ற களேபரத்தைப் பசிக்கத் தான்போ
துமானமட்டுஞ் சதைபிடுங்கித் தின்று பின்னுஞ்
சுத்தாச மனஞ்செய்தா னண்டர் கேத
குமானவனே யிதென்னகொடு மைதா னென்றேன்
கூறுவா னவன்சொல்லி யாறு வானே.

## இதுவுமது

த்விஜாவந்தி ராகம்] [ஆதி தாளம்

### பல்லவி

ஆரியனே யெந்தன் சுகாசுகங்க
ளறியச் சொல்லுறேன் கேளும்.

### அநுபல்லவி

பாரின்மீதி லேயரன் பிறந்தே யனு
பவித்து மறுபடி தவத்தில் மிகவுயர்
சுவர்க்க மதில்வரு மவத்தைக ளையெல்லாம் (ஆரியனே)

### சரணங்கள்

1. எந்தா தைதே விதர்ப்பதே சாதிபதி
எங்களுஞ் சுதேவ னென்றும்பேர் கியாதி
வந்தாரவர்க் கிருபேர் பெண்சாதி யவர்
மைந்தர்க ளிரண்டுக்கு நானே யாதி
நந்தா வேதமுனியே நானேசுவேத னய்யா
பிந்தின வன்பெயர் சுரதனு மாகுமே
பெரியவர்க் கேயெலாந் தெரியவு மாகுமே (ஆரியரே)

2. வெகுகால மெந்த கப்பனிப் பூபாரம்
வகித்து மேலெனக்கு முடிசூட்டி நீதிசாரம்
மகராசர் சொல்லிப் பின்னவர் சரீரம் - சென்று
மண்டலத் தையாண் டிருந்தேன் கம்பீர
மிகவேயாண் டாயிரங்கள் மேதினி தன்னையாண்டு
சகல வுயிரையும் ரட்சிக்க லாச்சுதே
தர்மங்கள் தவறாமல் சிட்சிக்க லாச்சுதே (ஆரியரே)

3. ஆயுவின் பிரமாணத்தை நீள
அறிந்த அவனியைத் தம்பி சுரதனுள
நேயமாய்க் கொடுத்தலின் தாராள மாக
நெருங்கியே அருந்தவசு பீள
வாயுவைக் கட்டிக்கொண்டிந்த வனத்தில் தவஞ்
[செய்தேன் - மூ
வாயிர வருஷமய்யா யிந்தக் காட்டிலே
அண்டி யிருந்தது நானிந்தக் கூட்டிலே (ஆரியரே)

4. நரர்மிருக பட்சிசாதி யொன்று மில்லாத
காட்டில் நடுவேயிந்த ஓடையருகே நின்றும்
வருஷமூவாயி ரந்தானே சென்றும் - தவத்தில்
வாய்த்ததே பிரமலோக மென்றும்
பிரபல மாயிருக்கும் பெரியவி டத்தைச் சேர்ந்துங்
வருவிதி வந்ததை யெப்படித் தள்ளயிாம்
மாதவ ரேயிதை யென்னென்று விள்ளலாம்.
(ஆரியரே)

அகத்தியர் கூற்று : தொடர்ச்சி

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

கீர்த்திமிகும் பிரமலோ கத்திற் சென்றும்
கேளுமையா பசிதானே துள்ளத் துள்ள
ஆர்த்திகொண்டேன் பிரமனே யெனக்கா கார
மியாதனியா யப்பசியிங் குண்டோ வென்றேன்
பார்த்திபனு கவுமிருந்துந் தவசு செய்தும்
பலனென்ன ஒருவருக்கா கினுநீ கண்ட
பூர்த்தியா யன்னமதா கினுங்கொ டுத்தாற்
போதாதா யென்பரவ்வி தாதா தானே.

இதுவுமது

பைரவி ராகம்] [சாபு தாளம்

பல்லவி

எவருக்கா கினுநீ யொன்றுங்கொ டுத்ததில்லை
ஏதாகு மிங்கேசு வேதா.

அநுபல்லவி

குவலயந் தனிலாருங் கொடுத்ததைக் கொடுக்குங்
குட்டிச்சாதி யெனும்வழக்கம் சட்டமல்லோ யென்ன
[தர்க்கம்

சரணங்கள்

1. ராச்சியஞ் செய்தது வருஷமோ ராயிரம்
நாட்டைவிட்டுக் காட்டிலே தவசுநூ றாயிரம்
ஆச்சுதிந்த வருஷந் தானொருநா லாயிரம்
அன்னசொர்ன தானங்கள் செய்ததில்லை நீயிரங்
காச்சு மையா தேகஞ் சுமந்து
கண்ணை மூடிய தவத்தால் நிறக்குமா
மேச்சு தலையிலூட்டிப் போனால்
மேவுங் கட்டுத் தரையில் கறக்குமா (எவருக்)

2. கன்னமிட் டாகிலு மன்னங் கொடுக்கவேணுங்
காசுக்கு முயிருக்கும் கொண்டுவைப்ப தோதோணும்
மென்னி முறித்துக்கொண்டு பாடினாலி தற்குவேணும்
வித்தையெல் லாம்நமக்குத் தெரியுமென்பர்
[லோபிகாணும்
தன்னுடைய வயிற்றை நிரப்பிச்
சதைகொழுத் துதவியில் லாமல்
பொன்னைக்காத்த பூதம் போலே
பூதலத்தி லிருந்ததல் லாமல் (எவருக்)

3. தயவு தாட்சண்ணிய முள்ளவர் களைப்போலே
தானுஞ்சப தபங்கள் பூசைக ளொருக்காலே
செயவறிந்து செய்துமென்ன வங்கிருந்து தான்மேலே
தேவதத்து வமும்வந்தும் பசிவந் ததினாலே
துயரஞ்சொன்ன லிங்கே நானென்ன
சொல்லலா மென்றுகண்ணைக் குழிக்கிறாய்
வயிறுநிரம்பி னற்பானை மூடலைத்
தெரியாம லேண்டாமு ழிக்கிறாய். (எவருக்)

இதுவுமது

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

சாயாதே விக்குமண வாள தேவன்
தன்குலத்திற் குப்பதியே சாற்றக் கேளும்
ஈயாமு டிகளாக விருப்பார் கட்கு
என்னகதி அதோகதிக்கே யிதுவே சாட்சி

நாயான தகன்வயிற்றை வளர்ப்ப துண்டே
தாயமறிந் தாயிலேயே யென்று பெற்ற
தாயான வளைப்போலப் பிரமன் சொன்ன
தாய்ச்சொல்வான் சுவேதனிச மாய்ச்சொல் வானே.

ரீதிகௌளை ராகம்] [ஆதி தாளம்

1. பிரமரிஷியே யின்னுங்கேளுஞ் சொல்லுறேன்வர
[லாறு - அந்தப்
பிரம தேவரனுக் கிரகஞ்செய்து மெந்தன்பசிக் கூறு.

2. தாங்கண் டறிந்துசுவேதா வுன்மனித தேகம் பாரு-உந்தன்
மாங்கிஷத்தைப் பிடுங்கித்தின்று உந்தன் பசியைத்
[தீரு.

3. தவசு செய்ததனலே தானேச தைகொழுப்ப தாகி -
[ஒன்றுங்
கவலை யில்லாதவர்கள் போலேகி டப்பதங்கே யேகி ;

4. களேபர மாகினு மந்தச்ச தைகளுந்தன் வாய்க்கு - வெகு
வளமுள்ள தேவாமுத மாகயி ருக்கும்பசி போக்கி.

5. வேணப டியேஞான மூடர்க ளுக்கேபோதித் தாலும்-அவர்
ஆணவ மலமது வளர்வது போலமென் மேலும்.

6. எடுக்கள டுக்கச்சதை குறையா திருக்குமதை வுண்டு-மிங்கே
அடுத்துவ ரப்போகவு மிருக்கலாம்வி மானமேற்
[கொண்டு.

7. கனத்தத வத்தால்வந்த சுவர்க்கபோ கமுங்குறை யாது -
[அந்த
வனத்தி லகத்தியமா முனிவர்வ ருவாரேயப் போது;

8. தரிசனங் கண்டவுடன் பசிதீரு மேதிருத்தி யாகும் - அந்த
விரிவான ஓடையிலே மிதக்கும் பிணநசித்துப் போகும்.

9. மகத்தான தவஞ்செய்து பொதியைம லையினிலே வாசம் -
[உள்ள
அகத்திய ரென்றுங்கும்போ தயமுனி யென்றேபிர
[காசம்.

10. பெருகு மறையல்லால் இந்திரம ருத்துக்களால் கூட -
[இன்னும்
ஒருவரா லுமாகாது உந்தன்ப கியைத்திர்த்துப் போட.

11. என்றுபி ரமர்சொல்ல அந்தப்ப டியேநானுங் கேட்டு
[அய்யா
அன்றுமுத லாய்வெகு வருட கா லமாயிந்தக் காட்டு;

12. ஓடைத னில்மிதக்கும் மிந்தமா னிடத்தின்ச ரீரம் - நாவுக்
கிசைவாக வேகண்டு புசித்துவ ருவதிது கோரம்.

13. நாடிந ரம்புக்கூடு ஊத்தைக்கு ழியொன்பது பீறல் - வெகு
கோடிரோ மத்துவார மானவக் கட்டைமல நாறல்.

14. நாய்கள் நரிக்கழுகு காக்கைபி டுங்குஞ்சதை மாங்கி -
[ஷத்தைப்
பேய்களுண் ணுஞ்சவத்தை பிடுங்கித்தின் பதைவிட்டு
[நீங்கி;

15. கரையேற்றி விடவேணும் அய்யாயெ னக்குக்கதி நீரே -
[இது
வரையில் யெவர்க்குமொன்றுங் கொடுத்ததில் லைநான்
[பெரி யோரே.

16. இந்தவா பரணத்தைச் சாமித ரித்துக்கொள்ள வேணும் -
[தரித்
தெந்தன்ப ரிபவத்தை நீக்கிக்க ருணைசெய்ய வேணும்.

17. இவிடத்தி னிலடியேன் கொடுக்கவி சைந்ததிந்த ஆரம் -
[இதே
சுவர்னதா னம்ஆடைகள் அன்னங் கறிகள்பணி
[யாரம்;

18. ஆபர ணங்களின்ன மனதிற்கா மியமெல்லாந் தானும் -
[கொண்ட
மாபலங் களையெல்லாம் மென்பாலு தவுவீர்பி தானம்.

### இதுவுமது

#### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

*விரித்திவகை சுவேதனெல்லாஞ் சொல்லி யிந்த*
*விளங்கொளியா பரணமதை யெந்தன் மார்பில்*
*தரித்திட்ட வுடன்சலத்தில் மிதந்தி ருந்த*
*சவமதுதா னில்லாமற் போச்சு தையா*
*திருத்தியாய்ச் சுவர்க்கியவன் பசியும் போகித்*
*தேவருல கத்திற்சென்று னெனவே யாரம்*
*வருத்திந்த வழியென்றூர் பொதிகை யென்னு*
*மலையினன் மெய்ஞ்ஞான நிலையி னனே.*

### இராமன், அவ்வனத்தில் மிருகம், பட்சி முதலியன இல்லாமற் போயினமைக்குக் காரணம் வினவல்

#### இதுவுமது

*ஆரம்வந்த வகையிதென்றி ரகுப திக்கே*
*அகத்தியமா முனிவிளம்ப அறிந்து கொண்டே*
*பாரதனி லிவ்வனத்தில் மிருக சாதி*
*பட்சியொடு மனிதரின்னுஞ் சீவ கோடி*
*ஒரொன்று மில்லாமற் சூன்ய மாக*
*உண்டான தெதனுலே வருள வென்றூர்*
*வீரரா கவனேகே ளென்பார் நல்ல*
*மேதைதான் செய்யுமந்த காதை தானே.*

### அகத்தியர் கூற்று

பிலஹரி ராகம்] [ஆதி தாளம்

#### பல்லவி

*அய்யா ராமசந்திரா அவனி யேந்திரா*
*அய்யா ராம சந்திரா.*

#### அநுபல்லவி

*மையாழி முகில்வண்ணு மலர்ந்தசெந்தா மரைக்கண்ணு*
*மனுநெறி தனைநிலை யினிலிடு கனமுள* (அய்யா)

சரணங்கள்

1. முந்தியிந்த சகத்திலே முதலாங்கிரேதா யுகத்திலே
 இந்திராதிகள் சமுகத்திலே யேற்றுமனுசு கத்திலே
இட்சுவாகு வெனவேக லட்சணம தாமகனை
 சட்சுநிக ராயருளி பட்சமதா யிருந்தானே (அய்யா)

2. சக்கரவர்த்தி மனுமேட்டி தனையர்க்கு மகுடஞ்சூட்டி
 விக்கிரமங்கள் தன்னைநாட்டி விளங்குநீதி சாரங்காட்டி
மிக்கநாள் புவியையாண்டி ருக்கவே மதிகள்சொல்லித்
 தக்கமனு ராசனுஞ் சுவர்க்கமதை யடைந்தானே
(அய்யா)

3. புத்திமானிட் சுவாகுமாலே புண்ணியவானே தான்மென்
[மேலே
 புத்திரவாஞ்சை யதனாலே பொருந்தும்யாகங் களினாலே
புவிக்குள்ளே தேவர்கட்கு அவிர்ப்பாகங் கொடுத்து - வை
 பவப்பிரகா சமுஞ்செய்து தவத்நாலு முயர்ந்தானே
(அய்யா)

4. சொல்லுறேன் பிள்ளைகள்நூறு தொண்ணூற்றொன்பது
[பேர்தேறு
 நல்லவர்கள் வரலாறு நடத்தைஎல்லா நீதிக்கூறு
ஞாலமெங்கு மிட்சுவாகு பாலர்களென் றேபிரபல
 சீலர்களாய்த் தந்தைக்கனு கூலர்களா யிருந்தாரே.
(அய்யா)

## இதுவுமது

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

மூத்தவரைப் பணியாத கடைசிப் பிள்ளை
 மூடனா யிருந்ததைக்கண் டிட்சு வாகு
பார்த்தவன்பேர் தண்டனென்று மடாது செய்து
 படாதுபடு வானெனவே பிரித்துக் கட்டி
நாத்திசைக்குள் விந்தியச யிலம லைக்கு
 நடுவான ராச்சியத்தை நீயா ளென்று
சாத்தின னவனுமந்தப் படியே தானே
 தடங்கொண்டான் மதுமந்த மிடங்கொண் டானே.

### இருவுமரு

மதுமந்த் மென்றொருபட் டணத்தை விந்திய
மலையினுடைத் தாழ்வரையி லுண்டு பண்ணி
அதிலிரா சனுமந்தத் தண்ட னென்பா
னாகியே சுக்கிரனைக் குருவாய்க் கொண்டு
பொதுவாக ராசமுறை மைக ளாலே
பூமிபரி பாலனஞ்செய் திருந்தா னங்கே
விதிவந்து விளைந்ததெல்லாங் காம பாண
வேகந்தான் கன்னிகையின் மோகந் தானே.

### தண்டன் வரலாறு

**பைரவி ராகம்]** **[ஆதி தாளம்**

**பல்லவி**

மண்டலாதிப தண்டன் காதையைக்
கண்டு கேளுங்கர கோதண்ட ராமா.

**அநுபல்லவி**

பண்டனேக மாயிரங் கொண்ட வருஷமந்த
பட்ட ணத்திலே சட்ட மாகவே
சுட்ட லைகளே திட்ட வட்டமாம்
படிக்குள் நிற்களங்கும் கெடிக்குள் மிகுந்திருந்தான்
(மண்டலாதிப)

**சரணங்கள்**

1. சித்திரை மாதத்தி லேயொரு நாள்தண்டன்
சென்றுசுக் கிராசாரி மடத்தே
சுத்திக் கொண்டுஎங்கும் பார்த்துவரும் வேளையில்
தொடர்ந்ததையா சனியனந்த இடத்தே.
சித்திரப் பதுமை போலேயொரு கன்னிகை
சிறப்பாய் நின்றாளவள் கொங்கைத் தடத்தே.
உத்துத்துப் பார்க்கவே சித்தசன் பாணந்தைத்து
ஒட்டி மாதிடங் கிட்டினா னய்யா
துஷ்டனே - வெகு - மட்டி யானவன்
துடுக்குச்செய் ததையின்னும்
எடுத்துச்சொல் லுறேனிப்போ (மண்டலாதிப)

2. தங்கமுருக்கி விட்டாப் போலே சொலிக்கின்ற
சரீரப் பெண்ணரசி யாரடி
எங்கே யிருக்கிறவள் நீயாரு டைமகள்
எந்தன் முகத்தைச்சற்றே பாரடி
நங்கையே மன்மத பாணந்து ளைக்குதடி
நான்சகி யேன்கிருபை கூரடி
சங்கோச மென்னடி நெருங்கிக் கலவிசெய்ய
தையலே கன - மைய லாகிரி
செய்யுதே - யுடல் - தொய்யுதே - யெனத்
தவித்து ரெண்டு கையையுங்
குவித்துக் கெஞ்சினு னய்யா (மண்டலாதிப)

3. மிக்கவே நயந்து கண்டகன் தண்டனும்
வேண்டிக் கொள்ள அந்த மடமானே
சக்கிரா சாரியர் மகளென்றறி வாயென்னைச்
சொல்லும் அரசையென்னும் பேர்நானே
முக்கிய மாகவிந்த ஆச்சிரமத்தில் வாச
மூத்தபெண் ணுங்கன்னிகை நான்தானே
அக்கிரமம் பண்ணுதேநீ உக்கிர பலமடைவாய்
ஆபத்தா னதேமுக்கிய பாபத்தால்வரும்
கோபத்தா லேயே சாபத் தேடுமாம்
அசட்டுத்தனம் பண்ணுதே
நிசத்தைச்சொல்லு றேனென்றுள் (மண்டலாதிப)

4. கன்னிகை நானல்லோ தகப்பன்வ சத்திலான
காரியமறி வாயிந்த மதியெண்ணுதே
என்னுடைத் தந்தையு முனக்கேகுரு வாச்சுதே
எப்படியோவென்று யோசனை பண்ணுதே
சொன்னே னவரிடத்தில் சென்றுயென்னை வரித்தாற்
சுகமாய்த் தருவார்வலுச் செய்யவொண் ணுதே
அன்னியாயம் பண்ணினல் வன்னியவர் கோபந்தான்
அடுக்குமே - சுடத் - தொடுக்குமே - நீறு
படுக்குமே - எங்கும் - கெடுக்குமே - இந்த
அதனப்பிர சங்கம்வேண்டாம்
பதனம்ப தனமென்றுள் (மண்டலாதிப)

5. அரசையும் இப்படிக்குத் தடுத்துச்சொல் லவுங்கண்டு
அஞ்சலித்துக் கையைத் தலைமேலே
சரணஞ் சரணமடி உன்னைய டைந்ததனுல்
வருவதெல் லாம்வரட்டு மனுபவிக் கிறேனிங்கே
வாடியென் றேவல வந்தத்தி னலே
ஒருதலைக் காமங்கொண்டு குருபுத்திரி மேல்விழுந்து
உள்ள நாடிக் கள்ள ரீதியில்
கொள்ளை யாகவே துள்ளு காளையும்
உபரியு பரியாக விபரீத புத்தியாச்சு. (மண்டலாதி)

## தண்டன் வரலாறு: தொடர்ச்சி

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

அதிமந்த புத்திரனெனுந் தண்ட னங்கே
அரசையெனுங் கன்னிவிரத மழியச் செய்து
மதுமந்த பட்டணத்தை யடைந்தா னந்த
மாதுமுரோ வென்றழுத சத்தங் கேட்டுத்
துதிபெருகு தொண்டருடன் சுக்ரா சார்யர்
சொல்லுமொரு முகூர்த்தமதில் வந்து கண்டு
இதுகொடுமை தண்டன்வந்து செய்தா னென்றே
எண்ணின ரதிகோபம் பண்ணி னரே.

### இதுவுமது

..............ராகம்] [...........தாளம்

**பல்லவி**

கன்னக்காரக் கண்டன் தண்டன் பூமி யெல்லாங்
காடு கொண்ட தந்தக் காடே.

**அநுபல்லவி**

அன்னியாயஞ் செய்து கன்னிவிரதங் குலைத்து
ஆக்க மெல்லாத்தையும் போக்கடித்துக்
[கொண்டானே (கன்னக்)

சரணங்கள்

1. விரகில்லாத கண்டனும் குருத்துரோகி யாகிவந்து
விபரீத புத்தியாலே யிப்படி யெண்ணுவான்
பரவிச் சொலியானின்ற அக்கினியை ஆலிங்கனம்
பண்ணநினைத் தாப்போலே நினைத்து எண்ணுவான்
இரவு ஏழுக்குள்ளா பிலவாகன் பிறத்தியாரோடு
இந்த மூடனுந்தண்ட னவத்தை நண்ணுவான்
வருமொரு நூறுயோசனை உள்ள தேசத்தை
மகத்தான தேவேந்திரன் மண்வாரியில்
[மூடப்பண்ணுவான்
வக்கி ரிப்பதே உக்கிர மாகவே
சுக்கிர ரங்குச பிக்கக் கண்டதே (கன்னக்)

2. நாட்டுமண் வாவிக்குள்ளான சராசரங் களுக்கெல்லாம்
நாசகால மதுதானே வந்து தொட்டது
கேட்டபேரன்னிய தேசத்தில் போங்களென்று ரப்படிக்
கேசபீக சனங்களும் போகி விட்டனர்
மீட்டுமந்த அரசையாம் பெண்ணைப்பார்த்துச் சொல்லுவார்
முறைதப்பி உந்தன்கன்னி விரதமுங் கெட்டது
ஈட்டிகந்த ஆச்சிரமத்தில் வாசம்பண்ணும் காலம்பார்த்து
இரடியிந்த ஓடைதானே யோசனை மட்டிதி
லேவிரு சீல சீவ சந்துகள்
வீவி லாதுமே காவ லாமென்றார் (கன்னக்)

3. உனக்குத்துணை யிருக்குஞ்சீவ சந்தெல்லா மண்மாரிக்
குள்ளே முழுகாமலே யிருக்க நண்ணுவாய்
வனத்தில்கந்த மூலங்க ளடிநீ புசித்துக்கொண்டு
வருந்தருணம் பார்த்திங்கே சலத்தை யுண்ணுவாய்
எனச்சொல்லிச் சுக்ராச்சாரி அன்னிய தேசத்தில்
சென்றாரென் றேயிராம சந்த்ரா அறிவு பண்ணுவாய்
தினத்தில்ஏழு சென்றது குருசாபப் படிதானே
தண்டன்பூமி மண்மாரி கொண்டதென்றெ யெண்ணு
தண்டகா ரணியங் கண்டி டாயொரு [வாய்
பெண்டி னுசையால் மண்டு பாவமே. (கன்னக்)

### அகத்தியன் தண்டன் வரலாறு கூறிமுடித்தல்

**எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்**

சாபத்தா லெழுந்ததண்ட காவ னத்தில்
தவசிகள் வசிக்குமிடஞ் சனத்தா னந்தான்
சாபத்தா லிராவணனை வதைத்த வீரா
சங்கைபண்ணிக் கேட்டவர மறிவீ ரேமிஞ்
சாபத்தால் வந்தமறை யவன்ற னன்மைந்
தனையெழுப்பி வைத்ததயா சலமே பார்க்கில்
சாபத்தால் தேரவன்சே யாகி வந்தாய்
தழைக்கின்ற ருலகரெல்லாம் பிழைக்கின் றாரே.

### அகத்தியரிடம் இராமன் விடைகொள்ளல்

**இதுவுமது**

சித்தர்களெல் லாம்பரவு மகத்திய யன்றன்
திருமொழியா லெல்லாங்கேட் டிருந்து பின்னு
முத்தரவால் சூரியன்மேற் கடையுஞ் சந்தி
யுறுநியம முடித்திரவு தரித்து மங்கே
வைத்தகந்த மூவபல அவுட தங்கள்
வருமிலைக ளுண்டிரவி யுதய மீது
பத்தனடி யேற்குவிடை யெனவே ராமன்
பரவுவார் அன்புமிக விரவு வாரே.

### இதுவுமது

**கல்யாணி ராகம்]** **[சாபு தாளம்**

**பல்லவி**

வருகிறே னய்யா தரிசிக்க
வருகிறே னய்யா.

**அநுபல்லவி**

வருகிறே னய்யா அருமை மிகுந்-தவ
பெருமை தருஞான குருமணி யேயின்னும்
(வருகிறேன்)

சரணங்கள்

1. சத்தா யிருக்கிற உங்கள்திருச் சேர்வை - செய்து
தன்னிய ஞனேன் அனுக்ரகப் பார்வை
உத்திடு பாத்திர ஞகினேனே யேர்வை - இந்த
உண்மை கிடைத்தது பூர்வபுண்யக் கோர்வை
சித்தமதா யாத்தும சுத்தமா கிறநி
மித்தியங் கண்டுசே வித்திடவே யின்னும் (வருகிறேன்)

2. அட்டமாசித் தியுங்கை கண்டிட்டமா யோகி - நல்ல
அகத்திய னென்றேபிர சித்தபரி பாகி
வட்ட வுலகி லுதித்துவரு தேகி - யர்க்கு
மாதாபி தாகுரு தெய்வவடி வாகி
சட்டம தாகவே சிட்டச னம்புகிழ்
நிட்டை மிகுந்தவுன் கட்டளை காணவே (வருகிறேன்)

3. இந்திரிய நிக்கிரக சத்திமி குந்தோரே - புவி
யெங்கும் புகழும்பொ தியைமலை யாரே
செந்தமிழ் வியாகர ணத்துரைசெய் தீரே - சுவாமி
தேவரீர் மகிமையை யாவரறி வாரே
பந்தவி லையில்மும் தாமலே புத்தி
தந்தரு ளுங்குரு வந்தனஞ் செய்திட. (வருகிறேன்)

## அகத்தியர் இராமபிரானுக்கு விடைகொடுத்தல்

கலித்துறை

விரிவான வாரி யுடுக்குந் தராதல மீதரசு
புரிவா னயோத்தியிற் செல்லவென் றேமனம் பூண்டு
[சொன்ஞன்
தெரிவான யோகி சிகாமணி யாரியன் செந்தமிழ்மேற்
பரிவான கும்ப முனிதாந் திருவுளம் பற்றுவனே.

## இதுவுமது

பியாகடை ராகம்] [ஆதி தாளம்

பல்லவி

சகநாதா - சுயவீரா - ரகுநாதா.

அநுபல்லவி

ரகுநாதா-கனயோக திவ்விய புருஷனே யென்று
தேசரா சாக்கள் பணிந்திடுஞ்
சகநாதா - மலர் - மகணுதா - திரேதா
யுகநாதா - வெகு - புகணுதா
சீலாமனு நூலாவனு கூலாதிரு மாலாகிய (சகநாதா)

சரணங்கள்

1. மன்னுஞ்சு பாட்சரமா யிருக்கும் முடையிந்த
வார்த்தை யாச்சரியம் பூணும்
என்னுஞ்ச ருவலோக மதிலுமீர் தாமே
யேற்றிடும் பரிசுத்தர் காணும்
இன்னுஞ் சொல்லுறேனொரு முகூர்த்தமா கிலுமும்மை
யெவர்கள் பார்க்கமனந் தோணும் - அவர்கள்
சொன்னேன் பரிசுத்தராய்ச் சுவர்க்க பாதாளத்
தேவர்சூழ்ந்து புசிப்பதுவே ஊணும்
சுபமேவிய விபவாமகாப்
பிரபுவேசய வபிராமனே (சகநாதா)

2. ஞாலமதிலே யும்மை யாதொரு பிராணிகள்
நயவாக் கொடூரபார்வை நாடுவா ரவர்கள்
காலதண் டத்தினு லேஅடி பட்டுநர
கத்திலுஞ் சுழலுவ்வதைத் தேடுவார்
பாலை உவமைசொல்லு மகளங்கர் நீர்தாமே
பரிசுத்த ரெவரும்மைப் பாடுவார் - மென்
மேலுஞ் சகலகாரிய சித்தி யடைந்தவர்
வேண்டும் பதவியினில் கூடுவார்
விரைமாமலர் நிரைசேர்துய்ய
சரயூநதிக் கரசேதிரு (சகநாதா)

3. சகத்துக்கே நேர்கதி தர்மத்தி னுலேராச்சி
 யத்தைப்பரி பாலியுந் தீரா
 மகத்துக்க ளாகிய ரிஷிமார் தவந்தானே
 வளர்ந்தேற வந்தஅவ தாரா
 அகத்தைப் பொருந்திவரும் துட்ட சனங்களையே
 அடக்கும் கோதண்டவில் வீரா
 சுகத்துட னயோத்திக்குப் போய்வர லாமெங்கள்
 சுகிர்தா தசரதன்கு மாரா
 சுரர்பூசுர ரவரேதுதி
 நரரூபமாய் வருராமனே. (சகநாதா)

## இராமன் அயோத்திக்கு மீளுதல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

அகத்தியரிப் படிச்சொல்ல அவரோ டின்னும்
 அங்குள்ள ரிஷிகளையும் விடைகொண் டய்யன்
சகத்திற்பா னுவைப்போலே விமான மேறித்
 தடங்கொண்டே கேசரிமார்க் கமதாய் வந்தே
சுகத்திலே திவிபதினைந்து நாழி கைக்கே
 சுபம்பெருகு மயோத்தியரண் மனையிற் சென்றார்
தொகுத்தங்கே புட்பகத்தை யதேச்சை யாகச்
 சொல்லுவார் என்வினையை வெல்லு வாரே.

## இராமன், பரத லட்சுமணரை யழைத்துக் கூறுதல்

### இதுவுமது

கரதனுவைக் கரதனுவாற் களைந்தான் வாசற்
 காரரைக்கொண் டழைத்தனுப்ப வந்து கண்ட
பரதலட்சு மணரைப்பார்த் தந்த வேத
 பாரகன்கா ரியஞ்சாதிக்க லாச்சு மிக்க
விரதமது வேயிருந்து அநேக மான
 விதந்தரும வரம்புசெய்ய நினைப்பென் றுந்த
சரதன்மகன் றுணைவர்களங் கவர்க்கே சொல்லுந்
 தண்மைதான் மனுநெறியி னுண்மை தானே.

## இராமன் கூற்று : தொடர்ச்சி

**பூரிகல்யாணி ராகம்]** **[சாபு தாளம்**

பல்லவி

தம்பிமாரே பரத லட்சுமணரே - இந்த
தரும சிந்தனை கேளுங் - சற்குணரே.

அநுபல்லவி

அம்புவிமேல் தரும வரம்பைச் செய்ய நினைத்தேன்
ஆதிக்க மருதையே நீங்கள் சாதிக்கவே ணுமெனது
(தம்பி)

சரணங்கள்

1. வளர்ந்தேற வேணுந் தர்ம ஸிலாக்கி - யம்மிருந்து
மண்டலத்தி லவியமில் லாததாக்கி
விளங்கவிப்பேர் செய்ய லானதும் யோக்கி - யங்கள்தந்து
மேதினியிற் சகல பாவம்போக்கி
களங்கமில்லா திருக்கு மேன்மைய் தாருந்தர்மங்
காணுஞ் செய்ய வேணுமனந்
தோணுமனப் பூணு மெந்தன் (தம்பி)

2. நாளுக யிருக்குமுங்க ளோடு கூடிக் - கொண்டு
ராசசூய யாகஞ் செய்வதைத் தேடி
தானினைத்தே யுலகத்தில் நீடி - யிருக்கு மிந்த
தர்மமுன்னே சோம ராசநாடி
மானிலமதை யாண்டு வருணைதி காரம்பெற்றான்
வையத்தில் மெய்யேபுகழ்
செய்யுமது துய்யவரே (தம்பி)

3. எந்தனுக் கெதுநன் மையோ - அதைப்பாரும்
இன்றைத்தினம் என்னுடன் கூடியோசனை நீரும்
அந்த தர்மமெல் லார்க்குமிதஞ் சேரும்.
நியாயமது வாயிருந்தால் நீங்கள்சொல்லும் வாரும்
சாந்த முமெனது மனதுக் குகந்ததுனை
தாமே நீங்க ளாமேயிந்தப்
பூமேலக லாமேவரும். (தம்பி)

## பரதன் இராமனைப் பணிந்து சில கூறுதல்

### நேரிசை வெண்பா

மராமரமே ழூந்துளைக்க வாளிதொடு மங்கை
யிராமன் துணைவர்க் கிவைசொல் - வரானுல்
இதந்த ருமொழி யையேற்கு மெங்கள்-ப
ரதன்ப ணிந்துவுரைப் பான்.

### பரதன் கூற்று : தொடர்ச்சி

#### பல்லவி

சாருவ பூமா ரகுகுல சாமி-ராமா
சாருவ பூமா.

#### அநுபல்லவி

சாருவ பூமா சகத்திர நாமா
பூருவ தாமா புண்யநெறி நேமா (சாருவ)

#### சரணங்கள்

1. தேவரீ ரிடஞ்சகல தருமமுஞ் சேர்ந்து
யிருக்குதே சகல பூபார
மேவு கீர்த்தியும் பொருந்தி வளருதே
வேறுண்டோ சொல்லஇன்ன நீதிசாரம்
தேவரீர் யாவரு மந்தப் பிரமனிடஞ்
சேர்ந்து காப்பது போலே யதிகாரம்
பூவில்வரு ராசர் சகல பேர்களும்
போந்தும்மைக் காக்கலான வவதாரம் (சாருவ)

2. யாங்களு மும்மை யுலக நாயகராக
பார்க்கிறோந் தேசமே லுள்ளார்
பாங்கரா யும்மைத் தகப்பன் போலவே
பார்க்கிரு ரய்யா யெவருமிது தள்ளார்
ஓங்கு பிராணிகள் யாவுக்குங்கதி உறுதிநீ
ரென்ப தேவர்கள் மனங்கொள்ளார்
வாங்குவில் லாளியிந்த நீர்மன்னர்க் குபத்திரவ
மேது செய்ய விள்ளார் (சாருவ)

3\. ராசர்க்குப் பாத்திர மாகுமே யிந்த
 ராச் சூயத்தைச் செய்யமன நாடி
பேச லாகுமோ தரணி மீதிலே
 பலஞ்சொல்வார்க் கெல்லா மவத்தையே தேடி
ஆசி லாதநீர் புருஷ சார்த்தூல
 ரனந்த கலியாண குணங்களுடன் கூடி
மாசி லாதநீர் ஒருத்தர்க்கு பத்திரவ
 வகையை நினைப்பீரோ நினையீர் புகழ்நீடி. (சாருவ)

## இராமன் பரதனுக்குக் கூறுதல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

உறுதியா யொருத்தருக்குந் தீங்க தில்லா
 வுண்மையே தர்மமென்ற பரதா கேளு
சிறுபிள்ளை யானாலும் யுத்தி யோடு
 சேர்ந்திருந்த வார்த்தைசொன்னால் கேட்க வேணுந்
திறமையுள்ள வுன்சொல்லா லிராச சூயஞ்
 செயநினைக்கு மதில்திரும்பி னேனென் றூர்சொல்
தாறையறிந்த இலக்குமனு மொன்று சொல்லத்
 தோணுவான் நெஞ்சிலன்பு பூணு வானே.

## இராசசூயஞ் செய்ய வேண்டுமென்ற இராமபிரானிடம் இலக்குவன் ஒன்று கூறல்

சாவேரி ராகம்] [ஆதி தாளம்

### பல்லவி

ஒரு விண்ணப்பங் கேளு மென்சாமி - ரகுநாதா
உமது வசிய மிந்தப் பூமி.

### அநுபல்லவி

திருவுளத்தி லேயெல்லாந் தெரிந்த சருவக்ஞ மூர்த்தி
 அருள்செய்தே யெந்தன்புன்
 [சொல்லதையுஞ் செவிசாத்தி
ஆளுங்காண் புவியில் நாளுந்தான் உமதிரு
 தாளுந்தான் பெறுதலே தோளுஞ்சேர் அடியவ
 [னுக்குமே (ஒரு)

சரணங்கள்

1. சகலசன சம்மத மாகும சுவதேமம்
சருவ பாபங்களையு நீக்குமென் றிடுவேதம்
சுகமாய்ச் செய்யலாமென்ப ததுவே மனுவின்நீதம்
சுவாமிக் கெதிரடியேன் சொல்வது மபராதம்
சூரனே - ரகுகுல - வீரனே - நர அவ
தாரனே - உந்திகம் - பீரனே - ரவிகுல - சோமனே
(ஒரு)

2. பிரபல மிகுமிந்திர னசுவமேதத் தைப்பண்ணப்
பிரம கத்தியில்நின் றும் விமோசன மதைநண்ண
பரிசுத்த மாகினனென் றொருகதை யுண்டண்ண
பகிர்வே னந்தக்கதை பூபாலனே மணிவண்ண
பாரகா வியமுறை தாரகா பிரணவ
பூரகா தியின்முனி வோரகா மன்னர்பணி
[பாதனே (ஒரு)

3. வழுத்தவன் வெட்டினது வாய்கா லெனும்வழக்கம்
மண்டலந் தனிலெங்கு முமதுசீர்த்தி முழக்கம்
செலுத்தும் தேவரீர்திராணி ராசர்க்கெல் லாம்பழக்கம்
தேசதேச ராசர்கள்திறை யிட்டிடத் தொழக்கண்டிடும்
சீரியா - உலகதி னரியா - அருணிறை
வாரியா - அமரர்கள் காரியா - யெனவரு - ஜயராமா.
(ஒரு)

## இலக்குவன் விருத்திரன் கதை கூறத்தொடங்கல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

திருத்தியிந்த வகைதம்பி சொல்லி யின்னுஞ்
செப்புவான் பூருவத்தில் தேவ ராசன்
விருத்திரா சுரனைவதஞ் செய்த பாவம்
விலகவென்றே பரிமேத யாகஞ் செய்தான்
கருத்திலுள்ள பயந்தீர்ந்தே சுத்த னானான்
கதையையா னறிந்ததேவின் னப்பஞ் செய்வேன்
தருத்தனே யெனதய்யா வென்று சொல்லிக்
காட்டுவான் உறுதிதன்னை நாட்டு வானே,

## விருத்திராசுரன் வரலாறு

கல்யாணி ராகம்] [ஆதி தாளம்

பல்லவி

சத்திர பதியே யந்த விருத்திரன் கதையை - ராம
பத்திரா கேளும் வீடண மித்திரா.

அநுபல்லவி

பத்துப்பத்து யோசனை விஸ்தீரணஞ் சரீ
ரத்தை யுடையவனு
யர்த்தியோசனை முந்நூ றுத்தவன் மூன்று வுலகையு
மெத்தவே வேண்டி மனதினில் சுத்தமாகி சலத்தைத்
[தேறின
புத்திமா னெனவேபுகழ் மீறின (சத்திர)

சரணங்கள்

1. செய்தநன்றி மறக்காதவன் - தருமமெல்லாந்
தெரிந்தவன் நேமநிஷ்டை துறக்காதவன்
பொய்வசனம் பிறக்காதவன் - ஒருகாலத்தும்
புவியினிலவன் புகழிற் காதவன்.
தெரிவீர் பூமியையவன் பரிபாலனஞ் செய்துதான்
வரவே வெகுபெருமை தரவேபூமி யானவள்
சிறந்து மலரும் பலமுங் கந்தமு
நிறைந்து வளருந் திறமுங் கொண்டனள் (சத்திர)

2. மூவுலகை யாளுந் தேட்டா - னிராச்சியத்தை
மூத்த பிள்ளையினி டத்தில்வைத்துப் போட்டான்
தேவர்க ளுக்கிதங் காட்டான் - கொடியதவஞ்
செய்வதை யொருவனுந் தடுக்க மாட்டான்
முனையாகவே தவசு தனைநாடியே சேர்வன்
கனலானதி யாவருக்கும் வினையானது விளைக்க
முதிர்ந்த பலமுங் கனமுங் கண்டிதை
யெதிர்ந்து தடைவந் ததுவுங் கண்டிடுஞ் (சத்திர)

3. புதைத்து வைத்துப்பின்னும் பிச்சையே - எடுப்பார்களைப்
போலவே யெங்கெங்குங் கட்டியாளவே யிச்சையே
கதித்திடும் ஆசைதான் லெச்சையே - உண்டாக்குமென்று
கருதாமல் தவஞ்செய்யக் கட்டுங் கச்சையே

புதரார் சொல்வாருலக வதைதான தேபொருள்-ம
மதையே யிதுவுமொரு கதையான துலகிலே
புரந்தரனு மண்டரும் அஞ்சல் செயல்
நிரந்தரமு மங்கவர்தம் சிந்தனே. (சத்திர)

### தேவர்கள் திருமாலிடஞ் சென்று முறையிடல்

**கலிப்பா**

ஆசவனே செய்தவத்தை அண்டகடா கத்தமரர்
பேசவனே கம்பயந்து பின்னுங்கூட் டத்துடனே
வாசவனே உண்ணடுங்கி மாலிடஞ்சென் றேபரவிக்
கேசவனே யெங்கள்முறை கேளுமென்றே சொல்வானே.

### இதுவுமது

**கல்யாணி ராகம்]** **[சாபு தாளம்**

1. நாந்தகக்கை மாதவா வைகுந்தநாதா வாசுதேவா
   நாரணு உலக காரணு
   அந்தமாதி நடுவில்லா நந்தனே மாலே
   யகண்டா காரனே வேத சாரனே.

2. பாரிலேதானே விருத்திரா சுரனும் கோரதவம்
   பண்ணுறான் ஏதோ யெண்ணுறான்
   ஆரிய னேஉலக மெல்லாமவன் கைவசமா
   யாச்சுதே - தவசு - வாச்சுதே.

2. இங்கிவன் தர்மத்தினுலே யெங்களால் வாதிக்கப்பட
   வில்லையே வெகு தொல்லையே
   செங்கண்ணனே யெதுவரையுல கங்களிருப்ப தவ்வளவு
   தீருமே அவனைச் சேருமே. [காலம்

4. ஊணியகால் தானேஓராங் காணியாக ஆண்டுஎங்களை
   உருக்குவான் மிகவும் கருக்குவான்
   தோணிக்கொள் வீரையா சக்ரபாணியே அபயந்
   துளபத்தோளனே - கிருபை - யாளனே.

5. மேலிப்படி வந்ததைக்கண் ணலேகூடப் பார்க்காதென்ன
வேடிக்கை லீலை வாடிக்கை
நீலமேனி யனேயனு கூலஞ்செய்தே யெங்கள் துன்ப
நீக்குவீர் சுபமுண் டாக்குவீர்.

6. நீரொருகணங் கோபித்துக்கொண்டால் சூரனை விருத்திர
நிற்பனே - தவசு - கற்பனே [னிங்கனே
ஏருமந்த அசுரன்மேல் தேவரீரதிகப் பிரீதியாக
விருப்பதால் வலிமை பெருப்பதால்;

7. விள்ளுமென தேவரீர் பிரீதிதானே உள்ளமட்டுமு
வுலகாள வேண்டுரு னசுரன் தாண்டுரான்
துள்ளுவானே வரம்பெற்ருல் தள்ளலாமோ யெங்களாலே
துய்யனே ஞான மெய்யனே.

8. பாயும்புலி யேகாதசிவிரத மாயிருந்து மறுதினத்தில்
பாரணம் - பக - மாரணம்
தீயதாங்கே செய்ததென்றே மாயிருஞால வழக்கஞ்
சீதரா யெங்கட் காதரா.

9. பாச்சல்புலி பதுங்குவது பாச்சலுக் கடையாளமென்னும்
வழக்கமே யெங்கு முழக்கமே
நீச்சதாகத் துயர்க்கடலு மாச்சுதே யெங்களுக்குக் கதிதான்
நீரய்யா அருள்தரு வீரய்யா.

10. ஆதலா லுலகங்களுக்குப் பிரசாதம்நீரே பண்ணும்தேவரீ
ரடைக்கல மெங்கள் படைக்கலம்
ஆதியேநீர் விருத்திரவதத்தை சாதித்தாற்ரு னெங்கள்
[பேர்சொல்லி
யழைக்கலாம் நாங்கள் பிழைக்கலாம்.

## விருத்திராசுரனை வெல்லத் திருமால் உபாயங் கூறுதல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

கைகுந்த வேல்வாளுந் தரிக்கா நின்ற
கடுவசுரர் கோன்விருத்தி ராசு ரன்ருன்
செய்குந்த வத்திலெழுங் கனலா லெங்குந்
தீயுதே யெனவானோர் தேவ ராசன்

மைகுந்த மேனிதந்த மாலே யென்று
வணங்கியுரைப் பதுகேட்ட மரரை நோக்கி
வைகுந்த பதிசொல்வா ரதுவு மேற்ற
வயணந்தா னருள்செய்யு நயனந் தானே.

இதுவுமது

தோடி ராகம்] [ஆதி தாளம்

பல்லவி

அண்டர்களே கேளுமு பாயம் - அந்த
அசுரனுக்குண் டாகும பாயம்.

அநுபல்லவி

மண்டலந்தன்னில் விருத்தி ராசுரன் றன்னையுயிர்
வாட்டப் படை திட்டச் செயங்
கூட்டபுகழ் நாட்டி யின்னும் (அண்டர்)

சரணங்கள்

1. சகத்திலே யவன் குணங்கண்டு பரிந்தேன்
சினேகத்தி லேநான் கட்டுக்கொண் டிருந்தேன்
முகனையாய் நின்றவனை நான்கொல்லப் பொருந்தேன்
விலை - முறிப்பேன் - ஒன்று - குறிப்பேன்
கலை - பிரிப்பேன்; துயர் - பறிப்பேன் - இன்னும்
(அண்டர்)

2. எந்தன் கலையைமூன்று விதமாக்கி யிங்கு
யிந்திர னிடத்திலே தானொரு பங்கு
பிந்திவச் சிரத்திலும் புவியிலு மிரண்டு
பங்கு இந்தப் பேதம் மூன்று
விதம்செய்து நாதந் தனையேதந் தின்னும் (அண்டர்)

3. மேகவா கனனெந்தன் கலைகொண்டு நண்ணுவான்
விருத்திரா சுரனைச் சங்காரம் பண்ணுவான்
ஆகையினு லிதற்கோ ருபாயமதை யெண்ணுவான்
அவரே - இமை - யவரே - அருந்
தவரே - வரு - மவரே யின்னும். (அண்டர்)

## இந்திரன் விருத்திராசுரனை வதஞ்செய்யப் புறப்படல்

**எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்**

ஊணியே யச்சுதன்சொல் லினைதான் கேட்டு
முறுதியாய்த் தேவரெல்லாங் கூடி வந்தே
நீணிலத்தில் விருத்திரா சுரனி ருக்கு
நிலையறிந்து வந்துகண்டு மிகத்தள் ளாடி
ஆணியா யரிசொனதை நிசமென் றெண்ணி
ஆயிரங்கண் ணனெழுந்தே மனந்து ணிந்து
பாணியிரண் டால்குலிச மெடுத்தே யோங்கு
பாரந்தான் விருத்திரசங் காரந் தானே.

## இந்திரன் விருத்திரனை வதஞ்செய்த வரலாறு

**மோகன ராகம்] [சாபு தாளம்**

**பல்லவி**

சதஞ்செய்த மகன்விருத்திர வதஞ்செய்த வகையெல்லாஞ்
சாமி கேளுமென் சாமி.

**அநுபல்லவி**

மதஞ்செய்து மூன்றுலகும் வாரியெடுத் துப்பான
மதுஞ்செய்து தகிப்பானென் றுகாயத்தை நிதானம்
அண்டாரமு துண்டார் - தேவர் கண்டார் - பயங்- [என்று
[கொண்டா - ரின்னு
மப்படிக் கொத்தவனை யெப்படிக் கொல்வோமென்றார்
(சதஞ்)

**சரணங்கள்**

1. ஆங்கு தேவருடனே தேவராசன் துடித்தான்
அவன்கை யிரண்டாலும் வச்சிராயுதம் பிடித்தான்
ஓங்கி விருத்திராசுரன் தலைமீதி லடித்தான்
உறுதிகொண்டே தானென்னு மெண்ணமதை
[முடித்தான் - என்று
ஒலிக்கப் பிரதி பலிக்க-தேவர்
கெலிக்க சோதி சொலிக்கசுர
னுரசு தளர்ந்திடவே சிரசு பிளந்திடவே (சதஞ்)

2. அக்கினிச் சுவாலைமண்டச் சிரசு பிளந்துபோட
ஆகாசத்தி லெழும்ப வதினு லுலகம்வாட
தக்கவிருத்தி ராசுரனைச்சங் காரஞ்செய் ததைக்கூடத்
தானறி யாமல்தேவ ராசன்ப யந்தேவோட - நிறைந்
தகத்திப்பிர மகத்திமூடி முகத்திப்பவு ஷகத்தியதைத்
தரிக்குஞ்ச ரீரமுந்த னுருத்தெரி யாமல்வந்த (சதஞ்)

3. கட்டுத்த[ரை]யில் தேள்கொட்டக் குட்டிச்சுவரில்
[நெறிகட்டக்
கண்டவழக்கச் சொல்லுப் போலேயப் படிப்பட்ட
சட்டமாச்சு திந்திரனைப் பிரமகத்தி மூடவிட்ட
சாட்சாத் நாராயணராம் சாமிவினை யாட்டேதிட்ட மிது
தாமாஅரி - ராமாவெகு - நாமாசார்வ - பவுமாதேவர்
சாதகஞ் செய்துபரி மேதயாகஞ் செய்தாரே. (சதஞ்)

## இந்திரனைப் பிரமஹத்தி தோஷம் பிடித்தல்

### கலித்துறை

கடந்தமெய்ஞ் ஞானியர் யோகியர் இப்படிக் கடந்துநிட்டை
படர்ந்துசெய் யாரெனச் சொல்லும் விருத்திரன்
[பரங்சுளைந்தே
யடர்ந்து வலாரி குலிசா யுதங்கொண் டடித்ததினுல்
தொடர்ந்து பிரம கத்தியுந் தான்வந்து சுற்றியதே.

சங்கராபரண ராகம்] இதுவுமது [சாபு தாளம்

### பல்லவி

பிரமகத்தி சுத்திக் கொண்டதே - இந்திரனை யமரர்
பிரமகத்தி சுத்திக் கொண்டதே.

### அநுபல்லவி

பிரமகத்தி சுத்திக்கொண்டு வருவிதத்தை
[யுற்றுச்சொல்வேன்
உரமிகுத்த விருத்திராசுரன் சுரமறுத்தி டத்தெழுந்து
(பிரம)

சரணங்கள்

1. தயங்கச்செய்து பிரம கத்தியே - எழுந்து
   தான்தொடர்ந் திந்திரனை நத்தியே
   மயங்கி யோடிப்பி னத்தியே - தன்னை
   மறந்தேயு லகமெங்குஞ் சுத்தியே
   பயங்கொண்டு வாயிரங் கண்ண
   னொருவிடத்தில் நில்லாமலே
   கலங்கி முகம்வாடிப் பூமி மலையுடன்
   காடென் றவிதந் தோணுமலே
   அயர்ந்து சிலகால நகரஞ் சுத்தப்பட்ட
   வனைப்போல நின்றான்பின் னேயாமலே
   உயர்ந்த உலகிலுந் தாழ்ந்த உலகிலு மோடி
   ஒளிந்து உருத்தெரி யாமலே (பிரம)

2. அரசனில் லாதபடை வெட்டுமா - அண்ட
   ராதிக்கந் தானுலுங் கட்டுமா - நெஞ்சி
   லரசிருந் தால்விதியு மொட்டுமா - பாவ
   முக்கிர மானுலகை யெட்டுமா
   ஒருவருயிர் வதைசெய்வ தென்ன
   வெளிதான வார்த்தையா சகத்தில்
   வருமேபெரும் பாவமது தொலைக்கவே
   எவர்கள்தர மெந்தம கத்தில்
   தரணி தனில்கொலை களவுபொய் யுங்குரு
   நிந்தைகட டா...........ரம்பாத கத்தில்
   வரிசையிது பஞ்சமா பாதகமல் லோவான
   வர்கள்கோனை வளைந்தான் முகத்தில் (பிரம)

3. ஏழுலகு நடுங்க லாச்சுதே - பூமி
   யிற்பகை யில்லாமற் போச்சுதே - மிருகஞ்
   சூழுங் காடுகளையுந் தீச்சுதே - மேகஞ்
   சுரப்பில்லாமல் நிர்ச்சல மாச்சுதே
   தாழு மடுக்களிலுஞ் சலங்களில்
   லாமல் வற்றித்தரை வெடிக்க
   பாழ தாகியெங்கு மன்ன மாகாரங்க
   ளின்றிப் பிராணிகளுந் துடிக்க

ஊழிக்காலம் வந்து மூடிக்கொண்ட தென்று
யோகி சித்தரெல்லாம் படிக்க
ஆழியானது வெங்கும் கொதிப்பெடுத் தண்ட-க
டாகங்கள் குலையக்காற் றடிக்க. (௰ரம)

## இந்திரன் பழியைப்போக்கத் தேவர்கள் திருமாலிடம் வேண்டல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

தரியாம லுருத்தெரியா திந்தி ரன்றான்
தவிக்கின்றா னெனவங்கி வியாழ னாதி
வரிசையாந் தேவரெல்லாங் கூடிச் சென்றே
வைகுந்த மதியேமா தவனே யிந்த்ரன்
பரிபவத்தை நீக்குமென்றே துதித்து வேண்டப்
பயந்தீர்ப்பே னீரெமக்குப் பிரீதி யாகப்
பரிமேத மகந்தொடங்கு மென்று..........டிப்
பண்ணினா ரிந்திரனை நண்ணி னாரே.

## தேவர் அயமேதம் செய்ய இந்திரனைவிட்டுப் பிரமஹத்தி தோஷம் நீங்குதல்

### இதுவுமது

நெருக்கமுள தேவரெல்லாங் கூடி வேத
நெறிகொண்டே அயமேதந் தொடங்கிச் செய்ய
அருக்கனைக்கண் டபனிபோல் பிரம கத்தி
யகன்றுநின்றே அண்டர்களே யெனக்கே தானு
மிருக்குமிடஞ் சொல்லுமென நாலு பங்கா
யெடுத்துக்கோ வுன்களையை யெனவே தானே
வரிக்குமந்தப் படிதானே யிருபோ வென்ற
வாறுதா னதுநான்கு கூறு தானே,

## பிரமஹத்தி தோஷம் சேரும் இடங்கள்

புன்னுகவராளி ராகம்] [ஆதி தாளம்

பல்லவி

நாடி யிருக்குமே பிரமஹத்தி
மூடி யிருக்குமே பிரமஹத்தி.

அநுபல்லவி

நாடி யிருக்கவே தேடின விடத்தைக்
கூடி யிந்திரனைவிட் டோடின படியே (நாடி)

சரணங்கள்

1. பாவ சண்டாளர் தெய்வநிந்தனை தங்கும்
பவிசு கெட்டமு கத்தவர் போலெங்கும்
ஆவணியாய் நான்குமதி பொங்கும்
ஆற்றுவெள்ளத் துடன்கூடி யொருபங்கு (நாடி)

2. மூனுங் கோவஞ்செய் மனித ரதிகாமி
மூடர் பரிசிக்குந் தானதமதாய் நேமி
நாளுநல் லந்தணர் யோகஞ்செய்யுஞ் சாமி
நல்லோர் பாதம்படா தொருபங்கு பூமி (நாடி)

3. தவ்வை பிடித்தமுகமும் பாழு நெற்றி
தான்கொடவா(?)கருவ மடக்கி யத்தி
எவ்வன சாலியரா மங்கைமாரைப் பற்றி
யேமூன் றிரவதும் விலகும்படி சுத்தி (நாடி)

4. பேர்தனிற் பெரியோ ராமறை யோரைப்
பின்னுள்ள முச்சாதிக் குங்குரு வானுரை
பார்தன்னில் தேவ ராகிவரு வோரைப்
பார்ப்பானென் றெண்ணுமல் பழிதான் செய்தபேரை.
(நாடி)

## அயமேதத்தின் பலனை இலக்குவன் கூறல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

இந்தவகை யாய்ப்பிறந்து தானே தான
மேற்படுத்திக் கொண்டதந்த வமரர் முன்னே
இந்திரனைப் பிரமகத்தி விட்டு நீங்கி
எழில்பெறவே கிரணமது தொட்டு விட்ட

சந்திரனைப் போல்விளங்கி யிந்திர போகந்
தரிக்கின்ற னயமேத பலந்தா னென்றே
அந்தவகை செய்வதென்று சொன்ன தம்பி
அவர்கண்டார் வுலகிலினி யெவர்கண் டாரே.

### அயமேதத்தின் சிறப்புப்பற்றி இராமபிரான் கூறல்

இதுவுமது

வளமிகுந்த பரிமேத யாகத் தாலே
மகத்தான பிரமகத்தி தீர்ந்த தென்றே
யுளகாதை தம்பிசொல்ல நகைகொண் டேகேட்
டோங்குபுகழ் தாசரதி சொல்வா ரிங்கே
தளமிகுந்த தம்பியரே கேளீர் முன்னாள்
தராபதியா மினராசன் பேட தாகி
இளையென்னும் பெயர்கொண்டா னதுதான் தீர்ந்த
தியாகந்தா னயமேத மோகந் தானே.

### இராமன் கூற்று: தொடர்ச்சி

சாவேரி ராகம்] [ஆதி தாளம்

பல்லவி

தளராத புகழ்கொண்ட யிளராசன் கதை - கேளீர்
தம்பிமாரே யென்னுடன் பிறந்தோரே.

அநுபல்லவி

வளமேவுங் கர்த்தமப் பிரமாமைந்தன் பலிகேசன்
மண்ணுல கத்தினிலே பெண்ணுரு வமும்நீங்கப்
பண்ணிய தயமேதப் புண்ணிய பலந்தானே (தளராத)

சரணங்கள்

1. தரணியெல் லாங்கை வசமாய்ப்
பண்ணிக்கொண் டானந்த நாட்டைத்
தர்மத்தி னலேப ரிபாலனஞ் செய்து
கட்டினன் புண்ணியக் கோட்டை

சுராசுர ரெல்லாம் புகழ்ந்தாரே சித்திரை
மாதத்தில் பண்டொரு காட்டை
சூழ்ந்து சேனையா யுநவரி சைகள்கொண்டே
யாடினன் மிருக வேட்டை
துட்டமி ருகங்களின் கொட்டம தடங்கவே
வெட்டுங் குத்துங்கொண்டு சுட்டுமின் னுமின்னும்
தொடர்ந்துகொண் டோடி யோடியே
படர்ந்துதான் வேட்டை யாடியே
சுரர்கள் பரவுஞ்சுப் பிரமணியர் பிறந்த
சரவணைக் காட்டிலு நரபதி யடைந்தானே (தளராத)

2. அந்தச் சரவணக் காட்டில்கை லாசநாதர்
பார்வதி யுடன்கூடி
அம்மனுக்குப் பிரீதி யாயரன் பெண்வேடந்
தரித்தே விளையாடி
அந்தலீ லாவினோத மாகவே பருவதக்
குகைதனை யேதேடி
அங்கு வாசஞ்செய்ய மிருகபட்சி மரங்கள்
முதலாய்ப் பெண்ணுரு நாடி
அந்த வகைவர வறிந்து பின்னுமனம்
நொந்து மிகுவுமான விந்தையென வுருகி
அந்தோநா மறியாமல் போனோம்
வந்தோ மெல்லாரும்பெண் ணானோம்
அச்சையெல் லாமறிந்து லச்சையுட னேயந்தக்
கொச்சை வடிவம்வந்த உச்சிதக் கதைகேளு
(தளராத)

3. தேவதேவ ருமாபதி திருவிளை யாட்டிது
வென்றுசிந் தையி லெண்ண
திக்குநோக் கித்தியா னஞ்செய்து சிந்தை
யுருகவே வந்தனம் பண்ண
தேவியு டனேகூடி பசுபதி யெழுந்
தருளியந் திடத்தில் நண்ண
தீரனே யிளராச ரிஷியே எழுந்தி
ரென்றே சொல்லியிவ் வண்ண

தீங்கில் புருடத்துவ நீங்கவர முத்தது
யீங்கதேது வுற்றுரை பாங்குட னளிக்கவே
தீரங்க ளாயெனக் கனிந்து
வாரங்கே ளாமல் குனிந்து
தேகம் நடுங்கியங்கே மாகவுரி சுந்தரீ
லோக நாயகிபாத மேகருத்திற் கொண்டானே.
(தளராத)

## இதுவுமது

### நேரிசை வெண்பா

பெண்ணுருவ நீங்கப் பெறுவரமொன் றையொழிய
எண்ணுவதெல் லாந்தருவோ மென்றனரே - கண்ணுதலார்
நீயேவ ரந்தருவாய் நித்தசுப மங்கிலியென்
றுயேயென் பானிளரா சன்.

## இதுவுமது

**ஆனந்தபைரவி ராகம்]** **[ஆதி தாளம்**

### பல்லவி

ஆனந்த பைரவி நீயே யென்தாயே - தாயே
ஆனந்த பைரவி நீயே

### அநுபல்லவி

ஆனந்த பைரவி ஞானந்த மெய்யிறைவி
அனையே பரிதாபந்தீர்த் தெனையேரட்சிப் பாய்நீயே
(ஆனந்த)

### சரணங்கள்

1. பருவத ராச குமாரி கவுமாரி
பாசாங்குச தாரி பஞ்சாட்சரி
தருணிமங்க ளாகாரி சாம்பவி சடாதாரி
கருணைநிதி யோங்காரி கற்பகமே ரீங்காரி (ஆனந்த)

2. வேணதெல் லாந்தரு வாயே - கதிநீயே
வேதாகம மாயே வருவாயே
தாணுபா லுறைவாயே தஞ்சந்தஞ்ச மென்தாயே
ஊணியென்னைக் காப்பாயே உறுவினையைத்
[தீர்ப்பாயே (ஆனந்த)

3. தரிசனம் தந்த கீர்வாணி மலர்வேணி
சிங்காரி புராணி நீர்வாணி
திரிபுரை யபிராணி தேவி கருணைத்தோணி
வருநாற்பத்து முக்கோணி மாயேச்வரி கல்யாணி.
(ஆனந்த)

## இதுவுமது

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

ஆதிபரா சத்திதனை யிளனிவ் வாறு
அடிபணிந்து வேண்டஉமை யவளுஞ் சொல்வாள்
பாதிவரக் காரர்மகா தேவ ரேநான்
பாதிவரக் காரிகண்டா யிதுநா னீவேன்
ஓதவே மகிழ்ச்சிவந்தே இன்னுஞ் சொல்வான்
ஒருமாதம் பெண்பின்னோர் மாத மாணும்
நீதியாய் வேணுமென்றான் தந்தா னந்த
நிலைகொண்டான் மார்பில்வன்ன முலைகொண் டானே.

## இதுவுமது

பெண்ணுருவா யிளையெனவும் பேரு மாகிப்
பின்னுடனே வந்தவரப் படியே யாக
நண்ணுதலாள் உமைவாக்குப் படிபெண் ணுணின்
ஞாபகமே யில்லாமல் நடந்து வாசம்
பண்ணினார் காட்டினிலே நளங்கள் சேர்ந்து
பாவைமா ரெல்லாரும் பாங்கி யாகப்
பெண்ணரசி யாலுனே யிதற்காய் வந்து
பிறந்திட்டான் பூருவத்தை மறந்திட் டானே.

## இளன் வரலாறு ; தொடர்ச்சி

**கேதார கௌள ராகம்]** **[ஆதி தாளம்**

### பல்லவி

பைந்தொடி யாயின இளன்கதை யின்னுஞ்சொல்வே
பரதலட் சுமணரே கேளீர்.

### அநுபல்லவி

பிந்தியென்ன சொல்லலா மிந்தக்க தைக்குவமை
பேசுங்கூத்துப் பார்க்கப் போய்
பேய்பிடித் தாடினாற் போலே (பைந்தொடி)

சரணங்கள்

1. என்ன சொல்வேன் தலைமயிரிற்
பின்னலுண்டாய்ச் சுட்டியுண்டாய்க்
கன்னல்மொழி மின்னிடையா
யன்ன நடையாய்
பொன்னின்கிண்ணம் போலேமார்பில்
வன்னமுலை யெழுந்தே
நன்னயம தாகிய சொர்னப்பது மையைப்போலே
(பைங்கொடி)

2. கூடவந்த பேர்களெல்லாம் பேருருவ மாகியந்த
நீடியவ னத்திலெங்கும் தேடித் தேடியே
கூடிக்கொண்டு வரும்போதோர்
ஓடைமீதில் நடுநீரை
நாடியோர் புருஷன்கன்னை
மூடித்தவம் செய்யக் கண்டான் (பைங்கொடி)

3. களங்கனருள் மைந்த னேயக ளங்கனை பூத னந்தக்
குளந்தனி லிருந்தே சோதி விளங்கவே கண்டா
வளங்களாகப் பேசிக்கொண்டு தளங்கள்சேர்ந்து
[வந்திடப்பெண்
களங்கூடி மூடர்கள்தம் முளங்கள்போலே கலக்
[கினார் (பைங்கொடி)

4. மானிலத் தூர்க்குப் போம்போது
பூனைகுறுக் கிட்டாப் போலே
யானது புகன்முன் பெண்கள்சேனை வந்தது
ஞானப ரனுமைவன் தியானமது குலைந்திட
தேனனைய சங்கீத கானரசம் புகட்டினர் (பைங்கொடி)

5. ஏகமன தாயிருந்து யோகஞ்செய் யொட்டாமலே
லோகசுந்தரி யாமினி மோக லாகிரி
வேகங்கொண்டே புகனெஞ்சு பாகுபோ லுருகித் தையா
நாகரிக மானசந்திர சேகரர்விளை யாட்டாலே
(பைங்கொடி)

6\. பண்டிதன் புதனிளையைக் கண்டுதேவர் நகரிலுங்
கண்டதில்லை யென்றுநெஞ்சில் கொண்டே
[யெண்ணுவான்
மண்டலத் தொருவர்கிட்டக் கொண்டிருந்தவ னல்லவாம்
அண்டியிவளை யோகாமே பெண்டாளவே னுமென்
[றெண்ண. (பைந்தொடி)

## இதுவுமது

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

வாகனங்க ளேறிவந்த தெல்லாங் காட்டில்
வரிசையா யெறிந்துவிட்டுப் பெண்ணே யாகி
மோகனமாய் வந்துநின்றாள் தன்னைக் கண்டு
முயங்கியே புதன்தவத்தை நிறுத்தி வந்து
வேகமா யாச்சிரம மதனி லேக
விரைந்தங்கே பாங்கிமார் நான்கு பேர்கள்
நாககன்னி மார்போலே வரக்கண் டேநன்
நாளென்பா னிம்மின் னௌன் பானே.

## இதுவுமது

எங்களெச மானியென்று மொருவர் தொட்ட
தில்லையென்றுஞ் சொலக்கேட்டு நீங்க ளெல்லாம்
இங்குளமா மலையினுள்ள கின்ன ராளை
யிசைந்தனுப வித்திருங்க ளென்ற னுப்ப
அங்கவர்க ளேகிடப்பின் னுக நின்ற
அரசியா மரசனுடைச் சரிதை கண்டு
நங்கையரே யென்றகதை கேளீ ரென்ப
ரிராமன்தான் சகத்திரநன் னுமன் தானே.

## இளராசன் வரலாறு : தொடர்ச்சி

**சௌராஷ்ட்ர ராகம்]** **தரு** **[..........தாளம்**

**பல்லவி**

1\. பரத லட்சுமண ரேயென் னுயிரே
பண்பு சேருயர் துணையே
நரபதி யாமிள ராசன் காதையை
நாடிக் கேளுங்கண் ணிணையே,

2. இளனென ராசன் உலகை சுந்தரி
யிளையென்ற பெயர் வாங்கினான்
தளமதாய் வந்த பெண்க ளெல்லாரும்
தானவி டம்விட்டு நீங்கினார்.

3. சகியன் பருவதத் தாழ்வ ரையிலே
தானே கிம்புரு டரரை
சுகமாய் மருவ வோடி னார்களே
சூழ்ந்த தங்குமவ் வேளை;

4. சந்து வாச்சுது லோக சுந்தரி
தனியை நின்றதைக் கண்டு
சந்தி ரன்சுதன் என்பேர் புதன்
தையலே நான்மையல் கொண்டு;

5. மதன்சரத் தாலே வாடு றேனடி
மருவி யணையடி மானே
அதிமோகம் நீதந்தாய் சேர்ந்தணை யென்று
அரிவையி டங்கெஞ்சி னனே.

6. இளையு மிது கண்டுமே சமிய
யானு முன்னுடை வசமே
நளின மிருமுமக் கேற்றி டும்படி
நடக்கி றேனிது நிசமே.

7. தானிது கேட்டிந்த இளையுடன் கூடி
சரச சல்லாப லீலை
யானது சித்திரை மாத மென்றே
யங்க சனுடை வேலை;

8. நடந்து வையாசி மாதம் வருமுன்
ஞான வான்புதன் கண்டான்
கடந்தன்னில் வந்து சலத்தி நடுவே
தவசி ருப்பதே கொண்டான்.

9. இளையென் பவளும் பெண்ணுரு நீங்கி
இளனென்னும் ராச னனன்
தளபதி யாகக் கூட வந்தபேர்
தங்களைத் தேடிப் போனன்.

10. மார்க்கந் தன்னிலே வோடை மீது
தவஞ்செய் புதனை நேராத்
தீர்க்க தவசியே கேளு மெந்தன்
சேனை களைப்பார்த் தீரா.

11. கலாவல் லவர்நீரே சொல்லு வீரே
காணு மென்றிடும் போதே
சிலாவ ருடத் தாலடி பட்ட
சேதி யுந்தவ ருதே.

12. சொல்லியு மிங்கோர் வருட மிருந்தாற்
சுபம்பெ றுகுவாய் மன்னு
நல்லதா மிந்த வாச்சிர மத்தில்
நாடிப் போயிரு வென்ன ;

13. பெண்டுநகை கண்ட வன்விடா னென்னும்
பேச்சுமுண் டல்லோ பாரும்
உண்டி னுஞ்சுய காரி யப்புலி
ஒருவ சனஞ்சொல் பாரும்.

14. அப்படிப் போலே இளனுக்குச் சொல்ல
ஆச்சிர மத்தோர் மாதம்
செப்பமாய்க் கந்த மூல பலத்தைத்
தின்று கொண்டவன் வாசம்.

15. பண்ணு போதிலே மறுமாதம் வந்து
பழைய படியே தேகம்
பெண்ணுரு வாகி புதனுடன் தானே
பின்னு மன்மத போகம் ;

16. அனுபவஞ் செய்தா னென்பது மாத
மீதிலோர் பிள்ளைபெற் றெடுத்தான்
புனவி லேதவஞ் செய்த தகப்பன்
புதன்கையில் தானே கொடுத்தான்.

இதுவுமது

இளையென்னும் பெண்ணுருவ நீங்கிப் பின்னு
 மிளனென மாதமதில் நல்ல வேளை
விளைவதாய்ச் சங்கவர்த்தர் சவனர் கூட
 மேவுபார்க் கவரிட்ட நேமி யென்று
வளர்பிரமோ தனர்துருவா சரையுந் தானே
 வரவழைத்தே சந்திரனர் மைந்தன் காத
லுளகார்த்த மனுக்கிதஞ்செய் வீரே யென்று
 உறுத்தினன் புகழைநிலை நிறுத்தி னனே.

## முனிவர், இளராசனின் பெண்ணுருவம் நீங்கும் வழியை எண்ணல்

இதுவுமது

ஆரியரா முனிவருடன் சேர்ந்து கொண்டே
 ஆச்சிரமத் திற்செலவே யங்கே வந்தார்
காரியகா ரணமறிந்த பெரியோ ரான
 கர்த்தமர் புலத்தியரோங் கார மென்றும்
பேருயர்ந்த தவர்முதலோர் வந்து கூடிப்
 பேசியே யிளராசன் பேடு நீங்கித்
தாரணியில் வாழ்வதற் கெண்ணு வார்கர்த்
 தமர்சொல்வார் மிகுதவப்பிர மர்சொல் வாரே.

## முனிவர் ஆலோசனை; அயமேதஞ் செய்ய நிச்சயித்தல்

**கல்யாணி ராகம்]** [சாபு தாளம்

பல்லவி

மறையோரே இது தொல்லையே - இளனுக்கேற்ற
வைத்தியம் வேறில்லையே.

அநுபல்லவி

முறையறிந் தயமேதத் துறைசெய்தால் அரனுக்குப்
 பிரியமுண் டாகிவந்து குறைதீர்ப்பாரே யல்லாமல்
 (மறையோரே)

சரணங்கள்

1. நீடு மூலகில்வந்து பேடுநீக்கிப் பிறக்கக்
கூடுவ தெளிதாமோ ஆடு மாடுசெடி
பூடுஞ் சரவணையாங் காடுகன்னி லேமுன்னாள்
நாடுபெண் ணுருவாச்சே சூடுதெரி வீர்களே
(மறையோரே)

2. வேதஞ் சொல்லுவதய மேதயா கத்துக்கொரு
பேதமில்லை யேதுய்ய போதமி குந்தவரே
மாதமுறையா யானபெண் ணுதலதுவு நீங்கிக்
கேதந்த விர்த்தான்பிர சாதனிள னுக்குண்டாம்
(மறையோரே)

3. உத்தமா புருஷன்ம ருத்தனுக் கிந்தசங்க
வர்த்தரியா கமும்செய்து வைத்தபெரி யோராமே
சித்தமகிழ்ந் தெல்லாரு மொத்துயா கஞ்செய்வோங்
கர்த்தன் இளனைப்பரி சுத்தமரன் செய்வாரே.
(மறையோரே)

## முனிவர் அயமேத வேள்வி செய்ய, சிவபெருமான் இளனின் பெண்ணுருவம் நீங்கச் செய்தல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

பண்டிதமு மிதுதானே யிளனுக் கென்றே
பரிந்தேகர்த் தமருடனே பெரியோ ரெல்லாம்
பண்டிதனுச் சிரமத்தின் சமீபங் கொண்டே
பண்ணினா ரயமேத மவிர்ப்பா கத்தை
உண்டிதமா யெழுந்தருளிக் கைலை மேவு
முமாபதிதா னிளராசன் பேடு நீங்கி
மண்டலத்தில் வாழ்ந்திருக்க வேணு மென்றே
வரந்தந்தான் அபயமென்ற கரந்தந் தானே.

## இளன் பெண்ணுருவம் நீங்கிப் பழைய உரு அடைதல்

### கழிநெடில்

இளராச னுக்கே யிதஞ்செய்த பெரியோ
ரியாவரு மவரவ ரிடத்தி
லேகினர் பின்பு மிவ்விளன் முன்னு
ளிருந்ததே கந்தனை விட்டு
வளமேவு பிரதிட் டானமா நகரை
வந்துசேர்ந் தாண்டினி திருந்து
வாலிக தேசத் தில்சசி பிந்து
வெனுமைந்தனை யாண்டிரு வென்றும்
உளமகிழ்ந் தருளிப் புரூரவ னெனவே
உண்டான புதன்மைந்தன் பக்க
லுயர்பிரதிட் டான புரத்தையே கொடுத்து
மோங்கிய பதவியில் சேர்ந்தான்
களகண்ட னருளாற் பெண்ணுரு நீங்கி
கண்டதால் பிரம்மத்தி தீர்ந்த
கதையிதி சயமோ யென்தம்பி மாரே
கண்டீ ரயமேத பலனை.

## இராமன், அயமேதஞ் செய்ய ஏற்பாடு செய்தல்

புன்னுகவராளி ராகம்] தரு [ஆதி தாளம்

1. இளன்கதையு மயமேத வளங்களெல்லாஞ்
[சொல்லிப்பின்னு
மிலக்குமனைப் பார்த்துரைப்பார் ரகுராமன்
களங்கமில்லா தயமேதம் விளங்கவேநான் செய்யவேணும்
கண்டிடாய் துணையென்பா ராயிரநாமன்.

2. வேதமார்க்க மாகுமய மேதயாக விதியறிந்த
வேதியர்தமக் கேயந்த விதந்தோணும்
தீதில்லா வதிட்டரவர் வாமதேவ ருடன்சாபாலி
காசிபர்முதற் பெரியோரிங்கே வரவேணும்.

3. மகிமையுள்ள யிவரையெல்லாம் வரவழைப்பாய் தம்பி
லக்குமாகுண சாலிதர்ம நெறியோனே
சகலலட்சண சம்பன்ன புரவியது தேசமெங்குஞ்
சஞ்சரிக்க விடுவேனீ தறிவோனே.

4. கோதண்ட தீட்சாகுரு யிவ்வாறு சொல்ல
அந்தணர்கள் கூடிவரச் செய்தனனே தம்பி
மாதவர்வ திட்டரையே ஆதிவேத பாரகரை
வந்தனஞ்செய் துங்களைநான் நம்பி ;

5. யோகஞ்செய்து பரிமேத யாகஞ்செய்ய வெண்ணுகின்றேன்
உத்தமரே புண்ணியத்தின் பொருளே
ராகத்துவேஷக் காமக்குரோ தாதிகளைச் செயிக்கின்ற
ஞானவான்களே உயர்ந்த அருளே.

6. வடபத்திரத் துயில்நீங்கி யயோத்திவந்தா னிந்த
வகைவணக்கங் கண்டு கூறுவதைக் கண்டு
இடபக்கொடி மேருவில்லி யாகுமூர்த்தியைத் தியானித்து
யாவரும் நமஸ்கரித்துக் கொண்டு ;

7. வாசிமேத யாகந்தன்னைப் பூசனைசெய்து கொண்டாடி
வாருமய்யா ராமராச ரேறே
மாசில்லாத சூரிய குலாதிபதி யாகிவந்தீர்
மண்டலத்தி லெங்கள்தவப் பேறே.

8. ராட்சத குலாந்தகரே தேவர்க்கெல்லா மனுகூல
ராகவந்த ராகவரிப் போதே
தீட்சித ராகவிருந்து தரிசனந்தந் திடவேணும்
திவ்வியமான யாகசாலை மீதே ;

9. எனவதிட்ட ராதியான அந்தணரெல் லாருஞ்சொல்ல
வேமகிழ்ச்சி கொண்டுறுதி யூன்றி
தனதுதுணை யானசவு மித்திரியைப் பார்த்துச்சொல்லு
வாரென்சாமி வீரஞ்சேர் கோதண்டபாணி.

## இராமபிரான் அயோத்தியில் நடைபெறும் அயமேத யாகத்துக்கு அனைவரையும் வரவழைக்கச் செய்தல்.

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

பலங்கைவரச் செயுந்தவத்தால் வருங்கிட் கிந்தா
பட்டணவா னரவெள்ளஞ் சுக்கி ரீவன்
இலங்கைவளர் சிரஞ்சீவி விபீட ணந்தா
னிராக்கதர்க ளுடன்வரவே யெங்கு முள்ள
தலங்கைகொண் டரசுபுரிவா ரின்னுந் தேசாந்
தரத்திலுள்ள வேதியர்க ளியாவர் யாக
புலங்கைவந்த வர்களைவர வழையென் றன்பு
புல்லுவான் இளையவர்க்குஞ் சொல்லு வானே.

### இராமன் கூற்று

காம்போதி ராகம்] [ஆதி தாளம்

பல்லவி

வரவ ழைப்பாய் துணைவனே - லட்சு
மணனே யமுத குணனே.

அநுபல்லவி

புரவிமேத யாகமாம் புண்ணியஞ் செய்யப்
பொருந்தினனே யாகப் பூமிமேலே அய்யா (வரவ)

சரணங்கள்

1. மகத்தான தெய்வப்பிறப்பாம் வானர வெள்ள
வரிசையுட னேசுக்கி ரீவனையு மகிழ்வுள்ள
மிகுத்த ராட்சதசேனை விளங்கவே யுள்ள
மெய்யான சிரஞ்சீவி விபீடணனைக் கண்டுகொள்ள
(வரவ)

2. பருப்பில்லாத கலியாணம் பண்ணுவாரோ ஆரும
பாரசுக்கி ரீவன்விபீ டணனென்பா ரிரண்டுபேரும்
விருப்ப மிகுந்தேபரி மேதயாகஞ் சேரும்
விதமெல்லா மவர்பார்க்க வேண்டுமனங் களிகூரும்
(வரவ)

3. யாகசாலை தனைக்கூடி ராசர்கூட்டம் நீட
 யாகலட்ச ணீகர் வேதியர்களே கொண்டாட
யோகியரா மிருடிகள் உத்தமர்கள் நாட
 உண்மைசேர் தம்பதிகளா யுற்றுவேதா கூட (வரவ)

4. நண்பாக வேசங்கீத நாட்டிய நன்னூலை
 நயமாய றிந்துகந்த நாடக சாலை
பண்பாங்கோ மதிதீரம் பாங்கதுவே சோலை
 பரவுநை மிசாரண்ணியம் பாரியாக சாலை. (வரவ)

### இராமன், வேள்விக்கு வருபவர்களைத் தக்கவாறு உபசரிக்குமாறு தம்பியிடங் கூறல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

கோமதிப்பாங் கரின்னைமி சாரண் ணியத்தில்
 கொண்டுமா மேதமகந் தொடங்கு கின்றேன்
ஆமதினல் வருசனங்க ளியாவ ருக்கு
 மன்னமுத லாடையா பரண மெல்லாம்
தாமதியா மற்கொடுக்க வேணும் வந்த
 சனங்களைவி சாரணைசெய் திடவே தம்பி
மாமதிமா னேகேளென் பான யோத்தி
 வாசன்றன் ராமமக ராசன் தானே.

### இலக்குவனிடம், வேண்டிய பொருள்களுடன் பரதனை யழைத்துக் கொண்டு, வேள்வி நடக்கும் இடத்துக்குச் செல்லுமாறு இராமபிரான் கூறல்

உசேனி ராகம்] [ஏக தாளம்

பல்லவி

தம்பி லட்சுமண சொல்வேன் கேளாய்
தம்பி லட்சுமண சொல்வேன் கேளாய்.

அநுபல்லவி

நம்பிக்கை யாயிக்கோ மதிதீரங் கூட்டி
 நைமிசா ரணியத்தில் யூபத்தம்ப நாட்டி
தம்பமா மேதயாகஞ் செய்தற் கேற்பாயே
 சம்பார மெல்லாங்கொண்டு போய்நிறைப் பாயே
(தம்பி)

சரணங்கள்

1. பாங்காக லட்சம் புரவிமேல் தண்டுலம்
   பதினுயிர மாமீதில் பயறெள்ளு
மாங்கப்படி கொள்ளு கடலை யுளுந்து
   மப்படியே லவணம்
தாங்கு மிதுக்குள்ள எண்ணெயுங் கூடச்
   சாதியதாய் நல்ல சந்தனமும் - வள
மோங்குஞ் சுவர்ணம் வெகுகோடி கொண்டுநம்
   முயிர்த்துணை பரதன்முன் னடக்கட்டும் (தம்பி)

2. வேண்டிய தெல்லாந் தருங்கடை வீதியும்
   வேடிக்கை யாய்நட நாடக சாலை
தூண்டு மேவலாள்கள் எவ்வண சாலிகள்
   சொற்படி வேலை செய்வார்
ஈண்டிய யானை குதிரை காலாளுடன்
   யேற்கு நம்மிந்தவ யோத்தியின் மேல்வாழ்வு
பூண்ட சனங்கள்பால விருத்தரெல் லாரும்
   பொன்னூல் தரித்தோரு முன்னே நடக்கட்டும் (நம்பி)

3. சித்திரக் காரர்கள் பொக்கிஷக் காரர்கள்
   சேர்ந்த கணக்கறி ராயசக் காரர்கள்
மத்திவ ரெல்லாரும் முன்னே நடக்க
   வேவரி சையாக வே
உத்தமி களாமென் தாய்மார்கள் - அவ
   ருடனந்தப் புரராணிகள் பிள்ளைகள்
சுத்துமிவர் செல்லுந் தங்கப் பல்லக்குமுன்
   சூழ்ந்தே பரதனு முன்னே நடக்கட்டும் (தம்பி)

4. பின்னுஞ்சொல் வேன்கேளாய் கோமதி தீரத்திற்
   பெரிதான நைமிசா ரண்ணி யத்திலில்
மன்னும்பரி மேத யாக சாலைசெய்
   வண்மை யாயினதே
பன்னுமறை சொற்படி யெந்ததிட் சைக்கும்
   பத்தினியா மென்று பத்தினியாய் வைத்த
என்னுடைப் பொன்னன தேவியை முன்னிட்டு
   ஏன்னோர் பரதனு முன்னே நடக்கட்டும். (தம்பி)

## வேள்விக்குதிரைக்கு நெற்றிப்பட்டம் கட்டி விடுத்தல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

பொறுப்புடனே ரகுநாதன் சொல்ல வன்பு
    பூண்டதம்பி யப்படியே செய்தா னங்கே
குறிப்பாக நைமிசத்தில் யாக சாலை
    கொண்டங்கே ராமனெழுந் தருளி வேத
முறைப்படியே ஆதிகுரு வதிட்டர் தம்மை
    முன்னிட்டே சாந்திசெய்து மகத்துக் கேற்ற
கறுப்புநிறக் குதிரைநெற்றிப் பட்டங் கட்டிக்
    காட்சித்தா னயமேதந் திட்சித் தானே.

## இராமபிரான் வேள்வி இயற்றுதல்

**மோகன ராகம்]** **[ஏக தாளம்**

### பல்லவி

மாமேத யாகஞ் செய்தாரே - சொர்ண
மாரிகளாய்ப் பெய்தா ரே.

### அநுபல்லவி

பூமண்ட லாதிப ரான தசரத
    புண்ணிய ரூபமாய் நண்ணிய ராகவன் (மாமேத)

### சரணங்கள்

1. ஞாலம் புகழ்ந்திடும் கோமதி தீரத்தில்
    நைமிசா ரண்ணியத்தில் யாகசாலை தொட்டு
சீலமுனி வோர்கள் அந்தண கோடிகள்
    சேர்ந்திருக் கின்றவி டுதிகளும் விட்டு
மேலும் தேச தேசத்துள்ள சதுரங்க
    வேந்தர்கட் கெல்லாம் விலாசமுள்ள கட்டு
பால விருத்தர் முதலா யிருக்கும்
    படிசன கோடிக்கும் பாங்குள்ள தாயிட்டு
மாலைகளு முத்து மாலை கதலிப்பொன்
    னூலைகட்டி வர்ணச் சோலைகளுங் கட்டி
கோலமணிச் செம்பொன் சோலை அயமேத
    சாலை உயர்வேத சாலையி தென்னவே

சேலை விழிநிகர்ப் பெண்கள் நடமாட
நித்திமத் தளசுதி கொண்டிசை பாட
மாலெனும் ராமன்தன் பேரெங்கும் கொண்டாட
வானவ ரானவ ரங்கேவந்து கூட (மாமேக)

2. தண்டகா ரண்ணிய முனிவோர் முதலாஞ்
சகல ரிஷிகள் சடாமண்டல தாரி
தண்டுக மண்டல சரமாம்பர தாரி
சாரிசா ரிகளாயெங் கும்வேத மாரி
கொண்டு பொழிகின்ற வேதிய ரேவெகு
கோடிகள் தம்பதி கோடி ஒருசாரி
மண்டல மேல்வெகு தேசதே சங்களின்
மன்னர்கள் சேனைகள் வாங்கா கர்ணபூரி
எண்டிசை சூழவே தண்டிகை மீதேறி
கொண்டு வந்தார்பலர் கண்டும கிழ்வர்பலர்
செண்டலங் காரமாய் தண்டைகொ லுசுடனே
கண்டசர மசைய பெண்டுகள் பிள்ளைகள்
மண்டிவந் தார்நாலு சாதிச்சன கோடி
அண்டியி ருந்துமல் லிகைமலர் சூடி
உண்டு முடுப்பதும் வேணபடி யாடி
விண்டுவோ ராமனென் றெங்குஞ்சொ லக்கூடி
(மாமேக)

3. உத்தம மாகும யமேத யாகத்துக்
கோது முறைப்படி சாந்திக ளுமிக்க
வைத்தந்த யாகத்துக் கேத்த கறுப்பான
வர்ணப் புரவிதே சங்கள்சஞ் சரிக்க
பத்திய தாயதைப் பூசைசெய் தேவீரப்
பட்டயம் நெற்றியில் கட்டிவிட் டுந்தக்க
புத்திமா னுசுமி லக்குமன் பின்செலப்
பூசுரர் கள்சென் றங் கோமம் வளர்க்க
மத்தும் அகரங்கள் சுந்துத் தடாகங்கள்
மெத்த நந்தவனஞ் சத்திர சாலைபெ
ருத்தபட் டணங்க ளுத்ததே வாலயம்
வைத்தது தானும்வி சித்திர மாகவே

எத்தனை யென்றுக ணக்குக் கண்டுதர
யாரால்தர மென்பார் வாசாம கோசர
மத்தனையுஞ் செய்தி லக்குமன் பின்வர
அன்பத்நாறு தேசஞ் சுத்திக் கொண்டுவர (மாமேத)

4 மானில மீதுரிஷி துல்லிய மாகும்
வரமுறை தப்பா தயமேத யாகமே
தானொரு வருடந் தீட்சைமக விரதம்
தான்கொண்டு தேவ ருக்கவிர்ப் பாகமே
யானைத்தும் பிக்கையால் சொரிவது போல
நெய்க ளாகுதியங்கி தனியேய நேகமே
யானது வேதமுறை வாசி மேதத்தை
யற்புத ராமன்செய் தாரேனவ போகமே
வானவ ரான்வர் ஞான முனிவோர்கள்
கானஞ்செய் விஞ்சைய ராணவர் கொண்டாடி
யானக பேரியும் வானில் முழக்கியு
மேகன் மலர்மாரி தானே வருஷிக்க
மேனகை ரம்பைய ராடும்வி னோதமும்
வேடிக்கை தும்புரு நாரதர் கீதமும்
மானிட லோகத்தில் கண்டமெய் வேதமும்
வாழ்த்தும்ப டியாய்ப்ப னிரண்டு மாதமும் (மாமேத)

5. சட்டம தாய்பர தன்சத்து ருக்கனுந்
தங்கள் சேனையுடன் தானேயன் னபான
மிட்டமு ளவத்தி ராபர ணங்களு
மிராசரா சர்க்கெதிர் கொண்டு வெகுமானங்
கட்டளை யாகவே வானர வீரருங்
கர்த்தன்சுக் கிரீவனு வேதாசு வாதீன
மிட்டு நிருத ருடன்வீ டணரு
மிருடி களைவி சாரிக்கு மபிமானம்
எட்டுத் திசையிலுங் கட்டிக்கொண் டேயெவர்க்
கிட்ட மதுவென்று திட்டம தாய்நல்ல
பட்டு மணிச்செம்பொன் மட்டு மிதமின்றி
யொட்டிய தாய்க்கொடு திட்டங்க மெல்லாரும்
சிட்டன் ரகுராமன் யாசசா லைமுந்து
சேர்ந்தவர்க் கெல்லாவ பீஷ்டங்க ளுந்தந்து
வட்ட வுலகினில் கீர்த்திகள் மிகுந்து
மாராபி ராமன்வ ளர்ந்தேறவே வந்து. (மாமேத)

## வான்மீகர், யாகத்துக்கு வந்து மகிழ்ந்து செல்லல்; குசலவர்களை வேள்வி நடக்குமிடத்தில் இராமாயணம் பாடச் சொல்லல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

பாந்தமா மயமேத யாகந் தானிப்
படிநடந்து வரவங்கே முனிவால் மீகர்
தாந்தமது சீடருடன் வந்து ராம
சந்திரனியா கங்கண்டே மகிழ்ந்து தானே
காந்தமாய்க் கோமதிப்பாங் கதில்வ சித்தே
கந்தமூலங் கனியுண்டி ருந்து மோர்நாள்
சாந்தமுள குசலவராஞ் சீட ருக்கே
வசனஞ்சொல் வார்பாடவும் வயணஞ்சொல்
[வாரே.

### வான்மீகர் கூற்று

**கல்யாணி ராகம்]** **[ஆதி தாளம்**

#### பல்லவி

குழந்தைகளே சீதாசுதரே காயகரே
குசலவரே நான் சொல்வது கேளும் பாடகரே.

#### அநுபல்லவி

தழைந்திடுமே ராமா யணமாகுங் கீதம்
தந்திரி மீட்டுசு ரந்தன்சுதி கூட்டு-சி
றந்தநெறி காட்டும்பிர பந்தநிலே நாட்டுநல்ல (குழந்தை)

#### சரணங்கள்

1. மீசுர மாகிய ரிஷிகள்த போதனர்கள்
விளங்கி யிருக்கின்ற மடங்களும்
பூசுரர் சதுர்வேத வேதாங்கப் பருவதம்
போலிருக் கின்றவர்க ளிடங்களும்
ராச வீதிகளிலும் ராசசு முகங்களும்
நான்குசாதி வீதித் தடங்களும்
வாசந் தருபுகழ் துரை ராம
னரமனையும் யாகசாலை யிடங்களும்
மருங்கெங்கினு நாடுங்கள் நெருங்கும்படி கூடுங்க
ளிருங்கொண்டுரை யாடுங்கள் ளருஞ்சங்கதி
[பாடுங்கள் (குழந்தை)

2. தொடுத்தெல்லாந் தெரிந்தாலுஞ்
சபைக்கோழை யிவனென்று
சொல்வந்திட் டாலதுவே யவமானம்
படித்ததுக் கடையாளம் சபையினில் நாலுபேர்-ச
பாசென மெச்சுவது வெகுமானம்
எடுத்தது மடங்காமல் கேட்கின்ற பேர்களுக்கு
ரசிக்கும் ராமாயண முங்கள்கானம்
அடுத்துநான் சொன்னபடி ரிஷிகள்முன்னே விசேஷ
மாகவே பாடுஞ்சுரநி தானம்
அன்புற்றிசை கண்டுகள பம்பக்கமே கொண்டுதெளிந்
தென்பக்கலே பண்டுதெரிந் தின்புற்றவர் விண்டு
[சொல்லு (குழந்தை)

3. இன்னுஞ்சொல்லுறேன்கேளும் பொன்னுசை கொண்
ரிஷிகட்கு பணங்காசு மேராது [டிடாத
சொன்னேன் கந்தமூலங்கள் கனிகள் கிடக்குதிதோ
சுகமாய்ப் புசிக்கக்களை வாராது
கன்னல்சுவை யெனவே தினமிருபது சர்க்கங்
கானம்பண்ணி னுலன்றித் தீராது
மன்னன் ராமச்சந்திரன் செவியத னிலேகேட்க
வரும்படிசெய் வீரேசொல் சேராது
வணக்கங்கொண்டு கூறுமதே யிணக்கம்புகழ் மீறும்நல்ல
குணக்குன்றென வேறுங்கல்வி மணக்கும்படி
[தேறும்நல்ல (குழந்தை)

4. மகிபதி ராமசந்திர னீங்களார் பிள்ளையென்றால்
வால்மீகி சீடரென்பார் பாலரே
சகல பிராணிகட்கும் தேசபதி யாம்ராசா
நகப்பனென் பார்கள்நீதி நூலரே
விகிதமா யாதிமுதல் கொண்டு ராமாயணத்தை
விளங்கப் பாடுங்கள்குண சீலரே
தகையாய் வீணையதன் தந்திரி மீட்டிராகந்
தழைக்கும்படி செய்யநு கூலரே
தானங்கள் பலுக்குவீணை கானங்கள் சொலுக்குந்தனி
தான்ங்கள் குலுக்குஞ்சுர ஞானங்கள் பலிக்குஞ்ஜய.
(குழந்தை)

## குசலவர்கள் வேள்வி நடக்குமிடத்தில் இராமாயண கீதம் இசைத்தல்

**எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்**

*கீர்த்திதிரு வால்மீக ரிவகை சொல்லக்*
*கேட்டிரவு நீங்கிரவி யுதயந்தானே*
*மூர்த்திகர மாகக்கொண் டெழுந்தே சந்தி*
*முறைசெய்து குசலவர்தாம் யாக சாலை*
*பார்த்திபர்கள் சதிர்முனிவோ ரிடங்கள் வேத*
*பாரகர்க ளிடமுமிரா மாய ணத்தைக்*
*கீர்த்தனஞ்செய் தார்மதுர மயம தான*
*கீதந்தா னிதுவுமொரு வேதந் தானே.*

### இதுவுமது

**அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்**

*இந்திரன்றன் சபைதனி லகூவணிதேவ பாடகர்க*
*ளிருவர் போலே*
*தந்திரியை மீட்டியிசை தாளவரி சையிற்சங்கீ*
*தந்தான் ராம*
*சந்திரன்கா திற்கேட்க ராமாய ணஞ்சொலுங்-கு*
*சலவர்கள் மேலு*
*கந்துதனை யரங்கேற்று முறைகொண்டே ரகுராமன்*
*கவிகொண் டாரே.*

## குசலவர் கானத்தை இராமபிரான் கேட்டருளல்

**பரசு ராகம்]** **[சாபு தாளம்**

**பல்லவி**

*ராமாயண காவியங் குசலவர் கானம்பண்ண*
*ராம சந்திர னேற்றருளி னாரே.*

**அநுபல்லவி**

*காமாது ரூபமாய நூலை காமேவரா சூழ்கைமியச் சோலை*
*மாமேத யாகசாலை மண்டபத்தில் வால்மீகர் சொல்*
*[மாலை (ராமாயண)*

சரணங்கள்

1. நிராமய முனிவோர் மண்டல பதிகளுஞ் சாத்திர
நிலையறிந் தவர்கள் வைதீகர்
புராணிகர் வையாகரணிகள் பெரியவ ரான
பூசுரா சுரலட்ச ணிகர்
தராதர பதாட்சர சமரசங்க ளறிந்தவர்
சந்து சிறப்பறியும் விவேகர்
பராமுகங்க ளின்றி மாத்திரை கலைசோதிட
பாரங்கதர் ஞான யோகர்
பற்பல கிரியைவகை கட்கே தேடும்
கற்பவிதிக ளறிந்தபேர் நாடும்
அற்புத காவியா லங்கார நீடும்
சற்பன பாஷைக ளறிந்தோர்கொண் டாடும்
(ராமாயண

2. இங்கிதங் களறிந்த பேருப சாரங்க
ளறிந்தோ ரேதுக்க ளறிந்தபேர்கள் நாட
சங்கதி யறிந்துமேசங் கீதமார்க்கந் தெரிந்தபேர்
சரசகவி சொல்லவல்லோர் கூட
எங்குஞ் சொல்லுஞ்சிற்ப நூலேறி வோர்களெல்லாம்
எவரையுஞ் சேர்ந்தழைத்து மேசபை நீட
மங்களச் சொல்லாக யெங்கும்பர வவும்காயகரை
முன்னேவர வழைத்தார் வாணி விளையாட
மண்டலபதி சன்னிதி முன்னே வைத்துக்
கொண்டன ரவரிருவ ரொருமித்துப்
பண்டித பாமர சாதாரண மொத்துக்
கண்டிடு மதுரமிது வென்றே யுற்று (ராமாயண)

3. ஆதிராமாயண காவிய மாதிபூர்வ மாகக்கொண்
டங்கிருப தாகிய சருக்கங்
கீதமார்க்கந் தவறுமற் கீர்த்தனம் பண்ணினுர்கண்டு
கேட்டபேர்க் கெல்லாமன துருக்கம்
மேதினிபுக ழிராமசந்திரன் யாகசாலை தன்னில்கூடி
வீற்றிருந்த சனகோடி நெருக்க
மீதுராமர்க்குங் காயகர்க்கும் வேற்றுமையில்லை யாகிலு
வேடிக்கை மரவுரி சடையொன்றே பெருக்க [மொரு

விம்பத்தில் நின்றிடு விம்பமே வந்த
தென்பதையுஞ் சொல்ல சனங்களெ மூந்த
அன்புற்று சரிந்திடு மங்கனே யிந்த
பண்புற் றிசைந்து யர்ந்த பிரபந்தம். (ராமாயண)

## இராமாயண கானஞ்செய்த குசலவர்க்குப் பதினெண்ணுயிரம் பொன், பரிசளிக்குமாறு இராமன் சத்ருக்னனிடம் கூறல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

அதிவீர ராமனுடை யாக சாலை
அயமேத மண்டபத்தில் ராமன் முன்னே
மதியூகி குசலவர்க ளியாழி லேற்றி
வால்மீக ராமாய ணத்தைத் தானே
விதிபூர்வ நாரதவிருத் தாந்தங் கொண்டு
விளங்கியிரு பதுசருக்கஞ் சொன்ன பேர்க்கு
பதினெண்ணு யிரங்கொடுபொன் னெனவே ராமன்
பரிந்திட்டான் சத்துருக்கன் சொரிந்திட் டானே.

## பரிசுவாங்கக் குசலவர் மறுத்தல்; இராமபிரான் வியப்புற்றுக் குசலவர்களை இராமாயணக் கிரந்த அளவுபற்றி வினவுதல்

### இதுவுமது

கனகாபி டேகமது ராமன் செய்யக்
காயகராங் குசலவர்கள் சொல்வா ரங்கே
வனமதிற்சஞ் சரிக்கின்றோங் கந்த மூல
வகைபுசிக்கு மெங்களுக்குப் பசும்பொன் கொண்டு
எனசெய்ய வேணுமதை வாங்கோ மென்றா
ரிதுகண்டே ஆச்சரியங் கொண்டே ராமன்
வினவுவார் எவளவிது கிரந்த மாரால்
விளைவென்பா ரதுக்கவரிவ் வளவென் பாரே.

## குசலவர், இராமாயணக் கிரந்த அளவு, இயற்றியவர் பற்றி இராமனிடம் கூறல்

**கல்யாணி ராகம்]** **[ஆதி தாளம்**

### பல்லவி

*யோகிசெய் பிரபந்தமே - ராமாயணம் - வால்*
*மீகி செய்த கிரந்தமே.*

### அநுபல்லவி

*தேகியென் போர்கலி தீர்க்குந் தியாகியான - ராசேந்திரரே*
*யாகிநின் றீர் உமது மாமேத யாகசாலை தனிலேகேட்பது*
(யோகி)

### சரணங்கள்

1. *இருபத்து நாலாயிரஞ் சுலோகம் - உபகதை நூறு*
*வருமுத் தஞ்ஞூறு சருக்கமும் - கன ராகம்*
*புருஷோத்தம ருமது சரித - மிருவ*
*ரெங்களுக் குபதேசஞ் செய்த*
*குருவு மவரே மாதவஞ் செய்த*
*பெருமை யுள்ளவர் வரமிகுங் கவி* (யோகி)

2. *பத்தியுடனே கேட்கப் புண்ணியஞ் சேரும் - சகலமான*
*குத்தமெல்லாம் வெய்யில்முன் பனிபோலத் தீரும்*
*நித்தியமிருபது சருக்கமா யுற்றுரை செய்வோங் -*
[கேட்கவே மனம்
*வைத்திருந்தால் சொல்லலா மய்யா*
*சத்திர பதியே மகாரதர் கேளும்.* (யோகி)

3. *கந்த மூலபலம் புசிப்பிங்கே பூணும - எங்கட்கே கனகந்*
*தந்தாலது தானென்ன செய்ய வேணும்*
*இந்த வுலகினுயிருக் கெல்லாந் தந்தையாகி*
*வந்து புகழுயர்ந்த ராசகாம கோடி*
*சுந்தர ரேமகா ரசிகரே.* (யோகி)

### பல நாட்கள் இராமாயண கானங் கேட்ட இராமன், பாடுமவர் சீதாப்பிராட்டியார் பெற்ற புதல்வர் என அறிதல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

முதநாளிப் படிச்சொல்லிக் கீர்த்த னஞ்செய்
முறைகண்டே ராமசந்திர மூர்த்தி யங்கே
நிதமிருப துசருக்கங் கானம் பண்ண
நிலேசெய்தே பலநாள்கேட் கின்ற போது
மதுமயரா மாயணத்தைத் தானே கேட்டு
மைந்தரிவர் சீதைபெற்ற புதல்வ ரென்று
மதையறிந்து சபைநடுவே சொல்வார் தீட்சை
யணிகின்ருர் மன்னரெல்லாம் பணிகின் ருரே.

### இராமபிரான் வான்மீகரிடம் தூதர்களை அனுப்புதல்

**மோகன ராகம்]** **[சாபு தாளம்**

பல்லவி

வான்மீகி பகவான் மனமறிந்து வாருங்கள் - தூதர்களே.

அநுபல்லவி

வான்மீதுள் ளோர்சொல்லுந் தேவரீ ரடியேன்
மீது கிருபைசெய்ய வேணு மென்று (வான்மீகி)

சரணங்கள்

1. அந்த சனகன் பெண்தான் பரிசுத்த - மி
குந்தே யழுக்கில்லா தவளே மெய்யானல்
இந்த யாகசாலே தேவ சபைமுன்னே
வந்து சபதமும் பண்ணுவளா வென்று (வான்மீகி)

2. மேதினி மீதில் சகலருங் காணவே
சோதனை தந்து தெளிந்திட வேணுமச்
சீதைம னதுசித் தாந்தம துதனை
யேதென்ற றிந்திட வேதசி ரோமணி (வான்மீகி)

3. வேளை செயிக்குமு னீசுரர் சூழ்சபை
வாளைத்த ரிக்குங்கை மன்னர்ச பையிங்கே
நாளை யிரவிஉ தயமது தானே
வேளையன் றந்த மின்னுளை வரச்சொல்லி. (வான்மீகி)

## தான் குற்றமற்றவள் என, சீதாப்பிராட்டி யாசகசாலை முன்பு வந்து சபதம் செய்வாளென வான்மீகர் கூறி விடுத்தல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

சானகிவந் தேயாக சாலை முன்னே
சபதமது செய்யவென்றே வான்மீ கர்க்கே
தானயமே தமண்டபத்தி லிருந்து ராம
சந்திரனே சொலியனுப்பி வைத்தா ரங்கே
போனதூ தருஞ்சொல்ல முனிவர் சொல்வார்
பூவுலகில் மங்கையர்க்குப் பதியே தெய்வம்
ஆனதனல் அப்படிச்செய்வா ளென்றே சொல்லி
யனுப்பினர் புற்றிடத்தில் சனிப்பி னரே.

## சீதாப்பிராட்டி நாளை சபதஞ் செய்வாளென இராமபிரான் அனைவருக்கும் அறிவித்தல்

### இதுவுமது

மூதண்ட கூடமெங்குஞ் சொல்வான் மீகி
முனிசொன்ன தைவந்து தூதர் சொல்ல
வேதண்ட நீதியறிந் துயர்ந்த ராமன்
வேதமுனி வோருடனந் தணரி ராசர்
காதண்ட சீதாசப தாந்தா நாளை
காணவரு வீரெனவே யாருங் கேட்டுக்
கோதண்ட பதிசொன்ன படியே யன்பு
கூர்ந்திட்டார் சனங்கள்வந்து சேர்ந்திட் டாரே.

## சீதாப்பிராட்டியின் சபதங்காண வேள்விச்சாலையில் அனைவரும் வந்து கூடல்

மத்தியமாவதி ராகம்] [ஆதி தாளம்

பல்லவி

கூடிவந் தனரே - சீதா சபதத்தை
நாடிவந் தனரே.

அநுபல்லவி

கூடியே அயமேத நீடிய யாகசாலை
தேடிச் சீதையைக் காணக்
கோடிகோடி சனங்கள் (கூடி)

சரணங்கள்

1. வதிட்டர் வாமதேவ சாபாலி காசிபர்விசு
வாமித்திர துருவாசன் றாயனுங்
கதிக்குந் தவமகிமை யகத்தியன் சக்தி
பார்க்க னுடன்வரு மார்க்கண் டேயனும்
விதிக்கும் நிகராகியம வுத்கல்லியர் கர்க்கருடன்
விளங்குஞ் சவனமுனி ராயனும்
துதிக்கும் பெருமையுள்ள சதானந்த ருடன்பரத்
துவாச வரணிய வாசிக ளெல்லாம் (கூடி)

2. நரருக்குள்ளே புலிக ளாகுவார் தேசதேச
ராசாக்கள் சதுரங்க சூரரும்
வரவேயெங் கெங்குமுள்ள சத்திரியர் களுமின்னும்
வைசியர் சதுர்த்தர்பல ஊரரும்
தரணி சுரர்களென்ற வேதியரு மிரவி
சமானமா யுமார்க்க மாகவே (கூடி)

3. சகல சனங்களும் வந்தய மேதயாக
சாலையில் வந்துகட்டுஞ் சதிர்முனமே
மகராசன் ராமசந்திரன் தேவிசீதா லட்சுமி
வரக்கிடைத்த தென்பாருஞ் சுபதினமே
மகிமைசேர் தவமுனி வால்மீகர் பின்னுடனே
வரும்வழி பார்த்துநின்று வெகுசனமே
அகமகிழ்ந் தோடிவரப் புருடர் பெண்டுகளு
மனேகனே சனேமனே ராக. (கூடி)

## சீதாப்பிராட்டி வேள்விச்சாலைக்கு வருதல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

நாராய ணனைநிகராய ராம சந்திர
ராசனய மேதமண்ட பத்தில் தானே
பாராளு மன்னரொடு முனிவோர் வேத
பாரகர்தாம் மற்றுமுள்ளோர் வந்து கூட
நேராக வான்மீகர் சீதை யைப்பின்
னேயழைத்துக் கொண்டுவந்தார் பிரமர் போலே
பேரானந் தந்தானே சனங்க ளெல்லாம்
பெருகுவார் சீதையம்மன் வருகு வாளே,

## வேள்விச்சாலைக்கு சீதாப்பிராட்டி வருகின்ற சிறப்பு

**கல்யாணி ராகம்]** **[ஏக தாளம்**

பல்லவி

*வந்தாளே சீதை - தரிசனந்*
*தந்தாளே சீதை.*

அநுபல்லவி

*எந்தாய் வரும்வழி யெங்கே யென்றே தேடிச்*
*சந்தாபங் கொண்டசனங் கட்கெதிர்நாடி*

சரணங்கள்

1. *தேடிய ராமசபம் நெஞ்சி லுன்ன*
*செங்கை யஞ்சலி செய்துகொண் டின்ன*
*வாடியும் வாடா முகத்தொளி மின்ன*
*வால்மீகர் பின்னே மகாலட்சுமி யென்ன*

2. *அரிராமன் பாதத்தி லன்பாம் விசுவாசி*
*அவனென் பர்த்தாதெய்வ மாமென் றிடும்நேசி*
*பெரியரா மாயண மாம்பிரசங் கத்தைவாசி*
*பிள்ளையி ருவரைப் பெற்றமக ராசி* (வந்தாளே)

*ஆங்கு முனிவோர் அரசர் சபைக்கேற்று*
*அற்புத ராமனப வாதத்தைத் தீர்த்து*
*பூங்குவளைக் கண்புனல் முத்துத்தார் கோர்த்து*
*புண்ணிய யாகஞ்செய் பூமிதனைப் பார்த்து.* (வந்தாளே)

## வான்மீகர், சீதாப்பிராட்டியை இராமபிரான் முன்பு அழைத்து வந்து சில கூறல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

*காவியஞ்செய் வால்மீகர் பாத நீழல்*
*கண்டிருந்த காவியங்கண் சீதை யாரும்*
*காவினைத் திரந்தரித்து வரவே யங்கே*
*கண்டவர்க ளதிசயித்துக் கண்ணே ராமன்*
*தேவியே வாவாவென் றெவரும் வாழ்த்தச்*
*செயமுனிவோ ரழைத்துவந்து ராக வேந்திரா*
*பூவி லுறை மாதிவளே அருந்த திக்கும்*
*பொருளென்பார் கிருபைசெய் தருளென் பாரே.*

வான்மீகர் கூற்று

பைரவி ராகம்] •[ஆதி தாளம்

பல்லவி

இந்தச் சீதை ரகுநாதா - வந்தாள்
எங்களுக் கெல்லாமிவள் மாதா.

அநுபல்லவி

அந்தநாளி லெந்தனுடை வாச்சிரம மதன்கிட்டே
அபவாதத்தினாலே பயந்துகொண்டு வந்துவிட்ட (இந்த)

சரணங்கள்

1. கற்பு மிகுந்தஅருந் ததியே - சனகன் பெற்ற
கண்மணி தானே தரும நிதியே
கற்பனையிப் படிக்கொத்த அற்புதமே யிவளுற்ற
நற்புதல்வ ரிவர்கற்ற விற்பனரி வரைப்பெற்ற (இந்த)

2. உத்தம ருமதுபிள்ளை யிவரே - சீதைபெற்ற
ரோங்குபல சாலிகுச லவரே
பத்து....ருணற்குத்தானே பத்தெனுங்கு மாரனானே
சித்தமாய்ப்பொய் யையெண்ணேனே சத்தியமாய்ச்
[சொல்லுறேனே (இந்த)

3. பத்தினியென் றேசபையில் சொல்லியே - கூட்டிவந்தேன்
பாவமில் லாதவளே மைதிலியே
மெத்தவுஞ்செய் தேன்தவத்தை யுத்தனைய தன்பலத்தை
உத்தனுப விப்பேனித்தை உத்தமிதான் பரிசுத்தை
(இந்த)

4. மேதினியி லபவாத நீங்குசீ - தையுமக்கு
விசுவாசம் கொடுக்கின்றாள் - வாங்கும்
நீதிநூலின் படிநடந்தாள் மாதுவிரத மிருந்தாள்
தீதில்லாக் குணமிகுந்தாள் மேதினிமே
[லிங்கும்வந்தாள். (இந்த)

## சபைமுன்பு சீதாப்பிராட்டி சபதஞ்செய்ய வேண்டுமென இராமன் கூறுதல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

முனிவர்சொன் னதுங்கேட்டு ராம சந்திர
மூர்த்தியந்த சபைநடுவே சொல்வா ரிந்த
வனிதைமுன்னாள் தேவர்சன்னி தியில்விச் வாசம்
வரும்படிசெய் தேகொடுத்தாள் மாசி லாதாள்
இனியிங்கே உலகாப வாதந் தீர
யெல்லவர்க்கும் விசுவாசம் வரவென் முன்னே
புனிதமாய்ச் சபதமது செய்ய வென்றார்
பொருந்துவாள் சீதைமனந் திருந்து வாளே.

## சீதாப்பிராட்டி சபதஞ்செய்யத் தொடங்கல்

இதுவுமது

நல்லவய மேதயாக மண்ட பத்தில்
நடுச்சபைமேல் தாசரதி மனம றிந்தே
எல்லையிலா வானவர்க ளிருடி மார்க
ளியக்கர்முதல் மூன்றுலகத் தவர்க ளெல்லாம்
வல்லவராம் பிரமனைமுன் னிட்டு வானில்
வந்தடைந்தா ரிராமன்முன்சொல் படியே சொன்னார்
எல்லவருங் கொண்டாட ராம னுக்கே
இதஞ்செய்வாள் சீதையுஞ்ச பதஞ்செய் வாளே.

## சீதாப்பிராட்டி பூமிதேவியை வேண்டல்

அசாவேரி ராகம்] [சாபு தாளம்

பல்லவி

பூமி தேவியே யிடந்தருவாய் - இந்தப்
புண்ணியர் சபையின் முன்னே வருவாய்.

அநுபல்லவி

பூமியில் நான்பிறந்த புதுமையை யென்னசொல்வேன்
சாமிராம னேயென்பர்த் தாவென்பது மெய்யானல் (பூமி)

சரணங்கள்

1. மன்னிய தேவர்சபை கண்டு - மாதவர் முன்னே
இன்னுஞ்சொல் வேணுறுதி கொண்டு
மன்னனி ராமனல்லா லன்னிய புருஷனை
யென்னுடை மனதினி லுன்னின தில்லையாகில் (பூமி)

2. மந்திர யாகசாலை முன்னே - யெல்லோருங்காண
வந்தருள் மாதவியெ னன்னே
இந்த ராகவனல்லால் பிந்தி யொருவர்களை
யெந்தன்மன வாக்கில்பொ ருந்திலனே மெய்யானால்
(பூமி)

3. மதில்காவ லென்னபயந் தோணும் - மங்கையருக்கு
மனக்காவ லென்பதல்லோ வேணும்
அதுவே வழக்கமென்றும் பொதுவேயிந் தச்சபையி
னெதிரேசொல் லுறேனெந்தன் பதிராமனே
[மெய்யானால். (பூமி)

பூமாதேவி, ஒரு சிங்காதனமளிக்க அதன்மீது சீதாதேவி யமருதல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

சீதையந்தப் படிசபதஞ் செய்ய வங்கே
திவ்வியமா மற்புதம தொன்றுண் டாச்சு
பூதலத்தி லிருந்துநா கர்சு மந்து
பொன்மயமாஞ் சிங்காச னந்தான் கொண்டே
ஆதரவாய் பூமிதே வியும்வந் தங்கே
அங்கைகொண்டு தூக்கிஎந்த னம்மா வென்றே
மாதயவாய் வைத்திடவே யிருந்தாள் கீர்த்தி
வாசிதான் சீதைமக ராசி தானே.

சங்கராபரண ராகம்] [ஆதி தாளம்

இதுவுமது

பல்லவி

சிங்காசனத்தி லிருந்தாளே
சீதாதே வியையவள் மாதாகை கொடுத்து வைத்த.

அநுபல்லவி

சிங்காதன மீதுதான் சிங்கார னீயிருக்க
மங்காத கற்புடைய நங்காய்நல் வரத்தக்க
நன்மா மகளேகோதை - அம்மாவா வெனசீதை
(சிங்காதனத்)

சரணங்கள்

1. இந்திராதி தேவரெல்லாம் பாரி சாதமெனுஞ் - சு
கந்தமீறச் சொரிந்தார் பூமாரி - இப்படிக் கொத்த
இந்தச்சீதை புண்ணியமி குந்தபதி விரதைய
ருந்ததிக்குந் தாதியாகி வந்தவ ளாகுமென்றே
எல்லவருந் துதிசொல்லி நல்லவளென் றிடும்வல்லி
(சிங்காசனத்)

2. மீளவுஞ் சுரர்முனி வோர்க ளின்னமுஞ் சக்ர -
வாளகிரி மூன்றுலகத் தோர்கள் - சராசரங்கள்
நீளத்தவஞ் செய்துபூமி யாளும்ராச ருடனே
பாதளத்தில் வாசஞ்செய்யும் நாகர்களுமிக வேகொண்
[டாடி
ஆச்சரிய மிதுவேறக வாச்சுதென் றெவரும் பார்க்க
(சிங்காசனத்)

3. பூமகளைக் கொண்டாடுவார் பலபேர்-சீதையுடனே ராமனைப்
பார்த்து நிற்பார் பலபேர் - தியானங்கொண் டிந்த
மாமகிமை யென்னசொல்வோ நாமென்பார் நாராயணனை
ராமனென்பார் சீதையுஞ்செந் தாமரைப்பெண்
[ணென்றுமே
சகலசனங் களுஞ்சேவி மகிமைசிறந் திடுந்தேவி.
(சிங்காசனத்)

## சீதாப்பிராட்டியின் அபவாதந் தீர்தல்; வேள்வி முற்றுப்பெறல்; அயோத்தியில் அனைவரும் நலமுற வாழ்தல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

பாரியாஞ் சீதைசிங்கா தனத்தி ருந்த
பாங்குகண்டே வுலகாப வாதந் தீர்ந்தே
ஆரியரா மாயண வாலக் கிரந்தம்
யாவும்கேட் டருளிஅய மேத யாக

பூரணா குதிகொடுத்தும் சகல பேர்க்கும்
பூசிதைசெய் தனுப்பியா னந்த ராமன்
சூரராந் துணைவரொடு சுதர்க ளெல்லாம்
சூழ்கின்ற ரயோத்தியினில் வாழ்கின் றரே.

(ஸ்ரீராமானுஜஸ்வாமி சகாயம்)

## சீதாப்பிராட்டி பூமிதேவியளித்த சிங்காசனத்தி லமர்ந்த வண்ணம் ரசாதல உலகஞ் சேர்தல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

முத்தரெல்லாங் கொண்டாடுந் தவவான் மீகி
முனிசொலெழு காண்டமிரா மாய ணத்தில்
உத்தரகாண் டமிராமன் கேட்கும் போது
வொருரகசி யஞ்சொல்வா ரதுவே தென்றல்
பத்தினியாஞ் சீதைதன்னை முன்பு பெற்ற
பார்மகள்சிங் காசனமே லுவந்து தூக்கி
வைத்தவுடன் ரசாதலத்தில் சேர்ந்தா ளென்ற
வண்மைதா னென்பதுவு முண்மை தானே.

## இராமபிரான் பூமிதேவியின் மீது சினம் கொள்ளல்; பிரமன் சமாதானஞ் செய்தல்; வேள்வி முடிந்து அனைவருடனும் செல்லுதல்

### இதுவுமது

மாமியெனும் பூமிமேற் கோபந் தானே
வரக்கண்டு பிரமர்சமா தானஞ் செய்தார்
சாமியுந்தன் பூர்வநினைந் தகம கிழ்ந்து
தம்பிகளுங் குசலவராந் தனயர் கூட
நேமகமா மயமேத யாகந் தன்னை
நிறைவேற்றி மிகவுந்தட் சணைக ளீந்து
மாமுனிவ ரரசர்முத லானோர் செல்லும்
வழிகண்டார் வால்மீகர் மொழிகண் டாரே.

## பொன்னால் சீதையுருவமைத்துக்கொண்டு இராமன் இராச்சியம் ஆளுதல்

சௌராஷ்ட்ர ராகம்] [.......தாளம்

பல்லவி

கீர்த்திமிகும யோத்திநகர் வருவார் - ஸ்ரீராம சந்திரன்
கீர்த்திமிகும யோத்திநகர் வருவார்.

அநுபல்லவி

கீர்த்தி மிகும யோத்திந கர்வளஞ்
சேர்த்தி யெங்குமுள்ள பார்த்திவர் கள்பணிந்
தேத்தி வருகவே பிரார்த்திப்ப வர்தங்க
ளார்த்தியது வெல்லாந் தீர்த்தி சையவே (கீர்த்தி)

சரணங்கள்

1. சீதையன் றியொரு மாதைக்க லியாணஞ்
செய்யயிலை யெங்க ளய்யன் வேதஞ்சொன்ன
பாதமே சங்கள்செய் போதுபொன் னாற்சீதை
பண்ணி வைத்துக்கொண்ட புண்ணிய னென்றே (கீர்த்தி)

2. பெற்ற தாயாரான உத்தமி கோசலை
பின்னை யங்குமுள்ள அன்னை மார்களெல்லாம்
புத்திர ருடன்ப வுத்திரர் மிகுந்து
பூர ணையுவிருந் தாரென்பது கொண்டு (கீர்த்தி)

3. தவத்தினா லேதாய்மார் சுவர்க்க மதிலேறி
தயரதனைச் சேர்ந்து வுயர யிருந்தாரே
அவர்கிரியைக் கெல்லாஞ் சுவர்னம் பலகோடி
யானை பரிவெகு தானங்களுஞ் செய்தே (கீர்த்தி)

4. தேசமதிற் கேக யேசனு தாசித்து
சீர்மை கந்திருவ ராமுக் கோடிகளை
யேசங்கா ரஞ்செய்து ராசரீகஞ் செய்வார்
இரத ரிரண்டுபேர் பரதன்பிள்ளை யென்றே (கீர்த்தி)

5. தலையதான தட்ச சிலையெனும் பட்டணந்
தட்ச னனவெகு பட்சபுட் கலனை
நிலைபுட்க லாவர்த்த தலமதில் வைத்தசொல்
நிரதனெ னுந்தம்பி பரதனை மகிழ்ந்து (கீர்த்தி)

6. அந்தலட் சுமணர் தந்த குமாரர்க்குள்
அங்கதனுக் கேத்த தங்கதீ யாபுரம்
சந்திர கேதுவுக்கே சந்திர காந்ததேசந்
தகைமை யாகக்கொண்டு மகுடம துசூடி (கீர்த்தி)

7. தேவர் புகழுங்கு சாவதியை யெந்தத்
திசையுஞ்சொ லும்வீரன் குசனுக்கே தந்துசி
ராவதி யிலவன் மேவச்செய் திவரே
நந்தன ராம்வெகு நந்தன ரெனவே (கீர்த்தி)

8. வாகுள்ள செயசு வாகுதன் னையந்த
மதுரைதன் னில்வைத்துங் கதுசத் துருகாதி
யாகும வனுக்குண் டாகுவை திசத்தை
யாளென்று சொல்லியன் னுளில ருளுவர். (கீர்த்தி)

## பதினாயிரம் ஆண்டுகள் இராகவன் ஆட்சி செய்தல், இயமன் ஒரு அந்தணன்போல் இராகவனிடம் இரகசியம் பேசுதல், இலக்குவன் இராகவனிருக்கும் அறையின் வாசலில் காவல் செய்தல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

ஆண்டுபதி னாயிரந்தான் சுவர்ணச் சீதை
யதுகொண்டே யநேகயா கங்கள் தீட்சை
பூண்டுசெய்து பதினோரா யிரம தாண்டு
பூரணயு வமிருப்பார் பூமி தன்னை
ஆண்டுவரு நாளதிலே தரும னங்கோர்
அந்தணன்போல் வந்துரக சியங்கள் பேச
ஈண்டுதான் வாசல்கா ரிலக்கு மாகீ
என்பதாம் வியாசமது முன்ப தாமே.

துருவாச முனிவரை இலக்குவன் இராகவன் எழுந்தருளியிருக்கும் இடத்துக்கு அனுப்புதல்

இதுவுமது

*வாசற்காத் திடும்போது துருவா சன்றன்*
*வரவங்கே தடைசொன்னால் குலங்கள் தன்னை*
*மாசுறவே சபிப்பனென மொழியக் கேட்டு*
*வந்திரகு பதிமுன்னே இளையோன் சொல்லப்*
*பேசியங்கி ருந்தநம னில்லா தேகப்*
*பெரியவரத் திரிபுத்தி ரர்க்கே பூசை*
*போசனஞ்செய் துவைத்தே யனுப்பி ராம*
*பூபன்தா னிரவிகுல் தீபன் தானே.*

இலக்குவன், தம் மொழிமீறி நடந்தான் என்று சினந்து, இராகவன் வேறு வழியாகச் சரயூநதிக்குச் செல்லல், வான் செல்ல விமான மேறுதல், தேவர் பூமாரி பொழிதல்; பழையவண்ணமே இறைவன் சேஷசயனனுக இருப்பார் எனல்

இதுவுமது

*மொழிமீறி நடந்தாயே யிலக்கு மாவென்*
*முன்னில்லா தேபோவென் றதுவே தானேர்*
*வழியாகச் சரயுநதி தனில்முன் னுக*
*வானேறு விமானமே லேறப் பூவே*
*பொழியமர ருடனேயிந் திரனும் வந்து*
*பூசிப்பா ரவரும்பூ ருவமே போலச்*
*செழிசேஷா வதாரங்கொண் டிருப்பா ரென்ற*
*தீர்க்கந்தான் வால்மீகி மார்க்கந் தானே.*

பதினையிர வருஷம் மானிட வடிவில் இராமபிரான் இருந்தனர் எனல்

இதுவுமது

*மானவரு டம்பதினை ராயி ரந்தான்*
*வருடமே சென் றதினி வைஷ்ண வந்தா*
*னுனவுரு வம்பெறவே யெண்ணி ராம*
*னயோத்தியிலே வுளசனங்க ளாரு மின்னும்*

வானரராட் சதருடனே சுக்கி ரீவன்
மகிமைசேர் விபீடணரும் வரவ ழைத்துத்
தானென்னும் படிசெய்வா னயனைப் பெற்ற
தந்தைதா னவர்க்குமொரு விந்தை தானே.

## விபீஷணனையும் அநுமானையும் சிரஞ்சீவியாக இருக்க அருளல்; சாம்பவன் முதலானோரைக் கலியுக முடிவுவரை வாழுமாறு கூறியருளுதல்; உடன் வருபவர்க்குச் சாந்தானி லோகம் அளித்தல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

விடணனை யனுமானை யிரண்டு பேரை
மேதினியிற் சிரஞ்சீவி யாக வைத்து
நீடுவய துளசாம்பன் மைந்த னின்னும்
நிலைபெறுது விதன்முதலோ ரைவர் தங்கள்
கூடுமுயி ரும்பொருந்திக் கலிவ ரைக்கும்
கொண்டிருப்பீ ரெனவாழ்த்தி மற்று முள்ள
கூடவரு வார்க்குச்சாந் தானி லோகங்
கொடுக்கின்று ரவதார மெடுக்கின் றாரே.

### சந்த விருத்தம்

இந்தவகை யந்தமுனி கிரந்தவுரை கொண்டவைபி
சைந்தவர்ந டந்துதுணையாய்
வந்தவரொ டுந்தனையர் பந்துகணி றைந்துபுகழ்
வந்தரகு நந்தனருமாய்
சந்ததம கிழ்ந்தினிதி ருந்தனரு வந்துதிறை
சந்திரனெ னுந்தசரதர்
தந்தருளு நந்தனர்வ ரந்தருவர் சந்ததித
ழைந்திடுமி குந்தநலமே.

ஸ்ரீராமானுஜாய நம:

ஹரி: ஓம்

**உத்தர ராமாயண நாடகம் முற்றும்.**

---

ஶ்ரீ:

# உத்தர ராமாயண நாடகம்

## (இரண்டாம் பாகம்)

---

### சீதாப்பிராட்டி ரசாதலஞ் சென்றபிறகு இராமபிரான் பூமாதேவிமீது கோபித்தல்

#### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

*உத்தமியாஞ் சீதைரசா தலத்திற் செல்லும்*
*உண்மைகண்டு மானிடர்கள் துதிக்க வேதான்*
*சத்திரபதி ராமனுடைக் கையிற் றானே*
*தடிக்கொம்பு பிடித்துமனந் தளர்ந்து வாடி*
*மெத்தவே தலைகுனிந்து துக்கத் தாலே*
*மிகக்கண்ணீர் பெருகியது ஆறு யோடச்*
*சித்தமதில் சோகமதாற் கோப முற்றுச்*
*சீறுவா னிராகவனுங் கூறு வானே.*

**உசேனி ராகம்]** [சாபு தாளம்

பல்லவி

*கொண்டல் வண்ணன் சொல்லினர் - இராக்கத*
*கண்டகரைக் கெல்லினர்.*

அநுபல்லவி

*வண்டாற் குழற்சீதையென் னண்டை யிருந்தவளைக்*
*கொண்டுபோன மாயியைத் துண்டஞ்செய்கு*
[வேனென்று (கொண்டல்)

சரணங்கள்

1. *இந்தச்சோ கத்தைப் போலே*
*இதுவரை யடைந்ததில்லை யென்னலே*
*செந்திரு இலங்கையிற் சிறையிருந்த தால்கொண்டு*
*வந்தன னினிவர வறைப்பதெப் படியென்று*
(கொண்டல்)

2. படியேயென் சனகியை நீ வெளியனுப்பத்
 தடைசெய்தால் - உடனேயினி
சந்தியிலே வனஞ்சேரும் தகைமை யநேக முண்டு
 மடமைப் புத்திகூடின மாமி பொறுத்தே னென்று
 (கொண்டல்)

3. சனகேசன் பூமியுமுக வுன்னிடம் நின்று
 பனிமொழி சீதைவரவே
யெனக்குமாமி யானதா லென்சீதையைத் தாவென்று
 கதைக்குபூமி யோடி......னங் கருத்தாயுரைப்
 [பேனென்று. (கொண்டல்)

### இராமன் கூற்று : தொடர்ச்சி

#### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

மாமிநீ யெனக்கும்வழி கொடுக்க வேணும்
 மனைவியிலா திருக்குநான் சுவர்க்க லோகம்
மாமணிகள் தருநாக ருறையு லோக
 மதிலிருந் தாலுமனது ருசிக்கா திப்போ
காமியா யிருக்குமெந்தன் மனத்துக் கேற்கக்
 காதலியை யிப்பொழுதே தருவா யென்று
கோமகன்சொல் லியுஞ்சீதை யைக்கா ணமல்
 கூறுவான் கோபமதால் சீறு வானே.

### ஸ்ரீராமபிரான் பூமிதேவிமீது சினந்து கையில் வில்லெடுத்தல்

**கல்யாணி ராகம்]** **[சாபு தாளம்**

#### பல்லவி

கோபத்தைத் தொடுத்தானே - ஸ்ரீராமன்கைச்
சாபத்தை யெடுத்தானே.

#### சரணங்கள்

1. சாபங்கையி லெடுக்கச் - சரம்உட னேவிடுக்க
 மாபயங்கள் பிடிக்க - மண்டலங்கள் வெடிக்க
 (கோபத்தைத்)

2. மாமிகண் டுடன்வாட - மதிகதிர் கதிதேட
வாமனன்முன் னோன்கூட - மலரய னுடன்ஆட
(கோபத்தைத்)

3. அஷ்டக சங்கதற - அலைகடல் கள்குதற
துஷ்டர்க ளும்பதற-துங்கப டிசிதறக் (கோபத்தைத்)

4. அண்ட புவனத் துள்ள - யாவரும் பயங்கொள்ளக்
கண்டுபிரமர் மெள்ளக்- கருத்தாய்ச்சொல் லவுந்தள்ள.
(கோபத்தைத்)

## பிரமன் இராமபிரானிடம் வந்து சீற்றந்தணியுமாறு வேண்டல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

வீரரகு ராமனுடைக் கோபங் கண்டு
விண்ணவரோ டயன்வந்து விளம்ப லுற்றான்
சூரரவி குலசந்திர ராம ராமா
சுந்தரனே சந்தாபம் வேண்டா மையா
பூருவத்தில் நடந்ததனை யெண்ணிப் பாரும்
பூபதியே உத்தமப்பிர சித்தா வும்மை
தீரமுட னென்மனத்தில் நினைப்பே னென்று
தேற்றுவா னிராமனிடஞ் சாற்று வானே.

## பிரமன் கூற்று: தொடர்ச்சி

ஆனந்தபைரவி ராகம்] [ரூபக தாளம்

### பல்லவி

அன்னவா கனனுரைத் தானே - இரவிகுல
மன்னனுங் கோபம் வெறுத்தானே.

### அநுபல்லவி

பன்னகத்தின் மீது சயனம் - பண்ணின வுந்த னிரண்டு
கன்னல்மொழியாள் மீது வைத்த [நயனம்
கருத்தைத் திரித்து விரித்துரைப் பானென்று (அன்ன)

சரணங்கள்

1. பத்தினி யான சீதை தவஞ்
செய்பல மதனலே - அந்த
பரம பதத்திலே முன்ன
தாகச் சேர்குவள் மாலே
பத்தர் சூழு முன்பதத்தைத் தேடிப்
பரவி வருவ ளுனையே நாடிச்
சித்தமகிழ் சேர்ந்து கூடிச்
சிங்கார லீலைசெய்வள் பாடி (அன்ன)

2. ஏற்ற சபை மத்தியில் நானின்னுஞ் -
சொல்வேனே - அதையே
ஞாபக மதாகக்கேளு
மென்னுடைக் கோனே
உந்த னுடைய கீர்த்தி பெருகும்
உயர்ந்த விஸ்தார மாக வருகும்
சந்தேக மில்லை வினைகள் கருகுந்
தசமுக னுக்கு வரங்கள் தருகும் (அன்ன)

3. விந்தை யாகச்செனித் திதுவரை நடந்ததைப் போலே
இனிமேல் நடக்கிற காவியம் வால்மீகியி னலே
உந்தன் மீது சொல்லி யிருக்கு
துன்னைப் பணிந்து துதித்த பேர்க்கு
பந்த மானவினை தீர்ந்த வர்க்குப்
படியில் செனன மிலையேயா மவர்க்கு. (அன்ன

## இராமபிரான், இராமாயணத்தின் பிற்பகுதியைக் கேட்க, வால்மீகி முனிவரிடம் மக்கள் வருவாரென்றல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

உத்தரமா யிருக்குமிந்த கதைகள் தம்மை
உத்துக்கே ளிருடிகளோ டென்று சொல்லிக்
கர்த்தன்விடை கொண்டுபிர மாதி தேவர்
ககனத்திற் செலவுடனே அய்யன் சொல்வான்
சத்தரிஷி கிருபையினல் வல்மீ கத்தில்
தான்செனித்து வந்தகவி மகனே கேளும்
இத்தலத்தில் நல்தவத்தோர் சொச்சங் கேட்க
வெண்ணுவா ருந்தனையே நண்ணு வாரே.

## இராமன் வான்மீகி முனிவரிடம் விடைபெறுதல்

### அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

இப்படிச் சொல்லி ராம னிருடியை வணங்கி ஞானா
மைப்படிக் கண்ணி சீதை மைந்தரால் கேட்போ மெந்தன்
சொற்படி வருவீ ரென்று சுமுகமாய் மொழிந்து மைந்தர்
கைப்பிடி கொண்டு மய்யன் கடுகியே சாலை சென்றான்.

## சீதாப்பிராட்டி யில்லாமல் இராமன் அயோத்தி மீளுதல் ; முனிவர்கள் முதலியோர்க்கு உபசாரங்கள் செய்தல்

உசேனி ராகம்] [........தாளம்

பல்லவி

ராமன் வந்தானே - அயோத்தியில்
ராமன் வந்தானே.

அநுபல்லவி

வீமன்மீ தேறு - மாம ஞயிர
ராம னேரகு நாமனே ரகு - ராமனுன ஸ்ரீ (ராமன்)

சரணங்கள்

1. சூராளாங் குமரர்க ளுரை
கொண்டவன் மறுதி னத்திலே
தீராளா மிருடிகள் வரக்
கண்டவன் மகனிடஞ் சொல்வான்
ஆராய்ந்து சங்கையில் லாமல்
நேராகவே கானம் பண்ணென்று
காரார்ந்திடு மேனியன் சொல்லக் - கு
மாரர் தையேற்றுத் த்ரகதை
தாராளம தாகவு ரைத்ததைச்
சீராகவே யெல்லாம் பார்த்ததைச்
செப்புதற் கொப்புமோ யிப்படிச் சிற்பர (ராமன்)

2. சானகிக் கலசம் பத்துங்
கைக்கொண்டு பூத லத்திலே
போனதன் பிறகு விதனத்தைக்
கொண்டு யாக சாலைபால்

தானே சீதையில் லாதாற்சகஞ்
 சூனியமா யிருந்ததாற் சோகந்
தானேவர மனதிற் சாந்தி
 யில்லானே யெங்க ளையன்
செயித்து வானரா ளுடனே
 வானரா ளுடன்சுக்கி ரீவர்க்கும்
ஞான வீடணருக் கவர்க்கும் -
 நல்லுரை சொல்லவும் வல்லரை வென்றிடும்
(ராமன்)

3. தேசாதி பதியுடன் வருஞ்
 சனங்கட் கும்பெரி யவரும்
வியாசாதி ரிஷிகளுடன்-பூசுரர்க்கும்
 மரியாதை செய்து கோசலேந்திரன்
கொடுத்தநற் றாசுடுத்திச் சனங்கள் சென்றபின்
 ஆசையினல் சீதையை மாமியும்
மோசஞ்செய்தா ளென்றுட னெண்ணின
 காசாம்பு மேனியன் றன்னுடன்
கோசலை முதற்ருயர் பின்னுடன்
 கொத்தவர் மெத்தவெ றுத்தவர் சுத்திடும்.
(ராமன்)

## இராமன் புதல்வர்களுடன் அயோத்தியில் வசித்தல்

**விருத்தம்**

இந்தவித மாகராம
சந்திர னுகந்த வீர
நந்தனர்க ளோடு கந்தி
ருந்தனர யோத்தி மீதே.

## இராமன் ஆட்சிச் சிறப்பு

**ரீதிகௌளை ராகம்] தரு [ஆதி தாளம்**

1. இருந்த ராகவனுந்தன் மனைவி பூ
 மகள்தனைக் கண்டு - உடன்
பிரிந்து போன விதனந் தன்னை
 மனத்திற் ருனே கொண்டு;

2. மறுபடி சீதையன்றிக்
கலியாணம் பண்ணவில்லை சாமி - இன்னுந்
தரும யாகந்தோறும் பொன்
சீதையை வைத்துக்கொண்டார் நேமி.

3. பதினாயிர வருஷம் அசுவமேதம்
முதல னேகம் - யாகம்
விதிபூருவ மாகச் செய்து
தட்சணை யீந்தத மோகம்.

4. மானுன ராமன் தன்ம மார்க்கமாய்க்
காலத்தைப் பின்னிட்டார் - எங்கள்
கோனு னவர் சொற்படி
பிராணிக ளெல்லாம்நடக் திட்டார்.

5. வானரா திகளுடன் சுக்கிரீவ னய்யன்
சொல்லைத் தள்ள வில்லை - மேலும்
ஞானவீ டணர்போ லிராக்கதரும்
மனதிற் கொள்ள ;

6. திக்குகள் தோறும் மாரி
பெய்யச் சுபிட்ச மாகிக்
கொண்டி ருக்கப்புத்தி ராதி
சம்பத்தோடே சந்துஷ்டக ராகி ;

7. இருந்தா ரப்போ அகால மரணங்
கிடையாது வியாதி - இல்லைத்
தரும மார்க்கமாய் நடந்தார்கள்
அதுவே யெங்குங் கியாதி.

8. வெகுநா ளிருந்து புத்திர பவுத்திரா
ளுடைய சுகங்கண்டு - பின்னும்
அகம கிழ்ந்த கோசலை சுவர்க்க
மடைந்தா ளய்யா பண்டு.

9. சிலநாள் கழிந்த பின்பு சுமித்திரை
கைகேயி யுடன் கூட - வெகு
நலமுள தாய்மார்க ளெல்லாருஞ்
சுவர்க்க மதை நாட ;

10. அவர்களுடன் சேர்ந்து தயரதன்
போக சுகங் கொண்டார் - அன்பர்
பவமோ சனங்கள் செய்யும் அய்யன்
அவர்சென் றதைக் கண்டார்.

11. விதனங் கொண்ட ராகவன் வசிஷ்டரா
லே - தாயர்க்கெம் மானே - வேத
விதிமார்க்கந் தனைக்கொண்டு வுத்தர
கிரியையைச்செய் தானே.

12. கோதான முடன்பரி யானைதேர்
சிவிகையோ டன்னம் - ஆடை
பூதான மோடு கன்னிகா தானம்
மணிமுதற் சொர்னம் ;

13. முதலான தானஞ் செய்து பிதுருடன்
திருத்திசெய் தவன்றனே - பின்னும்
அதிக மான யாகங்க ளாலே
சந்தோஷங் கொண்டார் கோனே.

## கார்க்கியர் இராமபிரானைக் காண அயோத்திக்கு வருதல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

சந்தோஷங் கொண்டுமய்ய னிருந்தா னிப்பால்
தரணிபதி யானவுதா சித்து தங்கள்
சொந்தமுள குருவாமங் கிரிசா தந்த
சுதரான கார்க்கேயர்தம் மிடத்தி லீந்த
சுந்தரமாம் பரிபதினை யிரங்க ளின்னும்
சோதிமிகு ரத்தினங்கள் பணிதி யோடு
விந்தைமிகு வானவத்தி ரங்கைக் கொண்ட
வேதாதான் அயோத்திவந்த போதா தானே.

## இராமபிரான் கார்க்கிய முனிவரை வரவேற்று உபசரித்தல்

**கல்யாணி ராகம்]** [...........தாளம்

பல்லவி

*கார்க்கேயரைக் கண்டானே - இராகவன்*
*பணிந்தெற்கு முறைவிண் டானே.*

அநுபல்லவி

*பார்க்கவெகு காந்திகள்*
*ஏற்கு முனிவ ரான* (கார்க்கேயரைக்)

சரணங்கள்

1. *அம்மா னுடையகுரு - இம்மா னிலத்தில்வர*
*யெம்மா னறிந்தவர்முன் - சும்மாபோ காமல்சென்று*
(கார்க்கேயரைக்)

2. *சகலபரி வாரங்கள் - மிகவே சூழ்ந்து வரவும்*
*பகவனிரண் டரைநாழிகை - வழியெதிர் சென்று*
(கார்க்கேயரைக்)

3. *இருக்கை யுடனேதந்து - அருக்கியபாத் தியங்கொடுத்து*
*சுருக்கப் பணிந்துசுக வருக்கமுட னேகேட்க*
(கார்க்கேயரைக்)

4. *கேகயர் கோன்தந்த - தநேகவெகு மதியே*
*யோகரிஷி கொடுக்கத் - தாகமுட னேகொண்டு.*
(கார்க்கேயரைக்)

## தாம் வந்த காரணத்தைக் கார்க்கிய முனிவர் இராமனிடங் கூறத் தொடங்கல்

அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

*தத்துவ ரிஷியைப் பார்த்துத் தயரத ராமன் றானும்*
*பத்தியாய்க் கரங்கள் கூப்பிப் பணிந்துரை செய்வா னீங்க*
*ளுத்தவா றேது வென்னே டுறுதியாய்ப் புகல்வீ ரென்ற*
*கத்தனை நோக்கிச் சொல்வார் கார்க்கிய முனிவர் தாமே.*

அடாணா ராகம்] [ரூபக தாளம்

1. காமன் கமலப் பூமன் பணியும்
மாம னோரகு ராமா
வீமன்மீ தேறும் பூம னுயிர
நாம னோரகு ராமா.

2. கங்கை நதிவ ரங்கள் தரவு
மிங்கே கொணர்ந்த ராமா
துங்க பகீர தன்குலம் வந்த
சிங்க மாகிய ராமா.

3. மிண்ட ராகிய கண்டகர் வெகு
சண்டை செய்யவோ ராமா
கண்டு மவரைத் துண்டஞ் செய்த
கோதண்டம் பெற்றிடு ராமா.

4. வந்த வகையை முந்தச் சொல்லுறேன்
சிந்தை யுவந்து ராமா
சந்தோஷ மோடா னந்த மாக
விருந்து கேளு மிராமா.

5. சிந்து நதியி ரைந்து வருமனி
ரந்தர மோடு ராமா
சுந்தர மான தந்த விடத்தில்
கந்தருவ தேசம் ராமா.

6. திரமாக வேகந் திருவ ரங்கனே
நிரந்தர மோடு ராமா - அந்தப்
புரமதைக் கொண்ட கருவத்தா லோடு
ஒருவரும் நிகரில்லை ராமா.

7. அவர்களைக் கொன்று புவிதனி லப்புரந்
திவ்விய மாய்ச்செய்யும் ராமா
நவம கிமைபெற் றவரு மைவிட
னவர்தா னுகட்டும் ராமா.

8. கந்த மூல பலங்கள் தாமதில்
மிகுந்தி ருக்குமி ராமா
மந்தரப் புயனந் தரசயி லூஷணன்
தரும்பிள் ளைகளிவர் ராமா.

9. இரண்டுட ஹென்று கொண்ட கோடிபேர்
தரும்பிள் ளைகளிவர் ராமா
அண்டர்க ளிவர்க ளண்டையில் வாரார்
கண்டு மேரகு ராமா.

10. செயம்பண்ணக் கூடாத வரிவர் ரவிகுல
துயமதி கொண்ட ராமா
தயரதன் னருள்சுய வீரா யென்மேல்
தயவாய்க் கேளு மிராமா.

11. உமக்கு மாதுல னெமக்குச் சொன்னதைத்
தமக்குஞ் சொன்னேனே ராமா
குழக்குப் படையோ டமர்க்கு வரலாம்
தமக்குச்சம் மதமா ராமா.

## கார்க்கிய முனிவர் கூறியவற்றைக்கேட்ட இராமபிரான் முனிவரிடம் தட்ச புட்கலர் பற்றிக் கூறல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

இந்தவிதம் ரிஷிசொன்ன வாறு கேட்டு
இரகுபதி பரதன்முகம் நோக்கிப் பின்னும்
பந்தவினை யகற்றுமுனி தன்னைப் பார்த்துப்
பாங்காக அஞ்சலித்துச் சொல்வா ரய்யன்
சுந்தரனுந் தட்சபுட்க லர்தாம் மெத்தச்
சூராதி சூரரவர் தருமத் தாலே
தந்தையைமுன் னிட்டுவெற்றி கொள்வா ரென்று
சாற்றுவார் தவத்தோனைப் போற்று வாரே.

## இராமபிரான் பரதனிடம் சில சொல்லுதல்

புன்னுகவராளி ராகம்] தரு [ஆதி தாளம்
சங்கராபரணம் ராகம்]

கசட்டை யறுக்கும் முனியோ டய்யன் சொல்லிக்
காதல் மிகுந்திடு நாதனுமா மனுநீத னுரைக்கிறவன்
இசைக்கு மொழியைக் கேளாய் பரதா
நீயிடங் கண்டும் வெகு
லட்சண மாகிய தட்சக புஷ்கலனுக்
கபிஷேகஞ் செய்ய வேணும் - எனச்சொல்லி

அக்கண மேபல மிக்கவராம் பருதிக்குல ராகவனும்
சுபவேளை தனைப்பார்த்து - முடிசூட்டிச்
சொந்தம் தானவுன் மைந்தர்க ளோடு - ந
டந்திடு வாயெனவே

பரதனு மதுகேட்டுச் சேனை யோடே
பட்ச மிகுந்திடுஞ் தட்சக ரோடுகந்
தட்சண மேசெல்ல

பரந்து காக்கை கழுகுகள் முதலாம் வெகு
பட்சிக ளோடு மிரட்ச சுடாகினி
கட்சிக ளாகவுமே

நாயுடன் நரிகூவி கந்தரு வானை
நாடியே - முன்னமே - ஓடியே
அவைகள்கொண் டாடியே சென்றிடவும்
சேனையோடு பரதனும் - மெள்ள மெள்ள

திங்களுமே ரண்டரை யங்கு
நடந்து சனங்களுடன் வரவும்

கேகை யாதிபன் கேட்டுக் கொண்டு
சேனையோடே கிட்டி வந்திட
சிட்ட னெழுந்து சந்துஷ்டியாய் மாதுலனை

மோக முடனே பணியத் தூக்கி
உச்சி மோந்தவ னமருகப்பாய்
பரதா செல்கென
தழுவிப்பின் வாய்ந்திடுஞ் சேனைகளின்
ஆரபா ரத்தினாலே - செவிடுபட்டு

அண்டர்க ளுறையும் விண்மண்டல மோடு
பூமண்டலமு மதிக்க - ஆரணங்களும் பிரமிக்க.

எட்டுத்திசை - யானைகளும்-வெகு
வானவரும் மிகுந்தார் தானவரு மனநடுங்கப்
படையோடு வந்தது கண்டு - கந்திருவர்
பார்த்துட னேசண்டை - வாய்த்ததென் றேபடை
சேர்த்திடு வாயெனவே

சடுதியி லப்படை வரவும் - கந்திருவர்
சண்டையு லேவெகு மிண்டர்க ளெங்களைக்
கண்டிடு வாயெனவே

ஏத்த படியே பேசிக் கொண்டு - தானே
யெட்டுத் திசையிலும் முட்டும் படையொடு
பொட்ட யெழுந்தனரே
ஆர்த்த படையி னாலே - பலமிகும்
அட்ட கசங்களும் கட்டுகள் விட்டது
திக்குமுக் கிட்டிடவும் - தேவர்
பயந்து வாட - உடுச் சிதற
திங்களுட னங்கதிர் மங்கவும்
மலைகளே முங்கட லுங்குறைய
தாவும் பரிக ளோடு பலமிகுந்
தந்திக ளும்ரத பந்தியுட னேவெகு
கந்தரு வர்வந்தார். (தனனு தனதனனு)

## கந்தருவர் பரதனுடன் போர் புரியத் தொடங்கல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

தடதடென வருமூன்று பேருந் தானே
தானையுடன் பரதனையும் வளைத்தார் முன்னே
திடமுடைய சங்கரனைச் செயிக்க வென்று
திரிபுரா திகள்வளைந்தாப் போலும் பின்னும்
வடமேரு வுடன்பகைத்துப் புவியி லுள்ள
மலைகளெதிர்த் தாப்போலு மாசை யோடு
சடுதியினில் கந்தருவர் பரதன் றன்னை
தடுத்திட்டார் சண்டைசெய்யத் தொடுத்திட் டாரே.

## பரதனும், புதல்வர்களும் கந்தருவர்களுடன் போர் புரிதல்

**தோடி ராகம்]** **[சாபு தாளம்**

### பல்லவி

கந்தருவ ருடனே - மந்திர மூர்த்தி தம்பி
கருதின சண்டைகள் செய்தான்.

### சரணங்கள்

1. மந்தரப் புயனே ரகு நந்தனன் பதத்தில் - மிகுந்த
பத்தி யுள்ள பரதன் மார்பில்
சுந்தர முள்ள தும்பை - அந்தமுடன் தரித்து
செந்தாமரைக் கையிலிருந்த - சங்கை யூதினன்

மதியி னுடன்வரு கதிர்நிலை யும்பதறவே
மலைகளுட னேமேரு - மலையுஞ் சிதறவே
எதிரி யானகந் திருவருங் கதறவே
எழுகடல்கள் தளப ளென்று குமுறவே (கந்தருவர்)

2. பலத்த ராகவ னனுசனுங் - கணைகள் பெய்தார்
வலுத்தகந் திருவர்கள் கணையைக் கொய்தார்
பிணைத்துச் சொல்லிக் கந்திருவர் கணைதொடுத்தார்
கனத்த ராகவ னனுச னதைத்தடுத்தார்
பீதியிலாப் பரதனந் தட்சனுடன் புட்கலனோ டின்னும்
மாதுலனுஞ் சேனைகளுந் தான்சரம் விடமன துன்னும்
போதினிலே கந்திருவர்கள் - பரதனஞ் சேனையின் மேலே
சூதுடனே சரம்விடவே சரங்களுட னேகாலை
பேதிக்கப் படைகளை - வாதிக்குஞ் சரம்விட
ஆதித்த குலநாதன் பாதத்தில் பத்திதன்னை
பிடித்த பரதனுஞ் - சடிதமுட னங்கணை
தொடுத்துக்கந் திருவர் - விடுத்த கணைகளைத்
தடுத்து மவர்களை - விடுத்த படைகளை
மடுத்து ரத்தநதி - யெடுக்கும் பிண்டிசெய்து (கந்தருவர்)

3. மேலத் திசைமுத லந்நாலு திசைகளிலும்
மேருடன் வெள்ளிக் குன்றுதன் மீதிலும்
காலுறை மண்டல மும்மேக மண்டலங்
கதிரவன் மண்டல முஞ்சந்திர மண்டலம்
வேதனுறை லோகமுந் தேவலோக மின்னமுஞ் - சக
நாதனுறை லோகமுங் கீழ்லோக மதிலநேக
வாதுடனே கந்திருவர்கள் விடுத்த சரங்களாலே
சோதிமழுங்கித் திசைகளும் இருக்கக்கண்டு பின்னாலே
வீரமுடன் பரதன்ங்கோர் கணையெடுத்துப் பாரில்கணை
விழக்கோரி விடுத்துப் பின்னும்
விருதுசொல் விமனம் உறுதியு டன்மிகு
பருதி வுதிரத்தைக் கருதிச் சடுதியில்
பரதன் விடவேகந் திருவர் படைகளும்
முறிந்து மெரிந்துடல் பொரிந்து கீழ்விழ
சேனைகளெல் லாமடியக் கண்டு முக்கோடி
தீரக்கந் திருவரும் பரதனை நாடி

கோனேநீ யோடிப்போ காதேநில் லென்று
　　கோபமெல் லோருங் கொண்டுட னேதிரண்டு
சீறிட னங்கணங்கள் நெருப்பாய்க் காட்டி
　　கணைதொடுக் கக்கோர முடன்வரு கக்கண்டு
　　　பரதன தைத்தடுக்க
வீரமி குங்கந் திருவர்கள் பரதன்
　　　மார்பை பிளந்து
சோரமிகுங் குமிழியோடே வரவே மனந்தளர்ந்து
　　சீக்கிர முடனெழுந் தாக்கிர மித்துக்களை
　　தாக்கியேழு நாள்சண்டை போக்கியெட் டாநாளில்
சிங்கமுள பரதனுங் கோவங் கொண்டுபின்
　　பொங்குசவ் வரதாத்திரங் கையெ டுத்துடன்
அங்கே விடுத்திடவுங் கந்திருவர் சரங்கள்
　　அறுத்துச் சீவங்கள் போகு(ம்) மட்டும். (கந்தருவர்)

சந்த விருத்தம்

ஆவல் மிகுந்தவர் ஆறிலே பாதிகொண் டக்கோடி
சேவகர் கந்திரு வோர்களுந் தீமைமி குந்தோறும்
ஆவியி ழந்தவர் போகவும் ஆநக ரைத்தேடி
தேவர்கள் வந்திலர் தீரனு மாசைகொண் டுற்றனே.

**தட்சசீலன், புட்கலன் ஆகியோர் தட்சசீலம், புஷ்கலம் என்று நகரங்கட்கு அரசராக முடிசூட்டப்படல்; இலக்குவன் புதல்வர் அங்கதன் சந்திரகேது ஆகியோர்க்கும் முடி சூட்டுதல்**

முகாரி ராகம்] தரு [சாபு தாளம்

1. ஆசை கொண்ட மைந்தர்கட் காக
　　அக்கணம் அவ்விடத்திற் றனே-திவ்விய
　தேசுபெருகுந் தட்சசீலம் புஷ்கல வர்த்தமாந்
　　தேசமிரெண் டுடனேசெய் தானே.

2. அதிலே தட்சனுடனே புஷ்கலனையும் வைத்து
　　ஆண்டு வரும்படியாய்ப் பண்ணி-அவர்
　பதியென்று கொண்டுமேலாய் தனதானிய மிகுந்ததைப்
　　பரதன்பார்த் தய்யனிடம் நண்ணி ;

3. வந்துசா மியைப்பணிந் தெழுந்துகந் தருவாளை
வகைபண்ணி னதைச்சொல்லக் கண்டு - ராமன்
சிந்தை யுவந்துபின்னும் லட்சுமண னுடனே
சேதியு ரைக்கமனங் கொண்டு ;

4. தருமங்களை யறிந்தும் மகாபல சாலிகளாய்
தானேராச் சியத்துக்கு யோக்கிய - முள்ள
இருவரான உன்பிள்ளை அங்கதனஞ் சந்திரகேது
இவர்களுக் கபிஷேகஞ் சிலாக்கிய ;

5. மாகவே பண்ணவேனும் நீயும் பரதனு
மென்வச னத்தைச்சிரசாக் கொண்டு - இன்னும்
யோக ரிஷிகளுடன் அந்தணர் முதலாக
வொருவர்க்கிமி சையிலாததைக் கண்டு ;

6. சொன்னேன்வித் தாரமாயு ரம்யமான தேசத்தை
சோதிச்சுப் பார்த்துநீர் சொல்லும் - என்று
உன்னதமாக வுரைத்த அய்யன் மொழியைக்
கண்டவுடன் பரதன்மனசு செல்லும்.

7. சென்று யோசனைபண்ணி தேர்ந்து ராமனுடனே
தெளிவாயு ரைப்பனவன் றானே - நான்
கண்ட தேசத்தின்மேற்கே தாருபதத் தோடின்னுங்
காந்தியுள்ள தேசஞ்சொல் வேனே.

8. வடக்கே சந்திரகாந்த மிருக்குயிவை யிரண்டிலும்
வரிசையா யபிஷேகம் பண்ணும் - என்று
ஒடுக்கவணக் கத்துடன் பரதன் மொழியைக்கண்ட
வுடனேசம் மதித்தய்யன் சொல்லும் ;

9. எண்ணியங் கதியமுஞ் சந்திர காந்தமான
யிரண்டுபுரஞ் செய்தவன் றானே - வுடன்
நண்ணிஅங் கதனுக்குஞ் சந்திர கேதுவுக்கு
மன்னராய் அபிஷேகஞ் செய்தானே.

10. வெகுசந்தோ ஷத்துடனே அங்கத னுடன்கூட
வீரலட்சு மணனையுங் கூட்டிப் - பின்னும்
வகையாகப் பரதனைச் சந்திர கேதுவுடன்
வடக்கே யனுப்பமனம் நாடி ;

11. நாட்டின படிஅய்யன் அனுப்ப அவர்களந்த
நகரத்திற் சேர்ந்திருந் தாரே - அப்பால்
ஆட்டபாட் டத்துடனே லட்சுமண ரும்ஒரு
ஆண்டுஇருந்து எழுந்து வந்தாரே.

12. பரதன்பன் னிரண்டு வருஷம்இருந்து குழந்தைநன்ருய்ப்
பரிபாலனஞ் செய்யவதைப் பார்த்துப் - பின்னும்
பரிவுடன் குழந்தையை அனுப்பிக்கொண்டு தேரிலே
பரதன்ஏறச் சேனைகள் ஆறது ;

13. சேனைக ளுடனே யெழுந்துபரதன் சாமி
தரிசனங் கண்டுமனம் பொங்கி - வந்த
தானைக ளைவெளியில் பரதன் நிறுத்தித்
தானே துதிகளைத் தொடங்கி ;

14. தோத்திரஞ் செய்துவந்து பணிந்ததம் பியிரேடு
சூழ்ந்து திரேதாக்கினி போல - மனம்
ஏத்ததம்பி மாரோடு கூடிக்கொண்டு மய்யனும்
இருந்தாரின்னுஞ் சொல்லுவேன் மேலே.

## இராமன் பதினயிரம் ஆண்டுகட்குமேல் அரசாட்சி செய்தல் ; இயமன் ஒருதவசிபோல் வேடங்கொண்டு இராமனிருக்குமிடம் வருதல்; இலக்குவன் தவசி வருகையை இராமனிடம் கூறல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

இப்படியே வொருபதின யிரத்தின் சொச்சம்
என்றதொகை வருடமது செல்ல வோர்நாள்
செப்பவரி தானநமன் தவசி போலே
தென்திசை யிருந்துமயோத் திக்கு வந்தான்
ஒப்பில்லா விலக்குமணன் றன்னைக் கண்டு
உம்முடைய தமையனிடஞ் சொல்வீ ரென்ருன்
அப்படியே யிலக்குமணன் அய்ய னிடம்
அறிவிப்பான் வகைவகையாய்த் தெரிவிப் பானே.

## இராமபிரான் தவசியை உள்ளே அழைத்துவரச் செய்தல் ; தவசி வந்த காரணம் பற்றி வினவுதல்

காம்போதி ராகம்] தரு [சாபு தாளம்

1. அய்யனே ரகுகுல மெய்யனே யெந்தன்
   புன்சொல்லை யறியுந் தூய்யனே ரகுபதியே - இன்னும்
   மெய்யாகச் சொல்லுகிறேன் ஒருதவசி யானவர்
   விரைவாய் வந்தவர் ரகுபதியே.

2. தங்களைக் காணவேணு மென்றுயென் னிடமகா
   தவசி சொன்னூரே ரகுபதியே - பின்னும்
   தங்கக்குண் டலத்தோடும் வெகுகாந்தி யுள்ளரிஷி
   சாற்றி னூர்ரகு பதியே.

3. அந்தவ சனங்கேட்டு சீக்கிரம் விட்டுவிடு
   அட்டிபண் ணுதேலட்சு மணனே - அங்கே
   வந்திருக் கும்முனியே சீக்கிர மிவ்விடத்தில்
   வரவழைப் பாயேலட்சு மணனே.

4. அய்யனு டையசொல்லைக் கொண்டு முனியைத்
   தானுமழைக்கப் போனவன் லட்சுமணனே - மெத்த
   துய்யவன் ரூனும்மைக் கூட்டிக் கொண்டுவரச்
   சொன்னனென் றவன்லட்சு மணனே.

5. ஆசீர்வா தம்பண்ணிக் கொண்டு அந்தரிஷியை
   அய்யன் கண்டுடன் தபோநிதியே - எங்கள்
   சரச பூதனை யென்மீது கிருபைசெய்ய
   சாமிவந் தீரேதபோ நிதியே.

6. என்றுசொல்லிப் பணிந்து அருக்கியபாத்யங் கொடுத்து
   இங்கேவந் தீரேதபோ நிதியே - இன்னுந்
   தொண்டர்க ளுடனந்த வஞ்சுக மோவந்த
   காரியஞ் சொல்லுமய்யா தபோநிதியே.

## இரகசியமாக இராமனிடம் ஒரு செய்தி சொல்லவேண்டும் எனத் தவசி கூறுதல்; இராமன் இலக்குவனைக் காவலாக வைத்துத் தவசியுடன் உள்ளே செல்லுதல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

*இந்தவித மய்யனுடை மொழியைக் கண்டு*
*இரகசிய மாகவுரை சொல்ல வேணும்*
*அந்தவிடத் தொருவரும்வா ராமல் செய்தால்*
*அய்யனே சொல்லுகிறே னென்றார் சாமி*
*எந்தனுடை லட்சுமணு காவ லாக*
*இங்கிறென்று உள்நடந்து ரிஷியைக் கேட்க*
*சிந்தைமகிழ்ந் தேமுனியும் வந்த வாறு*
*தெரிவிப்பார் ராமனுடன் விரிவிப் பாரே.*

## தவசி தாம் வந்த காரணங் கூறுதல்

**சாவேரி ராகம்]** **[ஆதி தாளம்**

### பல்லவி

*கேளுங்கோ சாமி வந்த வகையைச் சொல்வேன்*
*கேளுங் கேளும் சாமி-கேளும்*

### அநுபல்லவி

*வாளைப் பிடிக்கிற மன்னர்க ளுக்கெல்லாம்*
*வங்கை யானலங்கை யாளுமி ராவணன்றன்*
*தோளுங் கரங்களுந் தாளுந் தலைகளுந்*
*துண்டஞ் செய்தரகு புங்கவ னேசாமி (கேளுங்கோ)*

### சரணங்கள்

1. *பிரம னனுப்ப வந்தேன் - அவர்-சொன்னதைச்*
*பெரிதா மும்முடை லோகங் காருஞ் [சொல்லுகிறேன்*
*சரதமாகச் சொல்லுறேன்-இப்போ-சமயம் இந்த*
*சகத்தை முன்னே மயக்கி உத்தாரம்*
*பரிவுடன் செய்யஉப சங்காரம் பண்ணிக்கொண்டு*
*பாங்காய்ப் பிரளயத்தில் நீரேறும்*
*உரமிகுந் தாதிசேஷன் மீதுநித் திரைசெய்ய*
*உன்னுடைய நாபியிலே அன்னவா கனனையு*
*முன்னேயுண்டு பண்ணினீர் இன்னமுஞ் சொல்ல*
*[வேனீர் (கேளுங்கோ)*

2\. மறுபடி தேவரீர்க் காதில் - மதுகயிட வர்களைக்கண்டு
கறுவி யவர்க ளோடே யெதித்தா யிரவருஷங்
கனசண்டை செய்தவரை
வென்றொரு நிமிஷத்தி லவர்மாங்கிசம் புவியிலும்
பூவுடன் மலையாகச் செய்துகொண்டே
சிறிது பிராணிகளைச் சிருட்டிக்க வேயெந்தனை
திட்டப்ப டுத்தினவன் கட்டளைப் படிசுமந்
திட்டெனினிச் சொல்லுவேன்-சிட்டாரக வர்நீர்தாம்
(கேளுங்கோ)

3\. இனிமேல் தாமசஞ் செய்தால் - நானும் பொறுக்க
எந்தன ரட்சியு மய்ய [மாட்டேன்
சனியன் போலப்பீடை செய்யுந் துட்டர்களைச்
செயிக்கத் தரித்திர் அவதா ரங்கள்மெய்ய
முனிவர் சொன்னபடியே பத்தர்க்காக அவதரித்த-ரா
வணன்முத லரக்கரைக் கொன்ற துய்ய
கனமிகுந் தயோத்தியில் மகுடாபி ஷேகங்கொண்டீர்
கருத்தாய்க் கேளும்பதினொ யிரத்தின் ஆயிரமாண்டு
திருத்தி யாச்சுது சொன்னேன் - அறத்தைக்
[கொண்ட ராமாநீர். (கேளுங்கோ)

## இயமன் இராமபிரானைத் தன்னடிச்சோதிக்கு எழுந்தருளுமாறு வேண்டுதல்; இராமன் மறுமொழி கூறத்தொடங்கல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

எம்பெருமா னேபரம பதத்துக் குத்தான்
எழுந்தருளி யெங்களைரட் சிக்க வேணும்
அம்புவியில் பிரசைகளைக் காக்க வென்று
ஆசையிருந் தாலிருக்க லாமென் றய்ய
அம்பரனே யென்னிடத்தி லயனுஞ் சொன்னான்
அந்தமொழி யும்மிடத்தில் சொன்னே னென்று
இயம்பினதைக் கண்டுயிவன் தரும னென்று
எண்ணுவா னுடனேவுரை பண்ணு வானே.

கல்யாணி ராகம்] தரு [சாபு தாளம்

1. உம்முடை வசனத் தாலேயென் மனது
ஒருமை யாச்சுதெ னய்யா
செம்மையாய்க் கேளுமென் வசனத்தை நீருந்
தென்திசைப் பாலனே மெய்யா.

2. இங்கேநீர் வந்தது சந்தோஷ மாச்சுது
யென்னவ தாரஞ்சொல் வேனே
சங்கையில் லாமலே மூன்றுலோ கத்துள்ளோர்
தன்னையுங் காப்பவன் நானே.

3. என்னுடை வசத்தி லிருக்கும் தேவர்கள்
எல்லாரை யுங்காக்கத் தானே
நன்னய மாகவே பரம பதத்துக்கு
நான்வரு வேன்ம கானே.

4. இப்படி யேஅய்யன் சொல்லிக்கொண் டுதானே
இருக்கை யிற்றுரு வாசன்
கைப்பிடித் தண்டுங் கமண்டல முங்கொண்டு
கடுகிவந் தான்கோபா வேசன்.

5. வாசற்ப டிகாக்கும் இலக்கும ணனிடம்
வசனிப்பான் வந்த முனியே
தேசுகள் பெற்ற ராகவனை யென்னிடம்
சீக்கிரங் காட்டுநீ தனியே.

6. இப்படிச் சொன் ரிஷியை வலம்வந்து
இரண்டுகை கூப்பிப் பணிந்து
தாப்பாக வந்த காரிய மென்னிடஞ்
சாற்றுமை யாமனம் மகிழ்ந்து.

7. சொன்னது செய்கிறேன் அய்யன்வே ணுமென்றால்
சொல்லுகி றேன்கேளுந் துய்ய
நன்னய மாம்ரக சியயோச னையில்
நாதன் இருக்கிறார் மெய்யே.

8. ஒருமுகுர்த்தஞ் செல்லும் அய்யனைக் காண
உத்தது சொன்னே னுன் றுசன்
பருவதப் புயலட் சுமணன் சொல்லப்
புடபடத் துத்தூர் வாசன் ;

9. இப்படி யேராம னிடம்போய்ச் சொல்லவேணும்
இல்லாவிட் டால்கோபத் தாலே
எப்படி யுமுங்கள் வங்கிசத் தோடு
இறக்கடிப் பேன்சாபத் தாலே.

10. இந்தவி தஞ்சொல்லக் கண்டு இலக்குமணன்
ஏக்கத்து டன்நடு நடுங்கி
சிந்தையி லெண்ணுநாம் அய்பனி டஞ்சென்றால்
தீருவோநா மென்றே அடங்கி ;

11. இல்லா விட்டால் வங்கிச முழுவதுவு
மிறப்பது வுநிசந் தானே
நல்லதல் லஅது நாத(ன்)னி டத்திலே
நடப்ப துசுகந் தானே.

12. என்றுசொல் லிக்கொண்டு சாமியி டம்வந்து
என்னையா ளுமய்யா நேமி
தண்டு கமண்டலத் தோடுந்து ருவாசர்
சினத்துடன் வந்தார் சாமி.

13. அங்கவர் சொன்னதை அய்யனு டன்சொல்ல
அழையுமென் றுரேரகு ராமன்
துங்கவ னந்தரு மனுக்குத் தரவு
சொல்லி யனுப்பினர் போதன்.

14. அதிவேக மாக யெதிர்கொண்டு வந்து
அய்யன்துர் வாசரைப் பணிந்து
துதிசெய்து காரியம் யாதோ யென்னிடஞ்
சொல்லவே ணுமென்று தணிந்து.

### தான் வந்த காரியம் பற்றித் துருவாசர் இராமபிரானிடம் கூறத்தொடங்கல்

#### கொச்சகம்

சொன்னமொழி யேற்றுமுனித் தூருவாச னவனும்
நன்னயமாய் ராமனிடம் நாடியுரை செய்தானே
மன்னர்குல மணியேநான் வந்தவர லாறுரைப்பேன்
என்னுடைய வசனமதைக் கேளென் றியம்புவனே,

## துருவாசர் கூற்று : தொடர்ச்சி
## தமது பசித்துன்பத்தை நீக்குமாறு முனிவர் இராமனிடம் வேண்டல்

**ஆனந்தபைரவி ராகம்]** **[ஆதி தாளம்**

பல்லவி

ரவிகுல மகாராச ராசனே - நான் சொல்லுவதைச்
செவிகொடுத்து நீ கேளுல் லாசனே.

அநுபல்லவி

கவிகான லோல கருணையா கார
திவ்ய மாகவென் சேதியைக் கேள்தீரா (ரவிகுல)

சரணங்கள்

1. மண்டலத்தில் இருந்த கீர்த்தி
மன்னனே உமக்கெவர்தாம் சேர்த்தி
கண்டுகொள்ளும் எந்தன் மொழியை
கண்டகரை முன்னந் துண்டஞ்செய்த வீரா (ரவிகுல)

2. அன்னங்க ளில்லாமல் தானே
ஆயிர மாண்டாச்சுது கோனே
இன்றையத் தினந்தான் சொல்வேன்
என்னுடைய தவம் உன்னிப் பூர்ணங்கேள் (ரவிகுல)

3. உந்தனிடத்தில் போசனம் பண்ணும்
உறுதிகொண்டு நான்வந்தேனே திண்ணம்
எந்தனுடைய பசியைத் தீரும்
எங்கும்புகழ் கொண்டதுங்க ராமா நீரே. (ரவிகுல)

## துருவாசர் பாரணை செய்து மகிழ்ந்து செல்லல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

உந்தனிடம் போசனத்தை யாசித் தேனென்
றுறுதியுடன் முனிகூற வேற்ற னய்யன்
அந்தமிமி டந்தனிலே சாமி சொல்லா
லறுசுவையோ டன்னமுதற் செய்து வைத்தார்
பந்தவினை யகற்றும்ரிஷி தமக்கு ராமன்
பாரணையும் பண்ணிவைக்க அவரைப் பார்த்து
சிந்தைமகிழ்ந் தேமுனியும் ஆசீர் வாதம்
செப்புவான் பயணமதி லொப்பு வானே.

## இராமபிரான், இயமன் வந்து சென்றதை எண்ணியிருத்தல்; இலக்குவன் ஒன்று கூற விரும்புதல்; இராமன் கேட்க இசைதல்

### இதுவுமது

கோவமுள முனிதுருவா சனைய னுப்பிக்
    கோசலையின் சுதரான ராம னப்பால்
பூவுலகில் உயிர்களையே வதைக்குங் காலன்
    புகழ்ந்துஉரை செய்ததையும் நினைத்துப் பின்னும்
ஆவல்கொண்ட ராகுவினால் மறையுஞ் சந்திரன்
    அதுபோலே விளங்கியிருந் தவரைக் கண்டு
சேவித்து லட்சுமணன் அண்ணா வென்று
    செப்புவான் மனுக்கேட்க ஒப்பு வானே.

### இலக்குவன் கூற்று

**மத்தியமாவதி ராகம்]** **[ஆதி தாளம்**

### பல்லவி

ஒரு விண்ணப்பங் கேளுமென் சாமி - யெந்தனைநீரும்
ஒருமையுடன் தள்ளுவாய் நேமி

### அநுபல்லவி

சரதமாகச் சொல்வேன் ஞான போதா
    சலன மன்னியி லென்னைத் தள்ளொண் ணாது
கருதியென் னிடத்தில் சொன்னது சூதா
    கண்டவர் பழிப்பா ரேரகு நாதா (ஒரு)

### சரணங்கள்

1. காலகதி வந்ததைப் பாரும் - எந்நிமித்தியங்
    கலங்க வேண்டாஞ் சொன்னேனே யேரும்
தூயமனங் கொண்ட சீலர் - என்னிடஞ்
    சொன்னீர் யாரும் உள்ளே விடாமல்
  திறமாகக் காரென் றீரே நீரும்
ஞாலமெங்குந் துதித்திடு முங்கள் சொல்லை
    நானறிந்து கொண்டு மிருந்திடு மெல்லை
சீல முள்ளரிஷி வந்தவ ரென்னைச்
    சீறிக் கோவஞ்செய்ய வந்தேனுன் முன்னே. (ஒரு)

[இதன் பிறகு, சில ஓலைகள் பாதியாய் முறிந்து பாடல்களின் உருவங்கள் மிகவுஞ் சிதைந்துள்ளமையின் அவற்றி லுள்ள பாடற் பகுதிகளை இங்கு பதிக்கப்பெற வியலவில்லை.]

பண்டுநீர் சொன்னது நானே - அறிந்து
பரிவுடன் உமதுராச் சியத்தைஆண் டேனே
விண்டுயிப்போ சொன்னீர்ம கானே - கேட்க
விஷமா யிருக்குநெசஞ் சொன்னேன் ஸ்ரீமானே
(இன்னும்)

சுவர்க்கம்வந் தாலுமென தய்யா - உமக்குப்பின்
சொன்னேனிவ் வுலகாள மாட்டேன் மெய்யா
யவர்க்குத் தந்தையாகிய துய்யா - என்புன்சொல்
பரிவுடன் கேளும் சக்கரம்வைத்த கையா (இன்னும்

இந்த ராச்சியங் குசலவர்க்கு நீரும்
இதமாக அபிஷேகம் பண்ணினு லுமக்கு
சிந்தை மகிழுமரசர் தமக்கு - வெகு
திவியமா யிருக்குமே யெந்தன் சொலுக்கு. (இன்னும்)

பரதன் குசனுக்குக் கோசல தேசத்தையும், இலவனுக்கு உத்தரகோசல நாட்டையும் ஆளும் உரிமை அளிக்கச் செய்தல்;
சத்ருக்னனுக்கு இராமபிரான், சுவர்க்கஞ் செல்லும் சேதியைக் கூறிவிடச்செய்தல், மக்களனைவரும் வருந்துதல்;

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

ஓங்குகோ சலதேசங் குசனுக் குப்பின்
உத்தரகோச லத்தைலவன் ஆளச் செய்யும்
ஈங்குநம் முடையசொர்க்க கமனந் தன்னை
இதமுளசத் துருக்கனுக்குச் சொல்லி யனுப்பும்
பாங்குடனே விம்மொழியைப் பரதன் சொல்ல
பலசனங்கள் முகம்வாடி யிருந்தா ரிப்பால்
ஆங்கிருந்த வசிட்டமுனி அயனைப் பார்த்து
அறைகுவார் மெய்ஞ்ஞானம் நிறைகு வாரே.

## வசிட்டர் இராமபிரானிடம் சில கூறல்

**உசேனி ராகம்]** **[திரிபுடை தாளம்**

1. சாருவ பூமா.....................ன்றுதி பூருவ தாமா
   சாருவ பூமா - சாமி ராமா - கூர்ம ராமா
   கோவே பரந்தாமா (சாருவ)

2. இங்கு தானே - இறப்பரம் மானே
   பாங்காய் நானே - பலுக்குவேனே கோனே
   சாமி நேரே - தரையுற் ருரே - (பூ)[பு]லம்புருரே பாரே
   (சாருவ)

3. அவரைப் பாரும் - அழைக்க யேரும்
   தவர்கள் கூறுஞ்-சகலபேருந் தேறும். (சாருவ)

## அயோத்தி நகர் மக்கள் இராமனிடம் சில கூறத் தொடங்குதல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

இந்தச்சனம் நினைத்தபடி நிறைவேற் றென்று
இருடியாம் வசிட்டர்சொல்ல வறிந்து அய்யன்
அந்தநிமி டந்தனிலே யவரைப் பார்த்து
ஆகவேண் டியதென்ன யென்ன லென்ருர்
முந்தபுர சனங்களுமெல் லோருந் தானே
முகமலர்ந்து முக்காலும் வலமாய் வந்து
சிந்தைமகிழ்ந் தேசனங்கள் பணிந்தெ ழுந்து
செப்புவா ரய்யனதை யொப்பு வாரே.

## அயோத்திநகர் வாசிகள் கூற்று

**அடாணு ராகம்]** **[ஆதி தாளம்**

பல்லவி

ஹே ராம! ராம-ராம-ராம
எங்களுக்கு ஆதார - நீர் பலபீமா.

அநுபல்லவி

நாராயண னேரகு - ராமனுகுங் கண்ணனே
ஏலாய் எங்கள் மன்னனே
எங்கள் சொல்லை நீரும் இங்கிதமாய்க் கேளும்
(ஹே ராம)

சரணங்கள்

1. நீர்சொல்லும் இடந்தானே - நாங்களெல்லோரும்
    நேராய் வருவோங் கோனே
  ஆசை யெங்களுக் கய்யா
    அழிவில்லாத தர்மந் துய்யா
  தேசு சக்கரக் கையா - தினமும்
    உன்னனுசன் மனத்திலே வருவோம் - (ஹே ராம)

2. எங்களுக் கிதுதோணி-யிருக்கு தையா
    இன்னுஞ் சொல்லுவோங் கேள்நீ
  இங்கிந்தச் சென்ம மேலே
    இச்சை யிருந்தாம் மாலே
  தங்களுடைப் பின்னாலே -சகல பெண்டு
    பிள்ளைக் கிதமாய் வருவோம் (ஹே ராம)

3. உனக்குநாங்க ளிட்டாளாக - இருக்கு மாகில்
    உந்த னுடையபின் னுக
  கனத்தமலை யானாலும் - கடுந்தீ யானாலும்
    வனத்தில்தவஞ் செய்தாலும் - வருவது சித்தமே
      ஒருமை யிதுதாமே. (ஹே ராம)

## தம்முடன் அயோத்தி மக்கள் வர இராமன் உடன்படல்; குசலவர்க்கு முடிசூட்டல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

புரசனங்க ளிந்தவிதஞ் சொல்ல வேபின்
  பூபதியு மவருடைய வுறுதி கண்டு
வரமுனியாந் தருமரிஷி சொன்ன சொல்லை
  வகைவகையாய் நினைத்துமவர் முகத்தைப் பார்த்து
இரவிகுல மணிஅங்கி காரஞ் செய்து
  இப்பொழுதே அபிஷேகஞ் செய்வே னென்று
விரவுடனே குசலவர்க்கு முடிகொடுக்க
  விரைவுடன்தாங் கொண்டனர் குமரர் தாமே,

குசலவர் முடிசூடற் சிறப்பு

கேதாரகௌள ராகம்] [ஆதி தாளம்

பல்லவி

மகுடாபி ஷேகங் கொண்டார் - குசலவர்
மகுடாபி ஷேகங் கொண்டார்.

சரணங்கள்

1. தகிட தாகிட வென்றே ரம்பை யாடும்
சங்கதிகளுடன் நாரதர் பாடும்
சகல தேவரும் இந்த்ரனுங்கொண் டாடுஞ்
சாமி கையினுல் மகுடங்கள் சூடும் (மகுடா)

2. சாமிசொல்லவே பரதனு மறிந்து உடன்
சகலபேர் களுக்குமோலை வரிந்து
ராமன்கிருப மென்றுஅவர் தெரிந்து - பின்
நாடி வந்ததைக் கண்டுஇவர் பரிந்து (மகுடா)

3. நகரமுழுது மலங்கார மநேகஞ் - செய்ய
நானுவித வேடிக்கைகளும் மெய்ய
தகதக வெனவிருக்கும் பதுமையின் கையாற்
சாமரங்கள் போடக்கண்ட வுடனே துய்ய (மகுடா)

4. அபிஷேகஞ் செய்யுமண்டபந் தானே - மெத்த
அலங்காரம் விசுவகர்மன் செய்தானே
கபிஅனுமனுந் திவ்வியதீர்த்தந் தானே கொண்டு
கடுகி யரைநொடியில் வந்தானே (மகுடா)

5. காகுத்தனுந் தம்பியும் மண்டபந் தனில்வந்து
கருத்தாய் வசிட்டாதி யெல்லோர்களை யுமுவந்து
பாகுமொழி சனகிசு தர்களுமே யிணைந்து
பலபல வலங்காரங் கொண்டிடன் பொருந்தும் (மகுடா)

6. முந்த வேதத்தின்படி சாந்திகளும் - இன்னும்
முதலான மந்திர ஓம நாந்திகளும்
அந்தணர்கள் செய்தார்பிரக் கியாதிகளுங் - கொண்ட
அனந்த தேச தேச ராசாதிகளும் (மகுடா)

7. ஆனந்த முடனவர் அய்யன்மனம் போலொக்க
அட்ட மந்திரியுங் கைலாகு கொடுத்துநிற்க
வானதனில் வந்த வானவர்களுமே பிரமிக்க
மானுன ராமன்கையால் மகுடம் எடுத்துவைக்க.(மகுடா)

### குசலவர் அவரவர்க்குரிய இடஞ்சென்று ஆட்சி புரிந்திருத்தல்

**எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்**

*தடமுள்ள தோளுடையோ னிவ்வா றகத்*
*தனையர்களுக் கபிஷேகஞ் செய்து பின்னுந்*
*திடமுடைய யானைபரி தேர்கா லாளை*
*சீக்கிரமா யிரண்டுபங்காய்ச் செய்வீ ரென்றான்*
*சடுதியினி லய்யனுரைத் திடவே கண்டு*
*தானையுடன் குசலவர்க ளிரண்டு பேரும்*
*திடுதிடென்ன குசாவதிசி ராவதிபேர் பெற்ற*
*திடஞ்சென்றார் நகரமதி லிடஞ்சென் றாரே.*

### இராமபிரான் சத்ருக்னனுக்குத் தாம் இவ்வுலகைவிட்டுச் செல்லும் சேதியைக்கூற ஏவலாளை யனுப்புதல்

**இதுவுமது**

*வந்தவர்கள் நகரையாண் டிருந்த சேதி*
*மானன ராமனறிந் துவப்பை யுற்றார்*
*அந்தநிமி டந்தனிலே யேவ லாளை*
*அழைத்துசத்து ருக்கனிட மனுப்பி [வை]த்தார்*
*பந்தவினை யகற்றுமய்யன் மொழியைக் கொண்டு*
*பாராளுஞ் சத்துருக்க னிடத்தில் சென்று*
*சிந்தைமகிழ்ந் தேபணிந் தெழுந்து வந்த*
*சேதிநான் சொல்வதுவே கியாதி தானே.*

### ஏவலன், சத்ருக்னனிடம் இராமன் கூறியவற்றைக் கூறல்

**ஆனந்தபைரவி ராகம்]** **[ஆதி தாளம்**

1. *கேளுஞ்சத் துருவைவெல் வீரனே எங்களை*
*ஆளுஞ்சத்து ருக்னமகா ராசனே*
*தாளுந் தடக்கைகூப்பிப் பணிந்தோமே - நாங்கள்*
*சருவகால மூந்தனை நினைந்தோமே சாமி.* (கேளும்)

2. *வந்தவகை யைச்சொல்வோம் நாதனே - லக்குமன்*
*வைகுண்ட மடைந்தாரே நீதனே*
*முந்தஅய்யன் பிரதிக்கினையுஞ் சொன்னரே - அது*
*மூலந்துரு வாசனுலவருஞ் சென்றாரே சாமி நீ.* (கேளும்)

3. *அந்த விந்தியமலைத் தாழ்வரையை யெண்ணி - அங்கே*
*அற்புத குசாவதி நகரம் பண்ணி*
*மந்தன் குசனுமதைக் கொண்டானே - லவன்*
*மகிழ்ந்துசி ராவதிநகர் கண்டானே சாமி.* (கேளும்)

4. *அவர்களந்த நகரை யாளுருரே - சாமி*
*அனுகம னத்திற்சென்ம மீளு ருரே*
*திவிய பரமபதம் போகவென்றே - உம்மை*
*சீக்கிர மாகஅய்யன் வருகவென் ருர்சாமி.* (கேளும்)

## இலக்குவன் விண்ணுலகஞ்சென்ற செய்தியையும், இராமபிரான் சுவர்க்கஞ் செல்ல நிச்சயித்ததையும் கேட்டு, சத்ருக்னன் வருந்துதல்; மந்திரிகள், சான்ருேர் முதலானேரை யழைத்து ஆலோசித்தல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

*இந்தமொழி வந்ததூ துவருஞ் சொல்ல*
*ஏங்கிமுகம் வாடிமனம் தளர்ந்து பின்னும்*
*அந்தணரோ டமைச்சர்களை வரவ ழைத்து*
*அவயர்களே யெனக்குவந்த விபத்தைக் கேளும்*
*எந்தனண்ண னுகுமிலக் குமனும் போன*
*னெல்லோரும் போவதல்லால் வேறென் றில்லை*
*மந்திரியரே யினியென்ன செய்வோ மென்று*
*மகித்திட்டான் மனந்தெளிந்து கதித்திட் டானே.*

## சத்ருக்னன் தன் ராச்சியத்தை இருகூருக்கிப் புதல்வர்கட்கு அளித்தல்; தான் அயோத்தி மீளல்
## சுக்கிரீவ விபீடணருடன் இராமன் சில கூறல்

**கல்யாணி ராகம்]** [சாபு தாளம்

1. *அக்கணமே மைந்தர்களையும் வரவ ழைத்து*
*அபிஷேக முடியது சூட்டினன்*
*மிக்கபல வானன சுபாகுவாலே மதுரை*
*விளங்கட்டு மென்றுபுகழ் நாட்டினன்.*

2. சத்துரு காதிக்குவை நிசமுங் கொடுத்து
தாழ்ச்சியில் லாமல்ஆண்டு வாவென்ருன்
ந[க்க]வீர முள்ளதன் படையைரண்டு பங்காக்கி
சுதர்களுக்கே கொடுத்து நின்ருன்.

3. நின்றவன் றனங்களை ரெண்டுகூ ருக்கியே
நேமமுடன்றன் குமாரர்க்கே கொடுத்தான்
அன்றக்கண மேஅவர்களை யேயனுப்பிக் கொண்டு
அயோத்திவரத் தேரேறி விடுத்தான்.

4. அதிவேக முடன்ரு ஞெருத்தனு மாய்வந்து
அய்யன டியில்பணிந் தானே
சுதர்க ளிரண்டுபேருக் கபிடேகம் பண்ணி
சுவாமியுன்பின் போகவந் தேனே.

5. ஆசைகொண்டு வந்தேனே வேருென்றுஞ் சொல்லா
அய்யனே நான்மிக நொந்தேனே [தேயும்
தேசு பெற்றஉமை ஆராகிலுங் கலைத்தாலுந்
திரும்பாதே யும்பொருந் தேனே.

6. இந்தப்படி சொன்ன தம்பி நிச்சயங்கண்டு
இரகுபதி நல்லதென் ருரே
அந்த விடத்திருந்த அரக்கரும் வானவரும்
அய்யன்சமீ பத்திற்சென் ருரே.

7. வணங்கி யெழுந்துவுந்தன் அனுகம னத்திலாசை
வைத்திருக் கிருேமெங்கள் சாமி
கணங்களான யெங்களை விட்டு ஒருவனுக
கடந்துபோக லாமோசொல் நேமி.

8. இதைவிட யெமதண்டனை யிருக்குதோ வென்று
இரகுபதி யுடன்சொன் ஞரே
அதிசீக்கிர மாகவே சுக்கிரீவனும் பணிந்து
அய்யனேயென் ராசமன் ஞரே.

9. அங்கதனுக் கபிஷேகம் பண்ணிவைத் துஉந்தன்
அனுகம னத்துக்குவந் தேனே
துங்க ராக்கதரும் வானரரும் புகழ்ச்சிச்சொல்ல
தூயவ னதையுவந் தானே.

10. உவந்தும னேக்கியமாயும் ரமணியமா யிருக்கும்
உரையைவீட ணனுக்குச் சொல்லுவாரே
பவந்தன்னை யொழிக்க வேபல நாளுந்
தவஞ்செய்தீர் பாபங்களை வெல்வீரே.

11. என்பேரும் லோகங்களு மிருக்குமட்டு மிலங்கையில்
இருந்தர சாளுந் தீரா
நன்மையாக வேநானும் நீயு மிருந்ததாலே
நாடியுன் னுடன்சொன்னேன் சூரா.

12. எதிர்த்துவொன் றுஞ் சொல்லாதே யிருநீஇப் படியென்று
என்னப்பன் அனுமனை நோக்கி
மதித்து யென்கதை லோகத்திலே யிருக்கும்வரைக்கும்
மண்டலத் திருஞானந் தேக்கி ;

13. சாம்புவ னையும்மைந் துவிதனை யும்பார்த்து
சாமி யிருக்கச்சொன்னர் தாமே
பாம்பணை யானுமிந்த அய்ந்துபே ரைப்புவியில்
பரிவுடன்வைத் துப்பின்சொல் வானே.

## தம்முடன் வர விரும்புபவர்களுக்கு இராமன் அநுமதியளித்தல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

எந்தனுடன் நம்பிவர இச்சை கொண்டோ
ரெல்லோரும் வரலாமென் றய்யன் சொல்லி
யந்தராத் திரிகடத்தி மற்ற நாளில்
வசிட்டர்தமை வரவழைத்துச் சொல்வா ரய்யன்
முந்தவே அக்கினியோத் திரம் போ.......மே
முன்செய்த வாசபேய மதிலுண் டான
அந்தவெள் ளைக்குடைதலைகா ணியைய னுப்பும் [?]
அய்யாநீர் வசிட்டரென்று அய்யன் சொன்னர்.

## வசிட்டர், இராமன் சுவர்க்கம் செல்லுதற்கு வேண்டியவற்றைச் செய்தல்; இராமன் பலர் பின்தொடரச் சரயு நதிக்கரை யடைதல்; அமரர் இராமபிரானுக்குக் கட்டியங் கூறல்

### எச்சரிக்கை : தரு

1. மன்னனிந்தப் படிக்கூற
   மாமுனி வசிட்டரதைக் கண்டு - வெகு
   உன்னித மான வேதமாம்
   வேதங்களை வோதினாரே விண்டு.

2. பயணத்துக் காய்ச்சகலம்
   பண்ணிவைத் துப்பின்னும் - வெகு
   நயமாய் அக்கினி ஹோத்தி ராதியை
   நடத்திவைத் தார்முன்னே.

3. இன்பமுடன் வெள்ளைப்பட்டை
   யிடுப்பிலய்யன் உடுத்தார் - வெகு
   தென்பாய்மெய்ஞ் ஞானத்தை யெண்ணி
   தர்ப்பையைக் கையில் எடுத்தார்

4. எடுத்து யின்பதுன்ப மான
   இரண்டுங் தே..............ாரே - ஒருவ
   ரிடத்தி லொன்றுஞ்சொல் லாமலே
   இருந்து வலுத்தாரே.

5. சொலிக்கின்ற சூரியனும் போலவே
   சொக்கிர கம்விட்டு நடந்தார் - அய்யன்
   வலுத்தசவ் வியபாரி சத்தில்
   வந்து சானகிதேவி படர்ந்தார்.

6. தெக்குப் பாரிசத்தில் ஸ்ரீ
   தேவி வரத் தானே - பின்னும்
   மிக்க பலமுள்ள நானு
   விதபா..........னஞ்சொல் வேனே.

7. வைத்திருந்த வில்லு மெல்லாம்
   மானிட வேடந் தரித்துக் - கொண்டு
   மெத்த வீரனும் ராமனை
   மேவி யனுச ரித்து;

8. நடந்தன வேதே வர்களும்
நலமாஞ்ச வித்திரியு மய்யன்
இடம்லங் காரம்விட் டாங்காரம்
பின்னேசெல் காயத் திரியும் ;

9. பால் ரோடுவி ருத்தரும்
பட்டணம் விட்டெழுந்தார் - பின்
சீல முனிவர்களும் வேதரும்
ஸ்ரீ தர னேத்தொ டர்ந்தார்.

10. அந்தப்புர வாசி சனம்
அனேவோர்க ளுந்தொடர்ந்தார் - ராமன்
இந்தச் சனத்துடன் றம்பிய
ரிருவ ருடன்ந டந்தார்.

11. ராமன்பின் னேவெகு சனங்கள்
நாடிந டந்தார்க ளே - வெகு
பாமரம் பட்சி மிருகம்
பரவித் தொடர்ந்தனவே.

12. முந்த யானேயெறும் புக்கடை
முதலாம் பிராணிகளுமே - வெகு
சந்தோஷமா யய்யனிடந்
தாவி நடந்தனவே.

13. இவர்களுடன்........ரை யோசனே
யெழும்பி நடந்தாரே - வெகு
திவிய மான சரயுநதி
சென்று படர்ந்தாரே.

14. இந்த வித மய்யன் வர
விமையோ ரடுத்தாரே - அங்கே
முந்த அய்யன் எச்சரிக்கை
மொழிய நாடினர் தேவரே.

15. ராமா புசபீமா பரந்தாமா
யெச்சரிக்கை - சனகி
வாமா வெகுநாமா சார்வ
பூமா யெச்சரிக்கை.

16. தூயா அப்ர மேயர் யோகக்
ராயா யெச்சரிக்கை - அருள்
தா(ர)யா வெகுமாயா கனி
வாயா யெச்சரிக்கை.

17. ..................................யெம்பிரானே
ஸ்ரீமானே எச்சரிக்கை - எங்கள்
..........................கோனே
நான்நம்பி னேனே - எச்சரிக்கை.

18. சீலா கனலோலா யசோதை
பாலா - எச்சரிக்கை - அரக்கர்
காலா தேவர் பாலா-வனு
கூலாவெகு கோலாகலா யெச்சரிக்கை.

## இராமபிரானைப் பழைய வண்ணமே பரமபத நாதனின் திருவடிவத்துடன் விளங்குமாறு பிரமன் முதலான தேவர் வேண்டல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

இந்தவித மாகாச வாக்க தாக
யெச்சரிக்கை ராமனைப்பார்த் திவகை சொல்லி
யுந்தனுக்கு மங்களம நேகந் தாமே
உண்டாகப் போகிறது தெய்வா தீனம்
வந்தநீர் விஷ்ணுதே கத்தைக் கொண்டு
வரிசையாய்ப் பிராணிகளைக் காரு மென்று
சிந்தைமகிழ்ந் தேபிரமன் துதிகள் சொல்லத்
தேறுவா னிவ்வகையாய்க் கூறு வானே.

### பிரமன் கூற்று : தொடர்ச்சி

**காம்போதி ராகம்]** [**ஆதி தாளம்**

**பல்லவி**

தேவ தேவ மகா ராசனே - புன்சொல்
ஆவலுடனே கேள் ஸ்ரீநி வாசனே.

**அநுபல்லவி**

பாவியாமி ராவணனைப் படையோடும் வென்றீரே
மூவர்க்கும் முதலான மூர்த்தி ராகவா நீரே (தேவ)

சரணங்கள்

1. பஞ்ச பூதங்களும் பஞ்சஇந் திரியங்களும்
பஞ்சப் பிராணனும் நீரே - பரராமா
பஞ்சமி சகிதப் பிரபஞ்சா தீதனே
பார்மக ளுடன் ஸ்ரீமகள் வாமா
தஞ்சமென்ற தேவரை ரட்சிக்கும் பொருட்டாகத்
தரணியில் வந்த ரவிகுல சோமா
பஞ்சக்க ரர்க்கும்மே லாம்பர பிரமமென் றும்மைப்
பகரவில் லையோவெகு நாமா துய்ய (தேவ)

2. சகலலோ கங்களிலு மிருக்கின்ற பிராணிக்குள்ளே
தாரே மிக்கிறீர் மகானே
விகிதமா நீரிருக்கை மால்பேரி ராமனென்று
வேதஞ் சொல்லுதே ஸ்ரீமானே
பகவனே மாயை உமக்குமுந்தின ஸ்ரீயென்று
பகர்வதில்லையா யெங்கள் கோனே
அகரமுத லெழுத்துக்கெல்லா மாதியும் நீரே
அரியே உம்மை யறிந்திலனே துய்ய (தேவ)

3. பரனே உம்முடைப் பாதபங் கயங்களிற்
பத்திபண்ண வில்லையா யெனதய்ய
உரமதில் மாவைவைத்து சங்கங்க தையுங்கட்கம்
உடனே சார்ங்கஞ்சக்ரம் வைத்த கைய
வரதனே யொருவராலு மறியக் கூடாத
வடிவா முங்கள் தேகங்கொள் மெய்யா
விரவுடனே தேகத்தைக் கொண்டும் நீரு
மிங்கனே மேவ வேணுமே துய்ய. (தேவ)

## இராமபிரான் தம்பியருடன் பழைய திருமேனிகொண்டு விளங்கல்; தேவர், முனிவர் முதலானவர் வாழ்த்தி வணங்குதல்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

அயனிந்தப் படிகூற மகிழ்ந்து ராமன்
அற்புதத்தம் பியருடன்முன் றேகங் கொண்டா
சயமான விண்டுவுடைத் தேகங் கண்டு
சூழ்ந்ததிக்குப் பாலருந்தே வர்களு மின்னும்

நயமாங்கம் தருவருங்கின் னரரும் யட்சர்
நன்முனிவ ரிவர்களெல்லாம் பூசை செய்தே
வியமுடனே சந்தோஷங் கொண்டிருந்தார்
விண்டுத(ா)ன் னுடனயனைக் கண்டு தானே.

## இராமபிரானுடன் வந்தவர் சாந்தானிலோகஞ் செல்லுமாறு பிரமன் கூறல்

### இதுவுமது

இந்தசென்ம மெமைப்பிரியா பிறகே வந்தார்
இன்பமுளோ ரிவர்களெல்லோ ருக்குந் தானே
முந்தனீ...........தைக் கொடு...........ன்று
மொழிந்ததுகண் டவரைப்பார்த் தயனுஞ் சொல்வார்
வந்தவிவர் சாந்தானி லோகந் தன்னில்
வரிசையா யெல்லோரும் வரலா மென்றன்
அந்தவுரை கண்டஅரி சொல்லத் தானே
அறிகுவார் தனித்தனியாய்ப் பிரிகு வாரே.

## இராமபிரானுடன் சென்றவர், பரமபதங் காணுதல்

**கல்யாணி ராகம்]** **[சாபு தாளம்**

### பல்லவி

பரமபதங் கண்டாரே-சாந்தா ரணியத்தி
னுறவே யீசரைக்கொண் டாரே.

### அநுபல்லவி

நரர்க ளுடனேவா னரர்களும் நதியிலே
விரைவுடன் மூழ்கவே விமானம்வர அதிலே (பரமபதங்)

### சரணங்கள்

1. நாலுவர்ண சாதியும் பட்சி மிருகங்கள்
தானே அய்யனே ஓதியும்
மானறிக் குடன்திவ்விய மானம திலேயேத்த
வானவர் களும்வந்து மகிழ்ந்துஅவ ரைப்போற்ற
(பரமபதங்)

2. சுக்கிரீவ னுந்தானே மிக்கவே சேர்ந்தானே
தக்கதி லம்அக்கினி தன்னிடம் போகப்பின்னும்
பக்கவா னரர்களும் பலதேவர் நரர்முன்னும் (பரமபதங்)

3. ராகவா வென்றாரே - யெல்லோருந் - திவ்விய
தேகத்தைக் கொண்டாரே
நாகந்தே வர்களாகி நானுவித மாய்ச்சென்றார்
தாகமா யயல்பிராணி சாந்தானி லோகங்கண்டார்.
(பரமபதங்)

## ஸ்ரீராமபிரானுடன் வந்தவர் சாந்தானி லோகம் செல்லல்; வானரர் தேவராதல்; இராமபிரான் அனைவருந் துதிக்க வைகுந்தத்தில் சேடசயனனாக விருத்தல்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

வந்தவர்கள் சாந்தானி லோகஞ் சென்றார்
வானரர்கள் பழையபடி கடவு ளானார்
அந்தநிமி டந்தனிலே விமானந் தன்மேல்
அரியிருக்க வயன்முதலாந் தேவர் கண்டு
சிந்தைமகிழ்ந் தேஅவர்கள் துதிகள் செய்யத்
தேவருடன் வைகுந்த மதிலே சென்று
விந்தைமிகும் துயர்ந்தனந்த சயனந் தன்னில்
விதித்திட்டார்ப் பிராணிகளைக் காத்திட் டாரே.

## இறைவன் ஆதிசேடன்மீது சயனித்து அறிதுயில் கொள்ளல்

**பூரிகல்யாணி ராகம்]** **[........ தாளம்**

**பல்லவி**

யோக நித்திரை நண்ணினார் - பிராணிகளை
வேகமாய்க் காக்க வெண்ணினார்.

**அநுபல்லவி**

ஆகம் பூரித்துப் பெண்க ளங்கையில் தீபங்கொண்டார்
தாகமாய் வந்தரியும் நாகரீ கமதான (யோக)

சரணங்கள்

1. முத்தர்கள் துதித்தேத்த - தேவர்களும்
மொய்மல ரவைதூற்ற - உடனே
சித்தர்கள் அடிபோற்ற - நாரதாதிகள்
திவ்வியபா மாலை சாற்ற
சிந்தை மகிழ்ந்து அய்யன் தண்டம் பண்ணரி யெழுந்து
அந்த மானதுதியை அயன்சொல்ல வேஉவந்து
(யோக)

2. பூமகள் கால்பிடிக்க - அவளுடன்
பார்மகள் பதம்பிடிக்க - அனந்த
சாமி குடைபோல் பிடிக்க
மீட்டுநீளைமாது தோள்பிடிக்க
மாலறிந் தவர்களை மருவியி டைவிடாமல்
கோலாகல மாகவே கூடிம கிழ்ந்துமே (யோக)

3. மாமுனிவர் மறைகளும் பாட - அரம்பையர்
மகிழ்ந்து பரதநாட்டிய மாட - அங்கே
காம னுவந்து நாட அவனுடைக்
கையால் பூமலர் போட
கருத்துட னேசன காதியர் துதிசெய்ய
பருத்த அனந்தன்மேல் பள்ளிகொள் ளும்பரமன்.
(யோக)

## அறிதுயிலமர்ந்த எம்பெருமானின் தோற்றமும் செயலும்

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

இந்தவிதம் யோகநித்தி ரையை யெண்ணும்
எம்பெருமான் பிராணிகளைக் காக்கத் தானே
நந்தகதை முதற்பஞ்சா யுதத்தைக் கொண்டு
நல்லகவுத் துவமணிஆ பரணம் பூண்டு
முந்திடையில் பீதாம்ப ரந்த ரித்து
மூவுலகோ டெவ்வுலகுங் காப்பே னென்று
எந்தனுடை யெம்பிரா னிவகை சொல்லி
யெண்ணுவா ரவதாரம் பண்ணு வாரே.

## இராமகாதையின் பெருமையை வான்மீகர் பின்வருமாறு கூறியுள்ளார் எனல்

### இதுவுமது

இதுவரையி லுத்தரகா வியம தென்று
இன்பமுள வால்மீகி முனிவ ராலே
பதிவாகச் சாகித்தியம் பண்ணி வைத்த
பிரபந்தமதை யயன்முதலோர் பூசித் தாருன்
னதமான வரியினுடை யவிர்பா வத்தை
நிச்சித்துப் பத்தியுடன் படித்த பேர்க்கு
மதிமானும் வால்மீகர் பலங்கள் சொல்லி
வருகுவார் சகலபலந் தருகு வாரே.

## இராகவன் சரிதையைப் பயின்றவர் கேட்டவர் ஆகியோர்க்கு வால்மீகி முனிவர் கூறும் பலன்கள்

**பைரவி ராகம்]** **[ஆதி தாளம்**

### பல்லவி

பலத்த ராகவன்றன் கதையி னுடைய
திவ்விய பலங்கள் சொல்வார் - வால்மீகி முனியே.

### அநுபல்லவி

நலத்தைக்கொ டுக்கின்ற ராமக தையைநித்தம்
படிக்கும்பிரம் மாதிதேவர் பலங்கள்கண் டாரேமெத்த
(பலத்த)

### சரணங்கள்

1. இந்தப் புவியிலுள்ள வேதர்களும் - இன்னும்
இருக்கு மநேகவித போதர்களும்
விந்தையா யிக்கதையைச் சொன்னோர்களும் - திவ்விய
விஷ்ணுகீர்த்தி யடைவார் மன்னர்க ளுமெத்த
(பலத்த)

2. மன்னும் பிராணிகள் பத்தி யுடன்றானே - தினம்
வகையால் படித்தா லவரிடந் தானே
எந்நேரமு மரியிருப்பார் தாமே - அவர்
எண்ணினதைக் கொடுப்பார் திண்ணந்தா னேமெத்த
(பலத்த)

3. அந்தணர்க்கு........டுக் கனக ஆழிசொர்ணம் - பூமி
ஆடையா பரணம் பசுக்க ளன்னம்
இந்தவகை கொடுத்து அவர்சொன்ன கதையை
இதமாகக் கேட்கவெல்லாம் வருந்திண்ணம் மெத்த
(பலத்த)

4. பத்தியுட னேயொரு பதமான லுஞ்சொன்னர்
பப்பாதி யாவது வொருவடி யானலும்
சத்தேவிக் கதையில்லோ ரெழுத்தான லுங்கேட்டார்
சஞ்சலம் போயின்ப மடைவ ரென்றுமுனி
நாவாலுஞ் சொன்னனே மெத்த. (பலத்த)

## இதுவுமது

### எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

இந்தவித மிக்கதையைப் படிப்போர் கேட்போர்
எண்ணினவெல் லாம்பெறுவ ரென்று மின்னும்
விந்தையுள விக்கதையைப் பிரம னின்னும்
................ பதியுடனே யவருந் தாமே
சிந்தைமகிழ்ந் தாதிமுதல் கேட்போர் மெத்த
திரவியமுடன் பெண்டுபிள்ளை யிகத்திற் கொண்டு
அந்தரத்தில் பரமபத மடைவா ரென்று
அறைந்திட்டார் மெய்ஞ்ஞானம் நிறைந்திட் டாரே.

## நூல்செய்தார் கூற்று

### இதுவுமது

இப்படியே வால்மீகர் கிரந்தத் தாலே
இசைந்துசொன்ன சுலோகத்தின் பொருளை யெல்லாங்
கற்பனலங் காரமொடு தமிழி னலே
கனநயதே சிகமதனல் கானம் பண்ண
ஒப்பில்லாக் கீர்த்தனையுந் தருக்க ளாலே
வுரைத்தநந்த கவியினுடைப் பாதந் தன்னை
எப்பொழுதும் மனத்தில்வைத்தஞ் ஞானந் தள்ளி
யேறினேன் கவிசொல்லத் தேறி னேனே.

## உத்தர ராமாயண நாடகம் இரண்டாம்பாகம் முற்றும்.

---

## பிழையுந் திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 11 | 9 | எண்சீராசிரியச் சந்த விருத்தம் | எண்சீராசிரிய விருத்தம் |
| 21 | 32 | இட்சு வரகுல | இட்சு வாகுகுல |
| 25 | 1 | நாகடம் | நாடகம் |

30-ஆம் பக்கத்தில் 9-என்னும் எண்கொண்ட பாடலைப் பின்வருமாறு அமைத்துப் படிக்கவேண்டும் :

9. *அமுதமிக்கது திருவையுற்றது மருள்விளக்கிய கடலே*
*அயிராவ தமுமாவு மதுமேவரு கடலே*
*அமரருக்குறு துயர்விலக்கிய தருதிருத்தகு கடலே*
*அணிமாம தியைவானி வருள்சீர்பெறு கடலே.*

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 68 | 11 | இராமனை | இயமனை |
| 77 | 26 | சேர்த்தல | சேர்த்தல் |
| 116 | 28 | என்பன் | என்பவன் |
| 212 | 22 | யெல்லாமொரு | ரெல்லாமொரு |
| 213 | 17 | புதலவ | புதல்வ |
| 230 | 27 | ச்மான | சமான |
| 294 | 26 | பதிறுயிர | பதினோராயிர |
| 305 | 6 | பணிந்தெற்கு | பணிந்தேற்கு |

